# பொருளடக்கம்

# قَصِيْدَةُ الْبُرْدَةِ

# கஸீதத்துல் புர்தாஹ்.



بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்.

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் (ஆரம்பிக்கின்றோம்).



مَوْلَايَ صَلِّ وَسَلِّمْ دَائِمًا أَبَدًا

عَلَى حَبِيْبِكَ خَيْرِ الْخَلْقِ كُلِّهِمِ



**எனது எஜமானனே! சிருஷ்டிகள் அனைவரினும் சிரேஷ்டரான உனது நேசரின்மீது, சதாவும் சாந்தியையும் சமாதானத்தையும் அருள்வாயாக.**

**நா**ம் எக்காரியத்தைச் செய்யினும், முதன் முதலில் அல்லாஹ்வின் திருப்பெயரையும், அவனது துதியையும் கூரு திருப்பதில்லை. ஏனெனில், "பிஸ்மில்லாஹ்"வைக்கொண்டு

துவக்கப்படாத எக்காரியமும் முற்றுப்பெருதெனவும்,'ஹம்து' 'ஸலவாத்து' கொண்டு ஆரம்பிக்கப்படாத எச் செய்கையும் உருப்பெருதெனவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் கூறப்பட்டுள்ளது. இதைத் தழுவியேதான், முஸ்லிம்கள் எச செய்கையைச் செய்யினும், முதலில் பிஸ்மில்லாஹ்வை ஓதிக் கொள்கின்றனர். இதற்கொப்ப, முஸ்லிம் நூலாசிரியர்கள் தத்தம் நூல்களின் ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ்வையும், ஹம்து, ஸலவாத்தையும் எழுதிக்கொள்வர்.

முற்காலந்தொட்டு எல்லா ஆசிரியர்களாலும் கடைபிடித் தொழுகப்பட்டுவரும் இவ் வழக்கம், முஸ்லிம் சமுகத்தால் மிகவும் போற்றப்பட்டு வருகிற இக்காவியத்தில் அனுசரிக்கப் படவில்லை. எடுத்த எடுப்பிலேயே நூலாசிரியர் விஷயத்தை விளக்கத் துவங்கியிருக்கிருர். இது, முஸ்லிம்களுக்குத் திகைப் பையும், ஆச்சரியத்தையும் உண்டாக்கலாம். அன்றியும், நந் தென்னுட்டில், முஸ்லிம் பொதுமக்களால் ஓதப்பட்டுவரும் "களீதத்துல் வித்ரிய்யா" "மௌலூதுகள்," மற்றைய புகழ்ப் பாக்கள் முதலியவைகள் அனைத்திலும் 'ஹம்து' 'ஸலவாத்து' கொண்ட செய்யுட்கள் ஆரம்பத்திலேயே இருப்பதைக் காண லாம். இம்முறையில் ஓதி வழக்கமான நம்மவர்கட்கு இது இன்னுமதிகப் புதுமையாகவே தோன்றும்.

புலவர்கள் காவியம் – கவிதைகளை இயற்றும் முறைகளை உணர்ந்தோருக்கு இது நூதனமாகத் தோற்ருது; அவர்கள் இதை குறையாகவும் காணமாட்டார்கள். இந் நூலாசிரியர் செய்த காரியமே சரியென்றுங் கூறுவர். ஏனென்ருல், நம் தமிழ்நாட்டிலுள்ள மிகப் பெரிய காவியங்கள் – கவிதைகளை நாம் எடுத்து நோக்கினுல், முதலில் கடவுள் வாழ்த்து, அவையடக்கம் முதலியவற்றை நீக்கிப் பார்க்கும்பொழுது, நாட்டுப்படலம், நகரப்படலம், நாட்டு மக்களின் ஆச்சார வழக்கங்கள் முதலியவற்றைக் கூறியபின்தான் விஷய விளக் கத்தைக் கூறுவர். இது, புராணங்களுக்குள்ள முறையும் நம் நாட்டு வழக்கமுமாகும்.

'அரப்நாடு' போன்றவைகளில் இத்தகைய வழக்கமில்லை. அவண், யாரைப்பற்றியேனும் காவியங்களை இயற்றுபவர்கள், ஆரம்பமாக தங்களின் பழங்கால சிநேகிதர்களையோ, அவர்கள் வசித்த இல்லங்களையோ, இடங்களையோ பிரஸ்தாபிப்பதுடன், தங்களைவிட்டு அவர்கள் பிரிந்தமையால் ஏற்பட்டுள்ள சோகங்களையும் மிக அழகியமுறையில் கூறுவர். அப்பால், யாரைக்குறித்து கவிபுனைய நினைத்திருக்கின்றனரோ, அவரை அச்சம்பவத்துடன் இணைத்து விஷயங்களைக் கூறுவர். இதுதான் அரப் நாட்டு வழக்கம். முந்தைய காலத்திருந்த மாபெரும் வித்துவ சிரோன்மணிகள், இம்முறையை அனுசரித்தே காவியங்கள் இயற்றியிருப்பதால், இதே முறையில் எழுதப்படும் கவிதைகளைத்தான் அரபு நாட்டு மக்கள் விரும்புவர். எனினும் இப்பொழுது இவ்வழக்கம் சிறிது சிறிதாகக் கைவிடப்படுகிறது.

அரபிப் பாஷையை நன்கு கற்றுணர்ந்த அயல்நாட்டுப் புலவர்கள், தங்களது காவியங்களில் பெரும்பாலும் இவ்வழக்கத்தை அனுசரிப்பதில்லை. தம் நாட்டு வழக்கத்தைத் தழுவியே அரபிக்கவிகளை இயற்றுகின்றனர். இப் புது முறையை இப்பொழுதுள்ள அரபியர்கள், கண்டிப்பதோ, வெறுப்பதோ கிடையாதெனினும், இதனை விருப்புடன் நோக்குவதும் கிடையாது.

நமக்கு இக்காவிய ஆசிரியர் இற்றைக்கு பல நூற்றுண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவராகையால், அப்பழைய வழக்கத்தை ஆதாரமாகக்கொண்டே. "பிஸ்மில்லாஹ்" "ஹம்து" "ஸலவாத்," முதலியவற்றைக்கொண்டு தொடங்காமல், தனது பிரிவாற்றாமையைப்பற்றி பிரஸ்தாபித்துத் தன் சோக ரசத்தை வெளிப்படுத்திக் கூறியுள்ளார். எனவே, அவர் தொடங்கியுள்ள ஆரம்ப முறையை, அரப் நாட்டு வித்துவ உலகு வெகுவாக அங்கீகரித்திருக்கிறதெனலாம்.

இந் நூலாசிரியர், இவ்வாறு ஆரம்பித்ததற்காக குறை

# பொருளடக்கம்



கூறுவதற்குமில்லை. ஏனெனில், இஸ்லாத்தின் தர்மப்படியும் முன்னர் பிரஸ்தாபிக்கப்பட்ட நாயக வாக்குகளின்படியும் இவர் தவறிழைத்தாராவென்றால் அதுவும் சொல்வதற்கில்லை. ஏனெனில், ஹதீதில் கூறப்பட்ட விஷயம் அல்லாஹ்வின் திருநாமம் கொண்டும், அவனது புகழ்கொண்டும் ஆரம்பிக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறதேயன்றி, அவ்வாறு எழுதவும் வேண்டுமென்றும், செய்யுளாக இயற்றவும் வேண்டுமென்றும் கூறப்படவில்லை. ஆகையால், இந்நூலாசிரியர் தன் காவியத்தை இயற்றத் தொடங்கும்போது, இவ்விரண்டையும் நாவாலுரைத்திருக்கலாம். ஆனால், நாட்டு வழக்கத்தையனுசரித்து அவற்றைச் செய்யுளிலும் இணைத்து இயற்றவில்லையென எண்ண இடமிருக்கிறது.

ஆகவே, இக்காலத்தில் வாழ்கின்ற நாம் மேற்கண்ட ஹதீதுகளை யனுசரித்து, இக்காவியத்தை ஓதத்தொடங்கும் பொழுது, முதன்முதலில் 'பிஸ்மில்லாஹ்வை'யும், ஹம்து, ஸலவாத்தையும் கவிதை முறையிலோ, வசன நடையிலோ இணைத்துச் சொல்லிக்கொள்ளவேண்டும். இதை உத்தேசித்துத்தான் நம்மவர்கள் தலைப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும் செய்யுளை – கவியை பிற்காலத்தில் இணைத்திருக்கின்றனர்.



أَمِنْ تَذَكُّرِ جِيرَانٍ بِذِي سَلَمِ
مَزَجْتَ دَمْعًا جَرَى مِنْ مُقْلَةٍ بِدَمِ



# 1-வது பாட்டு (பைத்து)

'தீ ஸலமெனும் ஸ்தலத்தின் அயலகத்தாரை நினைத்ததினாலா நேத்திரத்திலிருந்து ஓடும் கண்ணீரை உதிரத்தால் கலந்தாய்? (அதாவது: இரத்தக்கண்ணீர் வடிக்கின்றாய்!)

இதுவேதான், 'புர்தாஹ்' ஷரீபின் முதற் கவியாகும். இதன் ஆசிரியப் பெரியார் தமது காவியத்தின் ஆரம்பத்தைச் சம்பாஷணை ரூபத்தில் ஆரம்பிக்கிறார். இரு சிநேகிதர்களில் ஒருவர் மிகவும் துக்கித்து அழுவது போன்றும் அவரது அழுகை அதிகரித்ததால், அவரது கண்ணீருடன் உதிரமும் சிறிது கலந்து ஓடுவது போன்றும், இதனைக்கண்ணுற்ற மற்ற சிநேகிதர் "ஏன் இவ்வாறு அழுகின்றீர்? இவ்வழுகைக்குரிய காரணம் யாது?" என்ற வினாவிற்கு அவரே விடையுமளித்து நண்பரின் அழுகைக்குரிய காரணத்தைத் தாமே உணர்ந்து கொண்டு நண்பரின் காதலை மறைத்து வைப்பதில் உபயோகமில்லை யென்றும், அதைத் தாம் அறிந்துகொண்டுவிட்டது போன்றும் பேசுகிறார். பின்னர் அவ்வழுகைக்காரர் தம் சிநேகிதர், தன்னிலையை குறிப்பாலறிந்து கொண்டுவிட்டதை ஏற்றுக்கொண்டு தமக்கு எவர்மீது காதல் தோன்றியுள்ளது? தம்மால் காதலிக்கப்பட்டவரின் இலக்ஷணங்கள் யாவை?

அவரது உயரிய பெருமைகள் யாவை? என்ற விபரங்களைத் தமது சிநேகிதர்பால் ஒளிவு மறைவில்லாமல் ஒப்புவிக்கிருர்.

ஆகவே, இது இரு நண்பர்களது சம்பாஷணை ரூபத்தில் இயற்றப்பட்டுள்ள காவியமாகும்.

அல்லது இந் நூலாசிரியர், தன் ஆன்மாவுடன் சம்பாஷிக்கிருரெனவும் கொள்ளலாம். எவ்வாருயினும், சம்பாஷணை ரூபத்தில் இயற்றப்பட்ட காவியமென்பதில் ஐயமில்லை. இம் முறையில், இயற்றப்பட்ட காவியங்களும், வசனங்களும் செய்யுட்களும் மற்றையோருக்கு விஷயத்தை விளக்கி நன்கு உணர்த்துவதற்கு ஏற்ற வழி என்பதை சகல நாட்டவரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். நம்நாட்டு ஞானிகளுங்கூட ஞான நுணுக்கங்களை குரு, சிஷ்யன் ஆகிய இருவரும் சம்பாஷிக்கும் ரூபத்திலோ அல்லது கணவன் மனைவி உரையாடும் முறையிலோ, வினு, விடை ரூபத்தில் பாடியிருப்பது வாசகர்கள் அறிந்த உண்மையாகும்.

தமிழ் இலக்கணத்திலும்கூட இம்முறைக்கு "வசனம் வினவல்" எனப் பெயர் சூட்டப்படுகிறது.

மனிதர்களுக்கு சந்தோஷமோ, சலிப்போ அளவுக்குமீறி ஏற்படுங்கால், அவர்களது கண்கள் கண்ணீர் உகுத்துவது இயற்கையாகும். ஆனல், சந்தோஷத்தால் மனங்குளிர்வது போன்று யாவும் குளிர்ந்துவிடும். ஆகவே சந்தோஷத்தாலேற்படும் கண்ணீர், குளிர்ச்சியானதாயும், சலிப்பால் - துக்கத்தால் ஏற்படும் கண்ணீர் வெதும்பியதாயுமிருக்கும். ஒருவருக்குத் துக்கம் மேலிட்டால், அவரது ஸ்தூலத்தின் இயற்கைச் சூடு அதிகரித்து, அதன் ஆவி மூளையைத்தாக்கி, அதனல் ஏற்பட்ட உஷ்ண நீர், நேத்திரங்களின் வழியாக வெளிவருகிறது. ஆனல் இவ் உஷ்ணம் அளவுக்கு மீறிவிட்டால் வரட்சியுண்டாகி உதிரமும் கண்ணீருடன் கலந்து வெளிவரத் தலைப்படும். இவ்வாறு உதிரம் கலந்துவரும் கண்ணீருக்கு

இந்நாட்டு மக்கள் "இரத்தக்கண்ணீர்" எனக் கூறுவர். இத்தகைய கண்ணீர் அளவற்ற விசனத்தையும், சஞ்சலத்தையும் அறிவிக்கிறது என்பதுதான் இச்செய்யுளாரின் முக்கிய கருத்து. ஆகையால்தான், 'கண்ணீரை உதிரத்தால் கலத்தாய்' என வினவுகிறார்.

"தீ ஸலம்" என்பது திருமக்காவுக்கும், திருமதீனாவிற்குமிடையிலுள்ள ஒரு ஸ்தலத்தின் பெயராகும். இவ்விஸ்தலத்தின் "அயலகத்தார்" என்பது நபிகள் பெருமான் (ஸல்) அவர்களையும், அவர்களது நேயர்களான 'ஸஹாபி'களையும் குறிக்கிறது.



ام هبت الريح من تلقاء كاظمة
او اومض البرق في الظلماء من اضم



## 2-வது பாட்டு.

அல்லது "காளிமா"வெனும் திசையிலிருந்த காற்று வீசிற்று? அன்றி, "இழம்" எனுமிஸ்தலத்திலிருந்து இருளில் மின்வெட்டி ஒளியிலங்கிற்று? (அதனால் நீர் அழுகின்றீர்)

காற்று வீசுவதால்தான் நறுமணம், துர்வாடை முதலியவற்றை மனிதன் நுகரமுடிகிறது. ஒரு திசையிலிருந்து காற்று வீசினால், அத்திசையிலிருக்கின்ற வஸ்துக்களைக் குறித்துப்

பொதுவாகத் தெரிந்துகொள்ள சர்வ ஜீவராசிகளாலும் இய லும். மனிதர்கள் மட்டுமின்றி மற்றைய பிராணிகளும், பறவை யினங்களும் ஊர்வனங்களுங்கூட உணர்ந்துகொள்கின்றன.

இருளடர்ந்த இரவில் மின்வெட்டி ஒளியிலங்குவதால் மனிதன் வழியறிந்து தனது ஸ்தலம் செல்வதும், தூரத்தே யுள்ள வஸ்துக்களை நோக்கிக்கொள்வதும் வழக்கம். அன்றி யும் மனிதன், தன் அறிவைப் பெருக்கிக்கொள்ள காற்று வீசு வதும், மின்வெட்டுவதுங்கூட உதவியாக இருக்கின்றன.

ஆகையால்தான் "காளிமா"வெனும் திசையிலிருந்து காற்று வீசிற்று? அல்லது "இழம்" எனும் ஸ்தலத்திலிருந்து இருளில் மின்வெட்டி ஒளியிலங்கிற்று? இதன்மூலம் உமது காதலரின் சின்னங்களைத் தெரிந்து கண்ணீர் வடிக்கின்றீரா? வென இச்செய்யுளில் வினவப்படுகிறது.

"காளிமா" என்பது திரு மதீனாவின் அருகிலுள்ள ஒரு ஸ்தலப் பெயர். 'இழம்' என்பது அங்குள்ள ஒரு மலையின் பெயர். எனவே, திருமதீனாவில் வாழும் புண்ணியவான்களின் மணத்தை நுகர்ந்ததினாலா, அன்றி அதனை வெகு தொலை விலிருந்து கண்ணுற்றதினாலா நீர் வருந்தியழுகின்றீர்? என்பதாக இச்செய்யுளார் வினவுகிறார்.

فَمَا لِعَيْنَيْكَ إِنْ قُلْتَ اكْفُفَا هَمَتَا
وَمَا لِقَلْبِكَ إِنْ قُلْتَ اسْتَفِقْ يَهِمِ

# 3-வது பாட்டு.

**எனவே, உன்னிரு நேத்திரங்களுக்கும் நேர்ந்த தென்ன? "நீங்கள், (அழுவதை) நிறுத்திக் கொள்ளுங்கள்" என நீ கூறின், அவை கண்ணீரைக் கொட்டுகின்றனவே! உனது இதயத்திற்கும் என்ன நேர்ந்தது? "(மனத்)தெளிவுபெறு" என நீ கூறின், அது நிலைகுலைகிறதே?**

1, 2 கவிதைகளில் கூறப்பட்ட வினாக்களுக்கு விடையளிக்கப்படவில்லை. மனவேதனையையும், பிரிவாற்றாமையையும் சகிக்கமுடியாத அந்நண்பர், தன் வினாக்களுக்குத் தக்க விடைகள் கொடுக்காமல் தனது உள்ளக்கிடக்கையை மறைத்து வைப்பதைக் குறித்து, அவ்வினா விளம்பியே திரும்பவும் தம் நண்பரை நோக்கி, தான் கூறுவதுபோன்று உமக்கு அக்காதல் இல்லையெனின் நீர் அழாமலன்றோ இருத்தல் வேண்டும்? அங்ஙனமின்றி அழுகையை நிறுத்துமென்றால், அதிகமாகவன்றோ அழுகிறீர்! உமது கண்களிலிருந்து கண்ணீர் வராமலிருக்க நீர் எவ்வளவுதான் முயன்றபோதிலும், அவை உமக்குக் கட்டுப்படாமல், இன்னுமதிகமாகவன்றோ கண்ணீரைக் கொட்டுகின்றன?"

"கண்கள்தான் இப்படியென்றால், உமது இதயத்திற்கு என்ன நேர்ந்தது? கவலையற்றவராக உம்மை நீர் காட்டிக்கொள்ள எவ்வளவுதான் முயன்றபோதிலும், உமது இதயம் திடங்கொள்ளாமல், திகைத்து நிலைகுலைந்திருப்பதைக் காட்டிவிடுகிறதே! "அகத்தினழகு முகத்தில் தெரியு"மென்றபடி உமது மனத்துள்ளிருக்கிற துக்கமும், கவலையும், அமைதியின்மையும் உமது முகக் குறியால் நன்கு வெளியாகின்றனவே!" எனத் தம் நண்பரை மறுபடியும் வினவுகிறார்.

أَيَحْسَبُ الصَّبُّ أَنَّ الْحُبَّ مُنْكَتِمٌ
مَا بَيْنَ مُنْسَجِمٍ مِنْهُ وَمُضْطَرِمِ

## 4-வது பாட்டு.

தளிர் விட்டெரியும் நெருப்பு (போன்ற இதயத்தின்) மத்தியிலும், கண்ணீரைக் கொட்டுகின்றவற்றின் (கண்களின்) மத்தியிலும் மெய்யாகவே, காதல் மறைந்துவிட்டதெனக் காதலன், கருதுகின்ருனு?

நிச்சயமாக, காதல் மிகைத்தவன், தன்னுல் காதலிக்கப் பட்ட பொருளை தான் அடையும் வரை அதே சிந்தனையி லேயே இருப்பான். அவனது நேத்திரங்கள் கண்ணீரை உகுத்துக் கொண்டேயிருக்கும். எனவே, ஒரு வஸ்துவை அளவறிந்து சிறிது சிறிதாக வூற்றுவதற்கும் அளவுக்குமீறி தலைகீழாகக் கவிழ்ந்துக்கொட்டுவதற்கும் வித்தியாசமுண்டு. இங்கு கூறப்படும் கதாநாயகக் காதலன் தன் கோரிக்கை நிறைவேருத கவலையால், கண்ணீரை அளவுகடந்து கொட் டிக்கொண்டிருக்கிருன். ஆகையால்தான் "அதிகமாகக் கண்ணீரை வடிக்கும் காதலன்" என்ற கருத்தைக்கொள்ளும் 'ஸப்பு' என்ற பதத்தைச் செய்யுளார் பிரயோகித்துள்ளார்.

ஆகவே, நேத்திரங்களினுள்ளும், இதயத்துள்ளும் காதல் மறைந்துவிடுமென இவர் கருதுகின்ருரா? அப்படி ஒருபோ தும் மறைந்துவிடாது. புதைந்து கிடக்கும் காதலைக் கண்

களும் இதயமும் வெளிப்படுத்தக்கூடியவையேயன்றி மறைப் பவைகளன்று என்பதை இவ்வாசிரியப் பெரியார் வலியுறுத் திக் கூறுகின்றார்.

மேலும், தனது வினாவிற்கு இன்னமும் அக்காதலர் விடை யிறுக்காமலிருப்பதால் அவரோடு சம்பாஷிப்பதை விட்டு விட்டு அவ்விஸ்தலத்திலுள்ள மற்றையோரிடம் இவ்வுண் மையை விவரிக்கிறார். இதன்மூலம், தன் காதலரை முன்னி னிலையில் வைத்து மேற்கண்ட மூன்று கவிதைகளையும் பாடிய ஆசிரியர் இக்கவிதையில் அவரை படர்க்கையில் வைத்து, "கண்ணீரைக் கொட்டும் காதலன் கருதுகின்றானா?" எனக் கூறி "அவரது எண்ணம் தவறானது; அதை அவர் மறைத்து விட முடியாது" என மற்றையோரிடம் கூறுவதின்மூலம் அவருக்கு அறிவுறுத்துகிறார்.



لَوْلَا الْهَوٰى لَمْ تُرِقْ دَمْعًا عَلٰى طَلَلٍ
وَلَا اَرِقْتَ لِذِكْرِ الْبَانِ وَالْعَلَمِ



## 5-வது பாட்டு.

காதலில்லாவிடின், நீ ஒரு குட்டிச்சுவற்றுக்காகக் கண்ணீரை வடித்திருக்க மாட்டாய்; வஞ்சி விருக்ஷத்தையும், மலைத்தொடரையும் நினைத்து நீ கண்விழித்(து நித்திராபங்கம் செய்) திருக்கவு மாட்டாய்

மீண்டும், தம் சிநேகிதரை நோக்கி, "நீர் காதல் நோயால் பீடிக்கப்படாதிருப்பின், எப்பொழுதோ வாசஞ்செய்துகொண்டிருந்த அவ்வீட்டின் இடிபாடுகளை நோக்கி, இவ்வாறு கண்ஜலத்தை ஆறாக ஓட்டியிருக்கமாட்டீர்; வஞ்சி மரத்தையும், அம்மரம் வளர்கின்ற மலைத்தொடரையும் நினைத்து நினைத்து நித்திராபங்கம் செய்து கண்ணீரைப் பெருக்கியிருக்கமாட்டீர். எனவே, பழங்காலத்தை நினைத்துக்கொண்டதால், உமக்கு நித்திராபங்கம் வரவுமில்லை; கண்ணீரை ஆறாக ஓட்டப்படவுமில்லை. எவர்மீதோ உமக்குக் காதல் மிகைப்புற்றிருப்பதால் தான் இவ்வாறிருக்கின்றீர்" என தம் கூற்றுக்கு ஆதாரம் காட்டுகிறார்.

## பொது அறிவு:

காதல் நோயால் பீடிக்கப்பட்ட நபருக்கு நித்திராபங்கம் ஏற்படும். ஏனென்றால், மனிதனுக்கு நித்திரை வருவதெல்லாம், அவர் அருந்துகிற உணவு, பானம் ஆகியவற்றிலுள்ள சீதளம், இரைப்பையிலிருந்து மேல்நோக்கி மூளைக்கேறுவதால்தான். பொதுவாக கவலைகள், கோபம் முதலியவையில்லாது சந்தோஷ நிலையிலிருக்கும்போதுதான் மனிதர்கள் நன்கு உணவருந்துவர். மற்றைய காலங்களில் அத்தனை பிரியமாக அவற்றை உட்கொள்ளுவது கிடையாது. உண்மையான காதல் கொண்ட நபர், தனது கோரிக்கை நிறைவேறாவிடின், அந்த ஏக்கத்தால் கவலையால் உணவில் அதிக சிந்தனை செலுத்தமாட்டார். பசிக்காக உணவருந்தினாலும், சொற்ப உணவை மட்டும் உட்கொள்வாரேயன்றி, சுவையுள்ள உணவையோ, பானத்தையோ தேடமாட்டார். இதனால், உஷ்ணம் அதிகரித்து, வரட்சியான ஆவி, மூளையைத் தாக்கும். ஆதலின், அவருக்கு நித்திராபங்கம் ஏற்படும். இவ்வுண்மையைத்தான் ஆசிரியர் இங்கு விளக்கும் பொருட்டு "உமக்கு காதலில்லையெனின், ஏன் நீர் நித்திரை கொள்ளவில்லை, காதல் நோய் உம்மைத் தாக்கிக்கொண்டிருப்பதால், நீவிர் உண்டியை வெறுத்து, உஷ்ணத்தை உற்பத்தி செய்துகொண்டு நித்திராபங்கத்தை விலைக்கு

வாங்கிக் கட்டிக்கொண்டிருக்கிறீர்" என்ற கருத்தை இச் செய்யுளில் விளக்குகிருர்.



فَكَيْفَ تُنْكِرُ حُبًّا بَعْدَ مَا شَهِدَتْ
بِهِ عَلَيْكَ عُدُولُ الدَّمْعِ وَالسَّقَمِ



## 6-வது பாட்டு.

கண்ணீர், நோய் ஆகிய (இரு) நியாய சாட்சிகள், உனக்கெதிராக அதைப்பற்றி (காதல்பற்றி) சாட்சியம் கொடுத்தபின்பு, நீ காதலை (இல்லையென்று) எங்ஙனம் மறுக்கமுடியும்?



وَأَثْبَتَ الْوَجْدُ خَطَّيْ عَبْرَةٍ وَضَنًى
مِثْلَ الْبَهَارِ عَلَى خَدَّيْكَ وَالْعَنَمِ



## 7-வது பாட்டு.

(காதல்) விசனமானது உனது இரு வதனங்கள் மீதும் வசந்தகாலம், செம்பன்னீர் விருட்சம் ஆகியவைபோன்று கண்ணீர், மஞ்சள்படர் ஆகிய இரு இரேகைகளைப் பதிப்பித்துவிட்டது.

வஸந்த காலத்தில் விருட்சங்கள், செழுமையுடன் வளர்ந்து, புஷ்பித்து மக்களை மகிழ்விக்கின்றன. அக்காலத்தில் கதிரவன், தனது செங்கதிர்களை நன்கு வீசுவானுகையால், நடுப் பகற்பொழுதில் இப்பூப்பரப்பை நோக்கினால், எங்கும் மஞ்சள் படர்ந்திருப்பதுபோல் வெயில் காட்சியளிக்கும். அதனூடே செம்பன்னீர் விருட்சம் தன் சிவந்த கட்டைகள், கிளைகளுடன் செழி செழிப்பாக நிற்பது உள்ளத்தைப் பரவசப்படுத்தும். மெய்க்காதலரின் வதனத்துக்கு இதனை ஆசிரியப் பெரியார் ஒப்பிடுகிறார். காதலன் உணவருந்தாமல் விருந்து நித்திரை பங்கமடைவதால், நோய்க்குள்ளாகி அவனது வதனங்கள் மஞ்சள் வர்ணம் தீட்டப்பட்டதே போன்று மாறிவிடுவதை வஸந்த காலத்திற்கும், தனது கோரிக்கை நிறைவேருத கவலையால் அழுதழுது கண்களிலிருந்து இரத்தக்கண்ணீர் தாரை தாரையாக ஓடிக்கொண்டிருப்பதை செம்பன்னீர் விருட்சத்திற்கும் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

نَعَمْ سَرَىٰ طَيْفُ مَنْ أَهْوَىٰ فَأَرَّقَنِي
وَالْحُبُّ يَعْتَرِضُ اللَّذَّاتِ بِالْأَلَمِ

## 8-வது பாட்டு.

ஆம்! நான் நேசிப்பவரைப்பற்றிய நினைப்பு இரவிற்ருேன்றி என்னை விழிப்புறச் செய்துவிட்டது. அன்பு இன்பங்களுக்கிடையே துன்பம் கொண்டு குறுக்கிடும்.

காதலர் தமது பதிலை இங்கிருந்து விளக்குகிறார். "நான் ஒருவர்மீது காதல் கொண்டுள்ளேனாகையால், காதல் நோய் என்னைப் பீடித்துள்ளது. இந்நோய் பீடிப்பதற்கு முன் எல்லோரையும் போன்று, நானும் உண்டு, உடுத்தி சுகமாக வாழ்ந்துவந்தேன். இக்காதல் நோய் ஏற்பட்ட பின்பு, சுக போகங்களையெல்லாம் உதறித்தள்ளிவிட்டு இத் துன்பத்துக் காளாகியிருக்கிறேன். எனக்கு மட்டுமென்ன? காதலின் ஆதிக்கத்திற்குட்பட்ட ஒவ்வொருவரையும் இக்கதிக்கு ஆளாக்கிவிடுவது இயற்கையேதான்" என தன் நிலைமையை விளக்குகிறார்.



يَا لَائِمِي فِي الْهَوَى الْعُذْرِيِّ مَعْذِرَةً
مِنِّي إِلَيْكَ وَلَوْ أَنْصَفْتَ لَمْ تَلُمِ



## 9-வது பாட்டு.

என்னை நிந்திப்பவனே! "உத்ரி" வர்க்கத்துக் காதலில் மன்னிப்பு உண்டு. என்னை விட்டு அகன்று விடுக! நீ நீதி வழங்குவாயாயின் என்னை நிந்திக்க மாட்டாய்.

காதல் முற்றி உண்டியையும், உறக்கத்தையும் ஒழித்து நோயை வருவித்துக்கொண்டதைக் குறித்து அந்த நண்பர், இவரைக் கண்டிக்கிறார். தம்மைக் கண்டனம் செய்பவரை நோக்கி அக்காதலர், "என்னை நிந்திப்பவனே! 'உத்ரி' வர்க்கத்துக் காதல் மன்னிப்பளிக்கப்பட வேண்டியதென்பது உல

கப் பிரசித்தம். ஆகவே, எனது மன்னிப்புக் கோரிக்கையை நீ அங்கீகரிப்பாயாக! நீ நியாய புத்தியுடையவனுயின், இக் காதல் கொண்டுள்ள என்னை நிந்திக்கமாட்டாய்" என இச் செய்யுளில் பதிலளிக்கின்ருர்.

## யார் இந்த "உத்ரி" வர்க்கம்?

'எமன்' தேயத்தில் "பனூ உத்ரா" என ஒரு கோத்திர முண்டு. அக்கோத்திரத்தைச் சார்ந்தவர்கள், உண்மைக் காதல் கொள்ளுவதிலும், சுவிரக்கம் காட்டுவதிலும், 'அரப்' நாட்டில் மிகப் பிரக்யாதி பெற்றிருந்தனர். ஒருமுறை ஒருவர் மீது அன்னேருக்குக் காதல் ஏற்பட்டுவிட்டால், அப்பால் மரணபரியந்தம் அக்காதல் அவர்களைவிட்டு அகன்றுவிடுவது கிடையாது. ஆகையால்தான், மெய்யான காதலை – தவிர்க்க முடியாத காதலை "உத்ரிக் கோத்திரத்துக் காதல்" என அரபியர் கூறுவது வழக்கம். இதற்கொப்ப இக் கவிதையிலும் தனது காதலை உத்திரிக்கோத்திரத்துக் காதலுக்கு ஒப்பிட்டுக் கூறுகிருர் நம் ஆசிரியப் பெரியார்.

தவிர, இதற்கு மற்ருெரு கருத்தும் கொள்ளப்படுகிறது. "காதல்" என்பது ஒருவர் வேண்டும்போதெல்லாம் உற்பத்தி செய்துகொள்ளக் கூடிய வஸ்துவன்று. அது தானுகவே உண்டாக வேண்டும். இத்தகைய காதலைத்தான், மெய்க்காதல் – தெய்வீகக் காதல் என்றெல்லாம் சொல்லப்படும். இம் முறைப்படி ஒருவருக்குக் காதல் ஏற்பட்டுவிட்டால், அப்புறம் அதனுல் விளையும் துன்பங்களைத் துன்பங்களென்று கருதாமல், இன்பமாகவே கருதுவர். எனவே இங்கு காதலன் தன் நண்பனை நோக்கி "எனக்கேற்பட்டுள்ள இக்காதல் நானுக வரவழைத்துக்கொண்டதல்ல. இயற்கையாகவே தானுகவே ஏற்பட்ட இந்நோய்க்கு நீ நீதி வழங்குவாயாயின் என்னைப் பழிக்கமாட்டாய்; என்னை விட்டகன்றுவிடு" என்பதாம்.



عَدَتْكَ حَالِي لَا سِرِّي بِمُسْتَتِرٍ
عَنِ الْوُشَاةِ وَلَا دَائِي بِمُنْحَسِمِ

## 10-வது பாட்டு.

**என் கதி, உனக்கும் ஏற்படட்டும்! கோட் சொல்பவர்களை விட்டு என் மர்மம் மறைந்ததன்று! எனது (காதல்) நோயும் விலகக்கூடியதன்று.**

பற்பல சமாதானங்கள் கூறிய பின்பும் அவர் தன்னைப் பற்றிக் குறை சொல்வதை நிறுத்திக்கொள்ளாமல் மீண்டும் மீண்டும் குறை கூறிக்கொண்டே இருந்தார். ஆதலின் காதலர் "எனது ஸ்திதி உனக்கும் ஏற்படட்டும்! அப்பொழுது தான் நீ உண்மையை உணர்வாய், நானோ இக்காதல் நோயை வேண்டுமென்றே வரவழைத்துக்கொண்டவனல்ல. அது இயற்கையாக ஏற்பட்டதுதான். இதில் நான் குற்றவாளியுமல்லன்" என்பதாயும், என்னைப்பற்றிய இரகசியம் - மர்மம் என்னைக் கண்டிப்பவர்களுக்கு மறைந்ததுமன்று. எவ்வளவுதான் என்னைக் கண்டித்தபோதிலும் குறை கூறிய போதிலும் நான் காதலித்தது எனக்கு சித்தியாகாதிருக்கட்டுமென்ற துர் எண்ணத்தால் என்னைப் பழித்துக் கோள் சொல்லித் திரிந்தபோதிலும் எனக்கேற்பட்ட இக்காதல் நோய் தீரக்கூடியதுமல்ல; அகன்றுவிடக்கூடியதுமல்ல" என்பதாயும் தம்மைக் கண்டிப்பவர்களுக்குச் சமாதானம் கூறுகிறார்.

ஒருவர்மீது மற்றொருவர் காதல் கொள்வது சகஜமும் இயற்கையுமாகும். இவ்விருவரும் பரஸ்பரம் ஒன்று சேருவ

தற்கு முன்பு இக்காதல் சம்பவம் உலகுக்கு வெளியாகுமாயின், அப்புறம் அவ்விருவரும் ஒன்றுகூடுவது துர்லபம். அதிலும் முக்கியமாகச் சிற்றின்பக் காதல் ஒருவருக்கு ஏற்பட்டு, அது அம்பலமாகிவிடின், அப்பால் தனது காதலியை அவர் அடையவே முடியாது. மேலும் இக்காதல் விவகாரத்தைக் குறித்த காலத்திற்கு முன்பே காதலிக்கப்பட்ட பெண்ணிடம் ஒருவர் தெரிவித்து, " உன்னை இன்ன நபர் காதலிக்கிறார். அதை அவரே பகிரங்கப்படுத்துகிறார் " எனத் தெரிவித்துவிட்டால், அக்காதலி, தன்பால் காதல்கொண்ட நபரை வெறுப்பாளேயன்றி விரும்பமாட்டாள். எனவே காதலர்கள் மத்தியிலுள்ள காதலைப்பற்றி வெளியில் அம்பலப்படுத்திக்கொண்டு திரிபவர் உண்மையில் காதலர்பால் அபிமானமுடையவரல்லர். அவர்களைப் பிரித்துவிட நினைப்பவர்கள்தான் இக்காரியத்தைச் செய்வர்.

எனவே இங்கு பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள காதலர் தம்மைக் குறை கூறுபவர்களைத் தன்பால் நல்லெண்ணமற்றவர்களென இடித்துக்காட்டி, அத்தகையோரைக் கோட் சொல்பவர்கள் " எனக் கூறியுள்ளார்.



مَحَضْتَنِي النُّصْحَ لٰكِنْ لَسْتُ أَسْمَعُهُ
إِنَّ الْمُحِبَّ عَنِ الْعُذَّالِ فِي صَمَمِ



## 11-வது பாட்டு.

நீ எனக்குக் கலப்பற்ற உண்மை உபதேசமே புரிந்தாய்! எனினும் நான் அதைச் செவியுறுபவனல்லன். நிச்சயமாக மெய்க்காதலன் பழிப்போர்களிடம் செவிடனாகவே இருக்கின்றான்.

தன்னைக் கண்டிக்கும் நண்பரை நோக்கிக் காதலர், "என்னைத் திருப்பிவிடவேண்டுமென்று நீ எடுத்துக்கொண்ட முயற்சி என்னைப் பொறுத்தவரை அந்தரங்க சுத்தியானதும் கலப்பற்றதுமாகும். உன் சுயநலத்திற்காக நீ செய்துகொண்ட உபதேசமென்றும் நான் நினைக்கவில்லை. எனினும், நான் உனது உபதேசத்தை செவியேற்கும் நிலையிலில்லை. உலகம் பழிக்கும்; உலகோர் கேவலமாக நினைப்பர் என்பதுதானே உனது கருத்து. அதைக்குறித்து நீ கவலையடைய வேண்டாம். ஏனெனில், மெய்க்காதலன், பழிப்போர்கள் விஷயத்தில் செவிடனாகவேயிருப்பான். நிந்திப்போரின் நிந்தனைகளெதுவும் அவன் செவிகளில் ஏறாது" என்று தேற்றுகிறார்.



إِنِّي اتَّهَمْتُ نَصِيحَ الشَّيْبِ فِي عَذَلِي
وَالشَّيْبُ أَبْعَدُ فِي نُصْحٍ عَنِ التُّهَمِ



## 12-வது பாட்டு.

**நிச்சயமாக நான் என்னை நிந்திக்கும் விஷயத்தில்**
**நரையின் நல்லுபதேசத்தையே சந்தேகித்தேன்.**
**ஆனால், நரையோ உபதேசிக்கும் விஷயத்தில்**
**சந்தேகங்களை விட்டும் வெகு தூரமானது.**

தமது காதல் போலிக் காதலல்ல; மெய்க்காதலேதான் இதனை விட்டுவிடுமாறு எவர் உபதேசித்தாலும் அதனைச் சிறிதுகூட லக்ஷியம் செய்யப்போவதில்லையென்பதாக இச்செய்யுளில் ஒரு உதாரணம் கூறப்படுகிறது.

சாதாரணமாக, வேறு புறக்காரணங்களின்றி நரை தோன்றவேண்டிய காலத்தில் ஒருவருக்கு இயற்கையாகவே நரை தோன்றுமாயின், அவரது மரணம் சமீபித்துவிட்டது. சென்றதுபோக எஞ்சியுள்ள வாழ்நாள் வெகுசொற்பந்தான் என்பது பொதுவாக யாவருமறிந்த உண்மை. "நரை மரணத்தின் தூதுவன்" என்பது பெருமான் (ஸல்) அவர்களின் வாக்காகும். "யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே" என்ற பழமொழிப்படி ஒருவருக்கு நரை தோன்றி விடின் அதற்குப்பின் அதனை அடுத்துவருவது மரணம்தான். எனவே மரணம் வரப்போகிறதென்பதை முன்னெச்சரிக்கை செய்யும் இந்நரையை யாரும் சந்தேகிப்பதற்கில்லை. அந் நரையும் தனது இயற்கை நாவால் அம்மனிதனுக்கு எச்சரிக்கை உபதேசம் செய்துகொண்டும் அவனது குறைகளைக் கண்டித்து நிந்தித்துக்கொண்டுமிருக்கிறது. இந்நிலையில் அதையே நான் சந்தேகிக்கும்போது அநாவசியமாகக் குறை கூறித் திரியும் இக்கோளர்களையா மதிக்கப்போகின்றேன்? எனக் கூறுகிருர்.

இங்கு காதலர் தான் நரை ரோமத்தின் உபதேசத்தைப் பின்பற்றி நடக்கவில்லையெனத் தன்னைக் குறை கூறிக்கொள்வதுடன் பிறரை நரையின் உபதேசத்தை கடைபிடித்தொழுக வேண்டுமென்பதை சூசகமாக எச்சரிக்கிருர்.



# இரண்டாம் பிரிவு.

## மனோ இச்சையை அகற்றுவது பற்றியது.

முன்பு கூறப்பட்ட செய்யுட்களில் 11-வது செய்யுள் வரை காதலால் விளையும் பலாபலன்களைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது. மெய்க்காதலன் "ஆஷிக்" எந்நேரமும் தன்னால் காதலிக்கப்பட்ட பொருளை நினைத்து அழுதுகொண்டேயிருப்பான். ஊண், பானம், நித்திரை ஆகியவற்றைத் தவிர்த்து விடுவான். இதனால் அவனது முகமும் சடலமும் நோய்க்குள்ளானவன் போன்று, மஞ்சள் வர்ணமாக மாறி வாடி மெலிந்துவிடுகின்றன.

தனது காதலைப்பற்றி சாமான்யமாக வெளியிடான்; இயன்றளவு மறைக்கவே முயல்வான். எனினும், அவனால் மறைக்க இயலாது. அவன் கொண்டுள்ள காதலைக் கைவிடுமாறு அவனிடம் எவர் உபதேசம் செய்திடினும், அது அவன் செவிகளில் ஏறாது. இதற்குக் காரணம் இக்காதல் நோய் தானாக வருவதேயன்றி வேண்டுமென்றே ஒருவர் வரவழைத்துக்கொள்வதல்ல. இயற்கையாக வருவது இயற்கையாக மாறவேண்டுமேயன்றி ஒருவரின் பிரயத்தனத்தால் மாறக்கூடியதன்று. எனவேதான் காதல் நோய்க்காளானவரைக் கண்டிப்பதும், குறை கூறுவதும் பயனளிப்பதில்லை என்பது மேற்கண்ட கவிதைகளின் கருத்தாகும்.

12-வது செய்யுள் முதல் 28-வது செய்யுள் வரை மனோ இச்சை, மாயை ஆகியவற்றால் ஏற்படும் தீமைகளையும், அவற்றின் இயற்கைக் குணங்கள் – லக்ஷணங்களையும் பற்றி விவரிக்கப்படுகிறது.





فَإِنَّ أَمَّارَتِي بِالسُّوءِ مَا اتَّعَظَتْ
مِنْ جَهْلِهَا بِنَذِيرِ الشَّيْبِ وَالْهَرَمِ



## 13-வது பாட்டு.

*எனவே திண்ணமாக தீயதையே அதிகமாக ஏவும் என் மனம், தனது அறிவீனத்தால் நரை, விருத்தாப்பியம் ஆகிய (இரு) அச்சுறுத்துவோரின் மூலம் உபதேசம் பெறவில்லை.*

நரையின் உபதேசத்தை மதியாது தான் சந்தேகிப்பதற்குரிய காரணத்தை இச்செய்யுளில் கூறுகிறார். அதாவது: நரையும், வயோதிகமும் எதனை முன்னெச்சரிக்கை செய்கின்றனவென்பதை எனது "நப்ஸே அம்மாரா" (தீயதையே ஏவும் மனோ இச்சை) அறியாதுபோயிற்று. ஆகையால்தான், அது நரை, வயோதிகம், ஆகியவற்றின் உபதேசத்தைச் சந்தேகிக்கிறது.

## நப்ஸு என்றால் என்ன?

'நப்ஸு' என்ற பதத்திற்கு பல பொருள்களுள. இவண் 'மனநிலை' என்ற பொருளே பொருந்துமெனக் கூறப்பட்டுள்ளது.

மனிதனின் அகத்தில் இதயமானது தசைக் கட்டியாகச் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. எனவே, அவனுக்கு ஏற்படும்

நினைவு, சிந்தனை முதலியவற்றிற்கு இதயமே முக்கியக் கருவியாக இருக்கிறது. இவ்விதயம் எச்சமயத்தும் அசைந்து கொண்டேயிருத்தல் வேண்டும். அப்படி அசையாது நின்று விடுமாயின், மனிதன் உயிர்வாழ முடியாது; மரணித்துவிடுகிறான். ஆகவே, இருதயமானது ஒரு க்ஷணநேரமும் நிற்காது ஓடிக்கொண்டேயிருப்பது போன்றே அவனது எண்ணமும், சிந்தனையும் ஒரே ஸ்திரமாக இல்லாமல் மாறிக்கொண்டே போகின்றன. இம்மாருட்டங்களை துருவி ஆராய்ந்த பெரியார்கள் இதனைப் பலவாறாகப் பிரித்து, ஒவ்வொரு நிலைக்கும் தனித்தனிப் பெயர்களைக் குறிப்பிடுகின்றனர். அவைகளில் முக்கியமானவை ஏழு ஆகும். அவையாவன:

1. அந்நப்ஸுல் அம்மாரா
2. அந்நப்ஸுல் லவ்வாமா
3. அந்நப்ஸுல் முத்மயின்னா
4. அந்நப்ஸுல் ராலியா
5. அந்நப்ஸுல் மர்லியா
6. அந்நப்ஸுல் காமிலா
7. அந்நப்ஸுல் முகம்மிலா

இவ்வேழு வகைகளும் மனிதனின் மனத்தே தோன்றும் ஏழு நிலைகளாகும். (1) மனிதன் மிருகக் குணங்களைக் கொண்டும், மலக்குகளான அமரர்களின் குணங்களைக் கொண்டும் சிருஷ்டிக்கப்பட்டுள்ளான். அவன் பிறக்கும் பொழுது களங்கமற்ற மனத்தினனாகப் பிறந்து, பின்னர் மற்றையோர் செய்வதைப் பார்த்து தானும் செய்ய முயலுகின்றான். ஆனால், நன்மை தின்மை ஆகிய இருவகைச் செய்கைகளில் தின்மையான செய்கைகளிலேயே அவனது இதயம் அதிகமாகவும், முதன்மையாகவும் ஈடுபடுகிறது. இதே நிலையில் பாலப்பருவம் முடிந்து வாலிபப்பருவம் ஏற்படுகையில் தேகத்திலுள்ள வலிமையாலும், அவனில் மறைந்துள்ள மிருக உணர்ச்சியாலும் அவன் தின்மையில் ஈடுபட ஆரம்பிக்கின்றான். இதைக் குறித்துத்தான் நபிகள் பிரான் (ஸல்) அவர்கள்,

"பிறக்கும் குழந்தைகள் யாவும் இஸ்லாமிய (பித்ரத்தில்) இயற்கையில் (அதாவது: களங்கமற்ற நல்ல

மனத்துடனேயே) பிறக்கின்றன. எனினும், அவற்றின் பெற்றோர்கள் அவர்களை (செயற்கையின் வாயிலாக) யூதர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ (நெருப்பைப் பூஜிக்கும்) மஜூஸிகளாகவோ ஆக்கிவிடுகின்றனர்." (அல்ஹதீது)

எனக் கூறியுள்ளார்கள். இதற்கிணங்க முதலில் மனிதன் துற்குணத்தவனாக மாறி பற்பல தீய காரியங்களைச் செய்ய ஆரம்பிக்கின்றான். இந்த நிலைக்குத்தான் அந்நப்ஸுல் அம்மாருவென்று கூறப்படுகிறது.

(2) ஆனால், இத்தகைய நிலையை அடைந்த மனிதன் சில சமயம் தனது துற்கிரியைகளைத் தவறென உணர்ந்து அவற்றால் தனக்குத் தீங்குதான் நேரிடுமெனத் தெரிந்து, தெளிந்து, வருந்தி தன்னைத்தானே நொந்துகொள்கிறான். இந்நிலையில் அவனது மனத்திற்கு அந்நப்ஸுல் லவ்வாமா எனக் கூறப்படுகிறது.

(3) அதிலும் தேர்ச்சியடைந்து நற்பணிகளையே புரிய வேண்டும்; சற்குணத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்ற திடசித்தத்தையடையும் மனிதன் ஓரளவு சாந்தி பெறுகிறான். இந்நிலையில் அவனது மனத்திற்கு அந்நப்ஸுல் முத்மஇன்னா என்று கூறப்படுகிறது.

(4) இதற்குமேல் நற்காரியங்களைச் செய்வதில் எத்தனை இடையூறுகளும், ஆபத்துகளும் நேரிடினும் பொருட்படுத்தாமல் அவற்றை எதிர்த்து நின்று அவதிகளை சகித்துக் கொண்டு துன்பங்களை இன்பங்களாக மனிதன் மதிக்கிறான். இந்நிலையில் அவனது மனத்திற்கு அந்நப்ஸுல் ராலிய்யா என்று கூறப்படுகிறது.

(5) இதிலும் பண்பட்டு அல்லாஹ்வின் திருப்திக்கும், உகப்பிற்கும் மனிதன் உள்ளாகிறான். இந்நிலையில் அவனின் மனத்திற்கு அந்நப்ஸுல் மர்லிய்யா எனக் கூறப்படுகிறது.

(6) இதற்குமேல் மானுஷீகத் தன்மைக்குரிய சகல இலக்ஷணங்களேயும் உடையவனுய்த் திகழும்போது அவனது மனத்திற்கு அந்நப்ஸுல் காமிலா எனக் கூறப்படுகிறது.

(7) பின்னர், தான் கண்ட மெஞ்ஞானக் கருத்தை உலக மாந்தரும் உணரவேண்டும்; எல்லோரும் நற்காரியங்களைச் செய்யவேண்டும்; பிரபஞ்சமே அருள் மயமாக மாற வேண்டும் என்ற உதிப்பு அவனுக்கு ஏற்படுகிறது. ஆகவே அவன் பொதுமக்களை மேம்புடுத்தவும், அவர்களுக்கு ஊழியம் செய்யவும், உண்மை வழியை உணர்த்திக் காட்டவும் முற்படுகிருன். இந்நிலேயில் அவனது மனத்திற்கு அந்நப்ஸுல் முகம்மிலா என்று கூறப்படுகிறது.

இவ்வேழு நிலேகளிலும் ஆரம்ப நிலேயான அந்நப்ஸுல் அம்மாராதான் மிகக் கெட்ட குணம் படைத்த நிலேயாகும். இந்நிலேயில்தான் மனிதர்கள் பாப காரியங்களேத் துணிந்து செய்கின்றனர். இதைத்தான் நமது ஆசிரியப்பெரியார் இக் கவிதையில் குறிப்பிடுகிருர். இதைக்குறித்தே தமிழ் ஞானிகளும் மனக்குரங்கு எனக் கூறியும் பாடியுமுள்ளனர்.

" மெய்யாக (குணங்கெட்ட நிலேயிலுள்ள) ஆத்மா,
தின்மையையே மிகவும் தூண்டக்கூடியது."
(அல்குர்ஆன் 12:53)

என்று இந்நிலேகுறித்தே இறைவனும் கட்டிக்காட்டியுள்ளான்.





وَلَا أَعَدَّتْ مِنَ الْفِعْلِ الْجَمِيلِ قِرَى
ضَيْفٍ أَلَمَّ بِرَأْسِي غَيْرَ مُحْتَشِمِ



## 14-வது பாட்டு.

**அன்றியும், வெட்கமற்று என் சிரசின்பால் வந்திறங்கியுள்ள (நரையெனும்) விருந்தினனை உபசரிக்க அ(வ்வாத்மாவான)து அழகிய கிரியைகளை எதையும் சித்தம்செய்து வைக்கவில்லை.**

மனிதர்களின் உரோமங்கள் இயற்கையில் கறுப்பாகவே இருந்து வருகின்றன. வயது முதிர்ச்சி ஏற்படுங்கால், சிறுகச் சிறுக நரை தோன்றவாரம்பிக்கிறது. எனவே இங்கு அந்நரையை ஒரு விருந்தாளிக்கு ஒப்பிட்டுக் கூறுகிறார் ஆசிரியப் பெரியார்.

### நரை கற்பிக்கும் படிப்பினை.

விருந்தளிப்பவருக்கு சிரமம் ஏற்படாதிருக்கும்பொருட்டு விருந்தினர்கள் அதிக நாள் தங்கிவிடக்கூடாதென்பது கண்ணியமிக்கவர்களின் முறையாகும். ஆனால் நரை எனும் விருந்தினன் ஒருவரிடம் வந்திறங்கிவிட்டால் அப்புறம் அவர் மரிக்கும்வரை அவரைவிட்டு அகல்வது கிடையாது. ஆகையால்தான் வெட்கமற்று வந்திறங்கியுள்ள விருந்தாளி என்று ஆசிரியர் வர்ணிக்கிறார்.

இத்தகைய நரையெனும் விருந்தினனை உபசரிப்பது என்றால் மனிதன் தனது வாலிப கால உணர்ச்சிகளை ஒழித்துவிட்டு மறுமையின் நல்வாழ்க்கைக்கான நற்கிரியைகளைச் செய்தலேயாகும். இதுவேதான் கிரமமாக நடந்துகொள்ள வேண்டிய முறை. இத்தகைய நற்காரியங்களை தான் முற்கூட்டியே சித்தம்செய்து வைக்கவில்லையேயென அங்கலாய்த்துப் பிரலாபிப்பதுடன் ஏனையோரையும் எச்சரிக்கிறார்.



لَوْكُنْتُ أَعْلَمُ أَنِّيْ مَا أُوَقِّرُهُ
كَتَمْتُ سِرًّا بَدَالِيْ مِنْهُ بِالْكَتَمِ



## 15-வது பாட்டு.

**திண்ணமாக நான் அதை (விருந்தினனான நரையை) கௌரவிக்க மாட்டேனென உணர்ந்திருப்பின் என்னில் அது தோன்றியபொழுதே “கத்தம்” என்ற சாய மூலிகையால் (சாயம் தீட்டி இளம் நரையாக) மறைந்திருப்பதை (ஆரம்பத்திலேயே) மறைத்திருப்பேன்.**

மனிதன் நல்லுபதேசம் பெற்றொழுக நரை அவனுக்கு ஒரு அழகிய உபகரணமாக இருக்கிறதென்பதை முன்பு விளக்கப்பட்டது. நரை தோன்றிய பின்பும் பாபங்களிலேயே அவன் ஈடுபட்டிருப்பானாயின் அதை அவன் சரிவர கவனித்து உணர்வு பெறவில்லை என்பதைத்தான் அதைக் கௌரவிக்கவில்லையென்று கூறப்படுகிறது. அவ்வாறு இருப்பதைவிட அந்த நரையை “கத்தம்” என்ற சாய மூலிகையைக் கொண்டோ அல்லது இக்காலத்தில் தோன்றியிருக்கும் நரை மயிரைக் கறுப்பாக்கும் சாயத்தைக் கொண்டோ துவக்கத்

திலேயே மறைத்துவிடுவது உசிதமென இச்செய்யுளில் கூறப்படுகிறது.

## கறுப்புச் சாயம் பூசலாமா?

நரை தோன்றிய பின்பு அதை மறைக்காமல், அதனுல் உணர்வு பெற்று நற்காரியங்களில் அதிகம் ஈடுபடவேண்டியது அத்தியாவசியமென்பதைத்தான் "ஷரீஅத்" கூறுகிறது. ஆகையால்தான் கறுப்புச் சாயத்தாலோ அல்லது கறுப்பாக்கும் மூலிகைகளாலோ நரையைமறைக்க "ஷரீஅத்" அநுமதியளிக்கவில்லை. கறுப்பைத் தவிர்த்து "நரைத்தவன் தான்" என மற்றையோர் உணர்ந்துகொள்ளும் முறையிலுள்ள மருதோன்றிச் சாயம் போன்றவற்ருல் நரையின் வெண்மையை மாற்ற மட்டும் அனுமதியளித்துள்ளது.

எனவே கவிதாசிரியர் தான் நரையின் மூலமாக "உபதேசம் பெறல்" என்ற கௌரவத்தை அதற்குக் கொடுக்கவில்லையே என இங்கு கவலையுறுகிருர் என்பதே இக்கவிதையின் கருத்தாகும்.



مَنْ لِيْ بِرَدِّ جِمَاحٍ مِّنْ غَوَايَتِهَا
كَمَا يُرَدُّ جِمَاحُ الْخَيْلِ بِاللُّجُمِ



## 16-வது பாட்டு.

குதிரையின் இடக்கை கடிவாளத்தால் அடக்குவது போன்று அதின் (ஆத்மாவின்) "வழி தவறல்" என்ற இடக்கை அடக்க யார் எனக்காகப் பொறுப்பேற்பர்?

மனக்குரங்கெனும் "நப்ஸே அம்மாரு"வை அடக்கியொடுக்கத் தம்மால் இயலவில்லையென்பதையும் அதனை அடக்கத் தனக்காக ஒருவர் பொறுப்பேற்க வேண்டுமென்பதையும் ஆசிரியர் இங்கு வெளியிடுகிறார்.

ஆகவே "அந்நப்ஸுல் அம்மாரு" வென்ற மனக்குரங்கையடக்கி சீர்திருத்தச் செய்யவும், அதன் தின்மையை அகற்றவும் சரியான ஆசிரியர் வேண்டுமென்பதையும் அப்பொழுதுதான் அகத்தூய்மை ஏற்படுமென்பதையும் இன்றேல் மிகச்சிரமம் என்பதையும் ஆசிரியப்பெரியார் இங்கு சமிக்ஞை செய்கிறார்.



فَلَا تَرُمْ بِالْمَعَاصِي كَسْرَ شَهْوَتِهَا
إِنَّ الطَّعَامَ يُقَوِّي شَهْوَةَ النَّهِمِ



## 17-வது பாட்டு.

எனவே, அதன் (நப்ஸின்) இச்சைகளை பாபங்கள் (செய்வது) கொண்டு முறித்துவிட நினையாதே. நிச்சயமாக உணவானது உணவுப் பிரியனின் இச்சையை (இன்னுமதிகப்) பலமுடையதாக்கி விடும்.

### மனக்குரங்கை மடக்குவதெங்கனம்?

அந்நப்ஸுல் அம்மாருவென்ற மனக்குரங்கை மடக்குவதற்குரிய பரிகாரம் இவண் கூறப்படுகிறது.

மனிதனுக்கு ஏற்படும் இச்சைகளை - விருப்பங்களை உடனடியாக நிறைவேற்றிவிடின் அவை அடங்கியொடுங்கிவிடுமெனச் சிலர் நினைக்கின்றனர். இக்கருத்து தவறானதென்பதையே இங்கு ஆசிரியர் விபரிக்கிறார். அதற்கான காரணத்தை இதே கவிதையிலும் இதன் பின்வரும் கவிதைகளிலும் கூறித் தெளிவுபடுத்துகிறார்.

பாபங்களைச் செய்து மனோ இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்வதன்மூலம் அவற்றை முறித்துவிடலாமென நினையாதே! ஒருவனுக்கு உண்டியின் மீது ஆசையிருந்தால் அறுசுவையுண்டியைத் தயாரித்துச் சாப்பிட்டுவிட்டால் அத்தோடு அவ்வாசை அடங்கிவிடுமென்று நினைக்கக்கூடும். விஷயம் அவ்வாறன்று. உண்டியை அதிகரிக்க அதிகரிக்க மேன் மேலும் அவ்வுணவின்மீது அதிகப் பிரீதி ஏற்பட்டு முடிவில் போஜனப் பிரியனாகவே அவன் மாறிவிடுகிறான். எனவே மனோ இச்சைதான் பலப்படுமேயன்றி அதை அடக்குவது முடியாது போய்விடும் என்பதே இக்கவிதையின் கருத்து.

وَالنَّفْسُ كَالطِّفْلِ إِنْ تُهْمِلْهُ شَبَّ عَلَى
حُبِّ الرَّضَاعِ وَإِنْ تَفْطِمْهُ يَنْفَطِمِ

## 18-வது பாட்டு.

மனமோ சிசுவைப்போன்றதாகும். அதை (சிசுவைப் பால் குடிக்கும் நிலையிலேயே) நீ விட்டுவைப்பாயாயின் பால்குடி விருப்பத்திலேயே வளர்ந்து பெரிதாகும். ஆனால், அதை (பால பருவத்திலேயே) பால் மறக்கச்செய்வாயாயின் பால்குடியை மறந்துவிடும்.

"நப்ஸு" என்னும் மனக்குரங்கை ஒரு குழவிக்கு ஒப்பிடுகிறார் ஆசிரியர்.

பாலருந்தும் குழந்தையை அதன் அன்னை சுமார் 2 வயதில் பலவந்தமாகப் பால்குடி மறக்கச் செய்கிறாள். அச்சமயத்து குழந்தை எவ்வளவுதான் அடம் செய்தபோதினும் அதன் இஷ்டப்படி தாய் நடப்பதில்லை. எனவே, பாலுக்குப் பதில் வேறு தின்பண்டங்களைக் கொடுத்து கவனத்தை வேறு பக்கம் திருப்பி முற்றிலும் பால்குடியை மறக்கச் செய்துவிடுகிறாள். ஆனால் அச்சிசு பிடிக்கும் அடத்திற்குப் பயந்து அதன் போக்குப்படியே விட்டு மீண்டும் பால் கொடுக்க ஆரம்பித்தாளானால், பெரிய வயதுவரை அதே நிலையில்தான் அக்குழவி இருந்துவரும். இதே போன்றுதான் மனமும் அதன் போக்கிலேயே விட்டுவந்தால் அதன் அக்கிரமங்கள் மிகுந்து மனிதனை ஆட்டிவைக்க ஆரம்பித்துவிடும். எனவே, ஆரம்பத்திலிருந்தே மட்டந்தட்டிக்கொண்டு வருவதுடன், மனோ இச்சைக்கு அடிமையாகிவிடாமல் அதற்கு மாறாக நடந்துவந்தால்தான் அதனை ஒடுக்கி தன் ஆதிக்கத்தில் கொண்டுவர முடியும் என்பதே கருத்து.

فَاصْرِفْ هَوَاهَا وَحَاذِرْ أَنْ تُوَلِّيَهُ
إِنَّ الْهَوَى مَا تَوَلَّى يُصْمِ أَوْ يَصِمِ

## 19-வது பாட்டு.

எனவே, நீ அதன் அவாவை மாற்றி, அதனை ஆதிக்கம் செலுத்தும் அதிகாரியாக ஆக்குவதையும் நீ தவிழ்ந்திரு. நிச்சயமாக அவா ஆதிக்கம் செலுத்தினால் (உன்னை) அது கொன்றுவிடும்; அல்லது இழிவுபடுத்திவிடும்.

## மனே இச்சை அதிகாரியானுல்?

"மனம் போனவாறெல்லாம் நீ போகவேண்டாம்" என்ற முதுமொழிக்கிணங்க, மனே இச்சைக்கு இடங்கொடாமல் எக்ஷணமும் எச்சரிக்கையோடிருந்தல் வேண்டும். மனே இச்சையின் ஆதிக்கத்தினுள் வந்து அடிமையாகிவிடாதே. அதை உனது ஆதிக்கத்தில் கொண்டுவந்து அடிமைப் படுத்திவிடு. அங்ஙனமின்றி அது உன்னில் ஆட்சி செலுத்த வாரம்பித்தால் உன்னை அழித்து நாசமாக்கிவிடும்; அல்லது மக்களின் மத்தியில் உன்னை இழிவுபடுத்தி தலைநிமிரமுடியாத வாறு செய்துவிடும் என்பதே இக்கவிதையின் கருத்தாகும்.



وَرَاعِهَا وَهِيَ فِي الْأَعْمَالِ سَائِمَةٌ
وَإِنْ هِيَ اسْتَحْلَتِ الْمَرْعَى فَلَا تُسِمِ



## 20-வது பாட்டு.

அ(ந்த நப்ஸான)து நற்கிரியை(களென்னும் மேய்ச்சலிடங்)களில் மேய்ந்து கொண்டிருக்குங்கால் அதைக் கண்காணித்துக்கொள். ஆனுல், அது ஒரே மேய்ச்சலிடத்தை இன்பமாகக் கருதுமாயின் (அதில்) மேய விட்டுவிடாதே.

மனமானது தீய காரியத்தில் செல்ல விரும்பினுல், அதை தடுத்து பலவந்தமாக நற்கிரியைகளில் அதனை ஈடுபடுத்தல் வேண்டும். என்றுலும், அது நற்காரியங்களில் ஈடுபட்டிருக்கும்போதும் அதை ஜாக்கிரதையாக கண்காணித்துக்கொள்ள

வேண்டும். ஏனெனில், நற்காரியங்களில் ஈடுபட்டுள்ளபோதும் அதன்மூலம் தின்மையின் பக்கமே இழுத்துச் செல்ல முனையும். எப்படியென்றால், "நற்காரியத்தையே அதிகமாகச் செய்கிறோம்" என்ற அகந்தை அதற்கு ஏற்பட்டு, புரியப் பட்ட சொற்ப நற்செய்கைகளும் அழிந்துபோய்விடும்.

## பெருமையால் நேரும் சிறுமை.

"அரிய தவமும் அகந்தையினால் அழிந்துவிடும்" என்பது முதுமொழியாகும்.

ஆகவே, தப்ஸானது நற்கிரியைகளில் ஈடுபட்டிருப்பினும் தற்பெருமை, தற்புகழ்ச்சி, அகந்தை முதலான துர்க்குணங்கள் அதில் உண்டாகிவிடாமல் காப்பாற்றிக்கொள்ளல் அத்தியாவசியமாகும்.

"எவர் தற்பெருமை கொள்ளுகிறாரோ அவரை அல்லாஹ் தாழ்த்திவிடுவான்.

[அல்ஹதீது: பைஹகீ]

"பெருமை எனது பரிவட்டம்; மகத்துவம் எனது இடுப்பு உடை. இவ்விரண்டிலும் என்னிடம் எவன் போட்டியிடுகின்றானோ, அவனை முறித்துவிடுவேன்" என அல்லாஹ் கூறுகிறான்.

[அல்ஹதீதுல் குத்ஸிய்யி: நூல் 'முஸ்லிம்']

எனவே தற்பெருமை, கர்வம், அகந்தை ஆகியவை மனிதனை வீழ்ச்சியுறச்செய்யும் தன்மைகளாகும். "நாம் நற்காரியங்களைச் செய்து உயரிய ஸ்தானத்தை அடைந்துவிட்டோம்; நமக்கு மிஞ்சிய நல்லவன் எவனும் கிடையாது" என்ற எண்ணம் ஒருவனுக்கு உண்டாய்விடுமாயின், அவனது நற்றவங்களெல்லாம் அழிந்துவிடுகின்றன. ஆகையால் நற்காரியங்களைச் செய்வதால் மனதுக்கு மனமகிழ்ச்சி ஏற்பட்டு இன்பந் தட்டுமாயின் மிகவும் எச்சரிக்கையாகவிருந்து அம்மனத்தை

அதைவிட்டகற்றி வேறொன்றில் *திருப்பிவிடல்* மிகமிக அவசியமாகும்.

## பொது அறிவு.

புண்ணிய காரியங்கள் அனேகமுளன. ஒருவருக்கு நோன்பு, தொழுகை முதலிய ஜபதப காரியங்களிலேயே மனம் லயித்து அதனால் மனத்துக்குப் பெருமையோ, கர்வமோ ஏற்படுமென்று தோன்றுமாயின் *சன்மார்க்கத்தில்* கடமையாக்கப்பட்ட பர்லு, வாஜிபு, ஸுன்னத்துக்களை மட்டிலும் நிறைவேற்றிவிட்டு தான தருமம், சமூகச் சேவை, பொதுமக்களை *சீர்திருத்தும்* பொதுச்சேவை முதலியவற்றில் ஈடுபடல் வேண்டும். எம்முறையிலும் மனம் போன போக்குப்படி மனிதன் நடக்கலாகாதென்பதே ஆசிரியப் பெரியாரின் கருத்தாகும்.



كَمْ حَسَّنَتْ لَذَّةً لِلْمَرْءِ قَاتِلَةً
مِنْ حَيْثُ لَمْ يَدْرِ اَنَّ السُّمَّ فِي الدَّسَمِ



## 21-வது பாட்டு.

**திண்ணமாக விஷம் கொழுப்பினுள் (மறைந்து) உள்ளதென்பதை மனிதன் அறியமுடியாவண்ணம் கொன்று தீர்க்கும் இன்பத்தை எத்தனையோ முறை அது அவனுக்கு அழகாகக் காட்டிற்று.**

## உள்ளில் நஞ்சு வெளியில் பகட்டு.

மேற்கண்ட செய்யுளில் கூறப்பட்டுள்ள விஷயங்களுக்கு இக்கவிதையில் ஆதாரம் காட்டப்படுகிறது.

"நப்ஸே அம்மாரு"வானது தின்மையான காரியங்களையும்கூட நல்ல காரியங்கள் போன்று நினைக்குமாறு செய்துவிடும். ஆகவே நன்மையாகத் தோன்றுவதெல்லாம் உண்மையில் நன்மையாகிவிடுவதற்கில்லை. பக்குவமாகச் சமைக்கப்பட்ட உணவில் விஷம் கலக்கப்பட்டிருந்தால் வெளியில் கண்டுகொள்ள முடியாது. வெளி வாசனையையும் மணத்தையுங்கண்டு மயங்கி உண்டுவிடுபவன் மரணத்திற்குள்ளாகிறான். அதேபோன்று இந்த நப்ஸும் வெளியில் அலங்காரமாகவும் அழகாகவும் நன்மையான காரியங்களாகவும் காட்டி அதில் மனிதனை ஈடுபடச்செய்து முடிவில் அழித்து நாசமாக்கிவிடுகிறது. மனிதன் தனக்கு நன்மையான காரியங்களைச் செய்வதற்காகவே இவ்வகிலம் சம்பந்தப்பட்ட சர்வ காரியங்களையும் செய்கிறான். ஆனால், அவனால் நன்மையென்று கருதப்பட்ட காரியங்கள் இறுதியில் தின்மையாக முடிவதை அநுபவபூர்வமாகக் காணுகிறோம். முதலில் கெடுதலென்று தெரிந்துகொண்டே எவரும் எப்பாபத்தையும் செய்வது கிடையாது. கொலை செய்பவன்கூட தான் செய்யும் கொலைச்செயல் நியாயமென்றுதான் முதலில் நினைக்கிறான். ஆகையால்தான் அவனுக்கு அதில் துணிச்சல் ஏற்படுகிறது. பின்னர் அதனால் விளையும் பிரதிபலனைக் கண்ணுறும்போதுதான் தனது தவறை உணருகிறான்.

ஆகவே நன்மையென நினைக்கிற யாவும் நன்மையாக இருந்துவிடமுடியாது. 'ஷரீஅத்'தினால் ஏவப்பட்ட காரியங்கள் யாவும் நன்மையானவை; விலக்கப்பட்டவை யாவும் தின்மையானவை. ஆகையால் எக்காரியத்தைச் செய்யப்

புகினும் முதலில் 'ஷரீஅத்' என்ற உறைகல்வில் உரைத்துப்பார்த்த பின்பே முடிவு செய்யவேண்டும்.



وَاخْشَ الدَّسَائِسَ مِنْ جُوْعٍ وَمِنْ شِبَعٍ
فَرُبَّ مَخْمَصَةٍ شَرٌّ مِنَ التُّخَمِ



## 22-வது பாட்டு.

**பசித்திருப்பதிலும் வயிற்றை(ச் சம்பூரணமாக) நிரப்புவதிலுமுள்ள மறைமுகமான கேடுகளைப் பயந்துகொள்! அன்றியும் கடும் பசியோடிருப்பது வயிற்றை(ப் பூரணமாக) நிரப்புவதைவிட எத்தனையோ மடங்கு கெடுதி விளைப்பதாகும்.**

### அளவுமீறி பசித்திருப்பதும் வயிற்றை நிரப்புவதும்.

நப்ஸே அம்மாருவின் சேஷ்டைகளைக் குறைக்க மற்றெரு மாற்றுப்பரிகாரம் இக்கவிதையில் கூறப்படுகிறது.

மனிதன் அளவுக்குமீறி பட்டினியாக இருத்தலும் வரம்பை மீறி வயிறுபுடைக்கப் புசித்தலும் கூடாதவையாகும். ஏனெனில் அளவுக்குமீறி பட்டினியாக இருத்தல் தேக வலிமையைக் குன்றச் செய்வதுடன் முக்கிய குறிக்கோளான

நற்கிரியைகளைச் செய்யவும் தெம்பு இல்லாது போய்விடும். "உணவுண்ணாதவர் நோன்பு நோற்பவர் உண்ணாவிரதமிருந்து தன் மனக்குரங்கை ஒடுக்குகிறார்" என ஒருவருக்கு உலகத்தில் பிரபலம் ஏற்படுமாயின் அவரைக்காண பொது மக்கள் திரண்டு வருவர். இதனால் அவருக்கு ஒருவகை மகிழ்ச்சியும், தற்பெருமையும் கர்வமும் உண்டாக இடமேற்பட்டுவிடுகிறது.

வரம்பைமீறி வயிறுபுடைக்கப் புசித்தாலோ சோம்பல் மிகுத்து தொழுகை முதலிய கடமையான வணக்கங்களை சாவதானமாகவும் பயபக்தியுடனும் நிறைவேற்ற முடியாமல் தடை ஏற்படும். அன்றியும் அதனால் தேக வலிமை அதிகரித்து மிருக உணர்ச்சி மேலிட ஹேதுவாகிறது. ஆகையினால் தான் இவ்விரண்டினாலும் விளையும் மறைமுகமான கேடுகளைப் பயப்படுமாறு இங்கு தூண்டி உபதேசிக்கப்படுகிறது.

தவிரவும் அதிக உண்டிக்காரர் சோம்பல் மிகுந்தவரேயாகையால் தொழுகை முதலான வணக்கங்களைச் சாந்தியான மனத்துடனும், பயபக்தியுடனும், அமைதியாகவும் நிறைவேற்றாமல் அவசர அவசரமாக நிறைவேற்றுவார்; அல்லது காலங்கடத்தி நிறைவேற்றுவார்; சில சமயம் தவறவும் விட்டுவிடுவார். அதே நபர் அளவுக்கதிகமாக பட்டினி இருந்தாலோ பலங்குன்றி நல்அமல்களை அறவே செய்ய முடியாது போய்விடுகிறார். ஆகவே ஒரு காரியமும் செய்யாமல் அடியுடன் விடுவதைப்பார்க்கினும் ஓரளவேனும் நிறைவேற்றுவது சிறந்ததன்றோ? இதைக் கருத்தில் கொண்டே தான் இங்கு ஆசிரியப் பெரியார் கடும் பசியோடிருப்பது வயிற்றை நிரப்புவதைவிட எத்தனையோ மடங்கு கெடுதி விளைவிப்பதாகும் என இக்கவிதையின் பின்னடியில் குறிப்பிட்டுள்ளார்.



وَاسْتَفْرِغِ الدَّمْعَ مِنْ عَيْنٍ قَدِ امْتَلَأَتْ
مِنَ الْمَحَارِمِ وَالْزَمْ حِمْيَةَ النَّدَمِ



## 23-வது பாட்டு.

**மேலும் விலக்கப்பட்டவைகளே நிரம்பியுள்ள நேத்திரங்களிலிருந்து கண்ணீரை வடித்துக்காலிசெய்! (புரிந்த பாபங்களைப்பற்றிப்) "பச்சாத்தாபப்படல்" என்ற பாதுகாப்பை கடைப்பிடித்துக்கொள்.**

நன்மை, தின்மைகளைச் செய்ய மனிதனுக்குத் தூண்டுகோலாக இருப்பவைகளில் பார்வையும் ஒன்ருகும். பெரும்பாலான பாபகாரியங்களை மனிதன் பார்வையால்தான் செய்துவிடுகிருன். ஆகையால்தான், "விலக்கப்பட்டவைகளே நிரம்பியுள்ள நேத்திரங்களிலிருந்து" என இச் செய்யுளில் குறிப்பிடப்படுகிறது.

### மனத்தை முற்றும் கட்டுப்படுத்த முடியுமா?

"நப்ஸே அம்மாரு"வின் சேஷ்டைகளைக் குறைத்துக் கொள்வதற்கான முறைகள் தான் மேற்கண்ட கவிதைகளில் கூறப்பட்டுள்ளன. ஆனுல் அவற்றை அடியுடன் ஒழித்து விடுவதற்கான முறைகளல்ல. ஏனெனில், மனிதன் இப்பிரபஞ்சத்தில் வாழ்ந்துகொண்டு வரும்வரை அவனுக்கு உணவு முக்கியத் தேவைப்பொருளாகும்; இதனுல் மிருக பலமும் வளர இடமிருக்கிறது. மிருக பலமும், உணர்ச்சியும்

இருக்கும்வரை நப்ஸே அம்மாருவும் இருந்துவருவதுடன் அதன் சேஷ்டைகளும் இருக்கத்தான் செய்யும். ஆகவே, அதனே அடியோடு ஒழித்துவிடுவதென்பது மனிதனல் சாத்தியப்படும் காரியமன்று. ஆகையினல் மேலேகண்ட உபாயங்களால் அதன் சேஷ்டைகளேக் குறைத்த போதிலும் இடையிடையே பாபங்களேச் செய்து விடுதலும் சாலும். இவ்வாறு நிகழ்கின்ற பாபங்களுக்குரிய பரிகாரமும் இங்கு கூறப்படுகிறது. அதாவது "தௌபா" இஸ்திஃபார் எனும் பாபப் பிராயச்சித்தம் தேடிக்கொள்ளலாகும். தன்னுல் புரியப்பட்ட பாபச் செய்கைகளே நினைத்து உண்மையாகவே வருந்திப் பச்சாதாபப்பட்டு மனமுருகிக் கண்ணீர் வடித்து இனி மேற்கொண்டு அத்தகைய பாபக் கிரியைகளேச் செய்வதில்லே என்று சபதம் செய்யவேண்டும். இம்முறையில் பாப மன்னிப்பைத் தேடவேண்டுமென்பதேதான் இக்கவிதையின் கருத்தாகும்.



وَخَالِفِ النَّفْسَ وَالشَّيْطَانَ وَاعْصِهِمَا
وَإِنْ هُمَا مَحَضَاكَ النُّصْحَ فَاتَّهِمِ



## 24-வது பாட்டு.

நப்ஸு, ஷைத்தான் ஆகிய இருவரு(டைய போதனைகளு)க்கும் நீ விரோதமாக நடந்து, மாறும் செய்! அவ்விருவரும் களங்கமற்ற உபதேசத்தை உனக்குச் செய்திடினும், (கபடர்களான அவ்விருவரையும்) சந்தேகித்துக்கொள்.

## மனிதனின் பரம விரோதிகள் இருவர்.

மனிதனுக்கு இப்பிரபஞ்சத்திலுள்ள விரோதிகளில் மிகக் கொடியோர் இருவராவர். (1) "ஷைத்தான்" என்ற இப்லீஸ், (2) "நப்ஸு" என்ற அகம். இவ்விருவரும் மனிதனின் மரண பரியந்தம் அவனுடனிருந்துகொண்டு அவனைத் துன்மார்க்கத்தில் இழுத்துச்செல்ல மிகப்பெரிய பிரயத்தனங்கள் செய்கின்றனர்; மனிதனைக் கெடுத்துப் படுகுழியில் வீழ்த்திவிட வேண்டுமென்பது அவ்விருவரது அந்தரங்க நோக்கம். ஆகையால் அவ்விருவருக்கும் மாறுசெய்து அவர்களின் வார்த்தைகளுக்கு நேர்விரோதமாக நடக்கவேண்டும். அவ்விருவரும் எத்துணைப் பிரயத்தனப்பட்டும் கெடுதல் செய்ய முடியாவிட்டால் குறைந்தபக்ஷம் அதிக நன்மைகளை மனிதன் செய்யவிடாதபடி தடுக்க முயற்சிப்பார்கள். ஆதலால் அவ்விருவரின் உபதேசங்கள் நிஷ்களங்கமாகவும் நன்மைகளை எடுத்துரைப்பதாகவுமிருந்தபோதிலும் அவற்றில் ஏதேனும் சூழ்ச்சி இருக்கவேண்டுமென சந்தேகித்தல் வேண்டும். ஏனெனில் அவ்விருவரும் மனிதனின் ஜன்ம விரோதிகளாவர் என்பது இக்கவிதையின் கருத்தாகும்.

## இருவரில் யார் கொடிய விரோதி?

இப்லீஸாகிய ஷைத்தானைப் பார்க்கினும் நப்ஸுதான் பயங்கரமான விரோதியாகும். ஏனென்றால் இப்லீஸானவன் மனிதனுக்குப் புறம்பிலுள்ளவனுவன். இவன் விரோதி என்பதை யாவரும் எளிதில் உணர்ந்துகொள்ளமுடியும். ஆனால் நப்ஸு என்ற விரோதி மனிதனுள்ளேயே இருப்பதால் அதை எளிதில் உணர்ந்துகொள்வது சிரமமாகும். ஆகையால் தான் இக்கவிதையில் கொடிய விரோதியை முதலிலும், சிறிய விரோதியை இரண்டாவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.



وَلَا تُطِعْ مِنْهُمَا خَصْمًا وَّلَا حَكَمًا
فَأَنْتَ تَعْرِفُ كَيْدَ الْخَصْمِ وَالْحَكَمِ



## 25-வது பாட்டு.

மேலும், அவ்விருவரில் ஒருவன் (உனக்கு) எதிரியாயும், மற்றவன் மத்தியஸ்தனுயும் இருக்கும்பொழுது (எவனுக்கும்) நீ வழிபட்டுவிடாதே! ஏனெனில், எதிரியுடையவும் (ஒருதலைப் பட்சமான) மத்தியஸ்தனுடையவும் சூழ்ச்சியை நீ (நன்கு) அறிவாய்!

*சில சமயங்களில் அறிவு மனத்துடன் பிணங்குகிறது. அப்பொழுது அவ்விரண்டும் ஷைத்தானை மத்தியஸ்தனுக ஆக்கி தங்கள் மத்தியிலுள்ள விவகாரத்தைத் தீர்க்கும்படி கோருகின்றன. இந்நிலையில் மனமென்ற எதிரியும் மத்தியஸ்தனென்ற ஷைத்தானும் சூழ்ச்சி நிரம்பியவர்களாகையால் தீங்கின்பக்கமே அறிவை இழுத்துச் சென்றுவிடுவர். எனவே தான் எதிரியாக இருக்கும் நப்ஸே அம்மாருவிற்கும், மத்தியஸ்தனுக வரும் ஷைத்தானுக்கும் நீ வழிபட்டு விடாதே என ஆசிரியப் பெரியார் இங்கு கூறி "அவ்வாறு நீ அவர்களுக்கு வழிபட்டு விடுவாயாயின் நிச்சயமாக உன்னைக் கெடுத்து நாசமாக்கிவிடுவார்கள்" என்ற கருத்தையும் கொள்கிருர்.*



اَسْتَغْفِرُ اللّٰهَ مِنْ قَوْلٍ بِلَا عَمَلٍ
لَقَدْ نَسَبْتُ بِهٖ نَسْلًا لِذِيْ عُقُمٍ



## 26-வது பாட்டு.

செயலற்ற (வெறும் வாய்ச்) சொல்லுக்காக அல்லாஹ்வின்பால் நான் மன்னிப்புக் கோருகிறேன். (இது எவ்வாறிருக்கிறதென்றால்) நிச்சயமாக நான் மலட்டுத்தனமுடையாருக்கு சந்ததியைச் சேர்ப்பவள் (போன்று) ஆகிறேன்.

இங்கிருந்து மற்றொரு உபதேசத்தை ஆசிரியர் விபரிக்கிறார்.

### தான் தேறான் பிறரைத் தேற்றான்!

"தான் தேறான் பிறரை எப்படித் தேற்றுவான்?" என்ற முதுமொழிக்கேற்ப, தான் செய்யாமல் பிறரைச் செய்யும்படி கட்டளையிடுவது - போதிப்பது பெரியார்களின் வழக்கமல்ல. ஆகவே, அவ்வாறு தான் செய்ததற்காக ஆசிரியர் இறைவன்பால் மன்னிப்புக் கோருகிறார். இதைக்குறித்தே அல்லாஹ்வும் தனது திரு குர்ஆனில்,

விசுவாசிகளே! நீங்கள் செய்யாததை ஏன் சொல்கிறீர்கள் (61:2) என்றும்,

"உங்களை நீங்கள் மறந்துவிட்டு ஜனங்களுக்கு நீங்கள் நன்மையைக்கொண்டு ஏவுகிறீர்களா?" (2:44)

என்றும் கூறுகின்ருள். இது உபதேசம் செய்யும் ஞாகுசிரியர் நடந்துகொள்ளவேண்டிய ஒப்பற்ற முறையாகும். எனினும் ஆசிரியர் நடந்துகாட்டவில்லையேயென சிஷ்யன் கவனித்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. "நல்வார்த்தை கல்வில் எழுதப்பட்டிருந்தாலும் அதைப் புறக்கணித்தலாகாது'' என்பது முதுமொழியாகும்.

ஆகையால் இக்கவிதையிலும் இதற்குப் பின்வரும் இரு கவிதைகளிலும் கூறப்படும் லக்ஷணங்கள் ஞாகுசிரியருக்கும் பிரசாரகருக்கும் அவசியம் இருக்கவேண்டியவையாகும். இவைகள் கடைப்பிடிக்கப்பட்டுச் செய்யப்படும் உபன்னியாசங்கள்தாம் மக்களுக்குப் பயனளித்து நன்மை பயக்கும். இதற்குத்தான் இரு உலகிலும் மதிப்புண்டு. இக்கருத்தையேதான் திரு குர்ஆனும் பிரஸ்தாபித்துக்கொண்டிருக்கிறது.



أَمَرْتُكَ الْخَيْرَ لٰكِنْ مَا ائْتَمَرْتُ بِهِ
وَمَا اسْتَقَمْتُ فَمَا قَوْلِي لَكَ اسْتَقِمِ



## 27-வது பாட்டு.

நான் உனக்கு நலவை ஏவினேன்; எனினும் நான் அதற்கிணங்க ஒழுகவில்லை; நான் நேர்மையாக நடந்துகொள்ளவுமில்லை; எனவே "நீ நேர்மையாக நட!" என நான் உனக்குக் கூறுவது என்ன பயனளிக்கப்போகிறது?



وَلَا تَزَوَّدْتُ قَبْلَ الْمَوْتِ نَافِلَةً
وَلَمْ أُصَلِّ سِوَى فَرْضٍ وَّلَمْ أَصُمِ



## 28-வது பாட்டு.

உபரி வணக்கங்கள் (நபில் வணக்கங்கள்) எதையும் மரணத்திற்கு முன்பே நான் கட்டமுதாக எடுத்துக்கொள்ளவில்லை; (அதாவது முற்கூட்டியே நபில் வணக்கங்களில் எதையும் நான் செய்து கொள்ளவில்லை.) கடமையைத் தவிர்த்து உபரியாக (நான்) தொழுவுமில்லை; நோன்பு நோற்கவுமில்லை.

கடமையான தொழுகை, நோன்பு, ஆகியவற்றை (பர்லு) கட்டாயம் என்பதற்காக ஏதோ செய்து முடித்தேன். இதற்குமேல் நபிலான வணக்கங்கள் எதையும் திரிகரண சுத்தியோடும், பக்தியோடும் நான் நிறைவேற்றவில்லை. பர்லான (கடமையான) வணக்கங்களில் நிகழ்ந்துள்ள தவறுகளுக்கு இவைகள் நிவர்த்திப் பரிகாரமென நான் அறிந்திருந்தும் அவைகளை நான் செய்யாது போய்விட்டேன். அப்படியே செய்திருந்தாலும் உண்மையான பக்தியுடன் என்னுல் செய்யப்படவில்லை. இவை மரணத்திற்கு பின்புள்ள பிரயாணத்திற்கு கட்டமுதாக இருந்தும் அதை எடுத்துக் கொள்ளாது போய்விட்டேனே! என ஆசிரியப் பெரியார் இங்கு பிரலாபிக்கிருர்.

# மூன்றும் பிரிவு.

## நபிகள் பெருமான் (ஸல்) அவர்களின் திருப்புகழ்.



ظَلَمْتُ سُنَّةَ مَنْ اَحْيَى الظَّلَامَ اِلَى
اَنِ اشْتَكَتْ قَدَمَاهُ الضُّرَّ مِنْ وَرَمِ



## 29-வது பாட்டு.

**தனது இரு திருப்பாதங்களும் வீக்கத்தினலேற்பட்ட துன்பத்தை முறையிட்டுக்கொள்ளும்வரை இரு ளிரவை (வணக்கத்தால்) உயிர்ப்பித்தவ (ரான பெருமானு)ரின் நடைமுறையை விட்டுவிட்டேன்.**

இங்கிருந்து காதலர் தமது அசல் நோக்கத்தை வெளி யிடத் தொடங்குகிருர். தன்னுல் காதலிக்கப்பட்ட நபிகள் பிரான் (ஸல்) அவர்களின் தன்மைகளும் பழக்க வழக்கங் களும் எப்படியிருந்தன என்பதை விவரித்துவிட்டு தான் அவர்களை பின்தொடர்ந்து சென்று செய்யவேண்டிய நற் காரியங்களை ஸுன்னத்தான செய்கைகளைச் செய்யாது பாபி யாகிவிட்டேனே எனப் பிரலாபித்துக் கதறுகிருர்.

### பெருமானுரின் வணக்கம்.

நபிகள் பிரான் (ஸல்) அவர்கள் இரவு நேரங்களில் இஷாத் தொழுகையை நிறைவேற்றிய பின்னர் விசேஷ

வணக்கங்களில் ஈடுபட்டிருப்பார்கள். திரு குர்ஆனை ஓதுவ தற்குங்கூட அந்நேரமேதான் குறிப்பாக இருந்தது. இவை களை நிறைவேற்றிய பின்பு தஹஜ்ஜுத் என்ற நடுநிசி நபில் தொழுகைகளைத் தொழுவார்கள். அத்தொழுகையை எத் தனை 'ரக்அத்'களாகத் தொழுதார்கள்? என்ற விஷயத்தில் பல சொற்கள் உள்ளன. சிலர் எட்டு 'ரக்அத்'கள் என்றும், சிலர் பத்து அல்லது பன்னிரண்டு 'ரக்அத்'கள் தொழுதார் களென்றும் பலவாறுகக் கூறுகின்றனர். எப்படியாயினும் பன்னிரண்டு 'ரக்அத்'களுக்குமேல் தொழவில்லையென்று தெரிகிறது. எண்ணிக்கையில் இவை குறைவாக இருப்பினும் அதிக நேரம்வரை நிலையிலேயே நின்றவண்ணம் 'கிராஅத்' ஓதுவது வழக்கம். இதனுல் அவர்களது இரு திருப்பாதங் களும் உதிரச் சுரப்பினுல் வீங்கிவிடும். இதைக் கண்ணுற்ற உம்முல் மூமினீன் ஹஜ்ரத் ஆயிஷா நாயகி (ரலி) அவர்கள் பெருமானுரை நோக்கி, "அல்லாஹ்வின் தூதரே! முன்செய்த பாபம், பின் செய்யப்படும் பாபம் யாவற்றையும் தங்கள் விஷயத்தில் மன்னிக்கப்பட்டிருக்கையில் இத்தனை சிரமம் தாங்கள் எடுத்துக்கொள்வதேன்?" என வினவினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் நன்றியறித லுள்ள அடிமையாக இருக்கவேண்டாமா?" எனப் பதிலுறுத் தார்கள். இவ்விஷயம் ஹதீது ஷரீபில் ஹஜ்ரத் முகைரா (ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது.

பொதுவாக நோக்குமிடத்து நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் பெரும்பாலும் இராக்காலங்களில் பெரும் பாகத் தையும் வணக்கத்திலேயே கழிப்பார்கள். எஞ்சிய கொஞ்ச நேரங்களில்தான் துயில் கொள்வார்கள்.

ஆகவே அதிகம் நேரம் நின்று வணங்குவதால் கால் களில் வீக்கம் ஏற்பட்டுவிடும். இம்முறையில் தவம் புரிந்து

காட்டிய எம்பிரானின் வாழ்க்கை வழிமுறையை - நடைமுறையை அவர்களைப் பின்பற்றிய உம்மத்துக்களில் ஒருவனெனக் கூறிக்கொள்ளும் நான் சிறிதளவுகூட பின்பற்றி நடக்காமல் விட்டுவிட்டு அனியாயக்காரனாக ஆகியுள்ளேனே? என தன் நிலையையும் விளக்கி நம்மவர்களுக்கும் உபதேசிக்கிறார்.

## دُعَاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ مَنْبَعِ الْجُوْدِ
وَالْكَرَمِ وَمَعْدَنِ الْعِلْمِ وَالْحِلْمِ وَالْحِكَمِ وَبَارِكْ وَسَلِّمْ



## وَشَدَّ مِنْ سَغَبٍ اَحْشَاءَهٗ وَطَوٰى
## تَحْتَ الْحِجَارَةِ كَشْحًا مُتْرَفَ الْاَدَمِ



## 30-வது பாட்டு.

இன்னம் கடும்பசியின் காரணத்தால் (எம்பிரான் - ஸல் அவர்கள்) தமது வயிற்றை இறுகக் கட்டியும், மிருதுவான சருமத்தையுடைய இடையை கற்களுக்கடியில் சுற்றியும் வைத்திருந்தார்கள்.

## அகிழ் யுத்தமும், கடும் பசியும்.

ஹிஜ்ரி 5-ம் ஆண்டில் மக்கத்துக் குறைஷிகள் தமது மற்றைய சகாக்களுடன் சேர்ந்து மதீனாவைத் தாக்குவதற்கு ஒரு பெரும் படையைத் திரட்டினார்கள். இதனையறிந்த எம்பிரான் (ஸல்) அவர்கள் தற்காப்புனிமித்தம் வேண்டிய முஸ்தீப்புகளைச் செய்தார்கள். முஸ்லிம்களை இவ்வாபத்தி னின்றும் காப்பாற்றும்பொருட்டு தனது நேயர்களை அழைத்து மந்திராலோசனை செய்தனர். திரு மதீனாவைவிட்டு வெளி யேறாமல் அங்கேயே இருந்துகொண்டு குறைஷிகளை எதிர்த்து தற்காப்புப் போர் செய்யவேண்டும்; நகரைவிட்டும் முஸ்லிம் வீரர்களை வெளியேற்றி வெகு தொலைவிற்குக் கொண்டுபோவதற்குரிய ஸ்திதியில் நகரம் இல்லை எனத் தெரிவித்தனர். இவ்வபிப்பிராயம் எல்லோராலும் அங்கீகரிக் கப்பட்டது.

பொதுவாக நகரங்கள் முற்றுகையிடப்பட்டால் எப்படி நடந்துகொள்வது வழக்கமென்ற விபரத்தை ஹஜ்ரத் ஸல்மான் "அல்பாரிஸீ" (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள். அதன்பேரில் நகரைச் சுற்றிலும் மூன்று பக்கங்களில் மலை இருப்பதால் ஒரு பக்கத்தில் மட்டும் அகிழ் வெட்டி நானு பக்கங்களிலும் முஸ்லிம் வீரர்களை நிறுத்தி எதிரிகளை நகரி னுள் பிரவேசிக்கவிடாமல் தடுக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. இதற்கிணங்க இயற்கைப் பாதுகாப்பற்ற ஸ்தலத்தில் அகிழ் தோண்டினார்கள். இவ்வகிழ் வெட்டும் வேலையில் நாயகம் (ஸல்) அவர்கள் உள்பட திரு மதீனாவி லுள்ள எல்லா ஸஹாபாக்களும் நேர்முகமாகக் கலந்து பணி யாற்றினார்கள். அகிழ் வெட்டிக்கொண்டிருக்கையில் ஓரிடத் தில் ஒரு பெரும் பாறை குறுக்கிட்டது. அதனை ஸஹாபாக் கள் சம்மட்டியால் அடித்தார்கள். பாறை உடையவில்லை.

இதனைக் கண்ணுற்ற நபி பெருமான் (ஸல்) அவர்கள் சம்மட்டியை வாங்கி அப்பாறையை உடைத்து தகர்த்தார்கள். அச்சமயத்து தல்ஹா (ரலி) அவர்களும் மற்றையோரும் தாங்கள் பசியால் வாடுவதாயும் அதனைத் தணிக்க வயிற்றில் கல்லை வைத்துக் கட்டிக்கொண்டிருப்பதாயும் தெரிவித்து, வயிற்றைத் திறந்து காட்டினர். அப்பொழுது நம் பெருமாள் (ஸல்) அவர்கள் தமது வயிற்றைத் திறந்து காட்டினார்கள். அதில் இரண்டு கற்கள் வைத்துக் கட்டப்பட்டிருந்தது தெரியவந்தது. இச்சம்பவத்தையே ஆசிரியர் இவண் சுட்டிக்காண்பிக்கிறார்.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் இவ்வாறு கற்களை வைத்துக் கட்டியிருந்தது உணவிற்கு எதுவும் கிடைக்காமல் பட்டினியாக இருந்தல்ல; பசித்திருக்கவேண்டும், அவ்வப்பியாசத்தில் தனது நேயர்களையும் தேற்றவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே அவ்வாறு பசித்திருந்தார்கள் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இவ்வுண்மையை இதற்கடுத்த பாட்டின்மூலம் உணரலாம்.



وَرَاوَدَتْهُ الْجِبَالُ الشُّمُّ مِنْ ذَهَبٍ
عَنْ نَفْسِهٖ فَاَرَاهَا اَيَّمَا شَمَمِ



# 31-வது பாட்டு.

மிகவும் உயர்ந்த தங்க மலைகள் அவர்களைத் தம்பால் அழைத்து வறுமையை அகற்றிக்கொள்ளவேண்டின. ஆனால் அவர்கள் அவற்றைப் புறக்கணித்துத் தனது உயர்வைக் காட்டினார்கள். புறக்கணிக்கும் உயர் நோக்கம் இருந்தவாறுதானென்னே!

## பெருமானாரின் உலகத் தேவைகளும், பற்றிலாத் தன்மையும்.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் திருமக்காவில் சத்திய சன்மார்க்கப் பிரசாரம் தொடங்கியகாலை அதற்காகும் செலவினங்களுக்கு உம்முல்மூமினீன் ஹஜ்ரத் கதீஜா (ரலி), ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) போன்றவர்கள் தங்கள் திரவியங்களையளித்து உதவினர். இச்செல்வங்கள் செலவான பின்னர் பணக்கஷ்டங்கள் ஏற்பட்டன. இதனைக்குறித்து ஹஜ்ரத் கதீஜா நாயகி (ரலி) அவர்கள் மிகவும் கவலைப்படுவதை உணர்ந்த பெருமானார் (ஸல்) அவர்கள் சற்று மன வேதனையடைந்தார்கள். அச்சமயத்து திருமக்காவிலுள்ள உயர்ந்த பர்வதங்கள் நபி (ஸல்) அவர்களை நோக்கி, இதோ! எம்மிடமுள்ள திரவியங்களை எடுத்து தங்களது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வீர்களாக! எனக் கூறியதாயும், அவ்வாறு எடுத்துக்கொள்ள பெருமானார் (ஸல்) அவர்கள் மறுத்துவிட்டதாயும் கூறப்படுகிறது.

அன்றியும் இதனைத் தழுவியே பல ஹதீதுகளும் வந்திருக்கின்றன.

"எனது ரக்ஷகன் திருமக்காவின் பர்வதங்களை தங்கம், வெள்ளியாக மாற்றி எனக்களித்தான். அப்பொழுது நான், "எனது இறைவா! எனக்கு இவை தேவையன்று. ஒரு தினம் வயிறு நிரம்பப் புசித்து உனக்கு நன்றி செலுத்துவதையும், மறுதினம் பசித்திருந்து உன்னிடம் கெஞ்சுவதையும் விரும்புகிறேன்" எனக் கூறினேன். அச்சமயத்து ஹஜ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை நோக்கி, "திட்டமான சொற்களைக்கொண்டு இறைவன் உங்களை ஸ்திரப்படுத்திவிட்டான்" எனக் கூறினார்கள் என்பதாக பெருமான் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்."

இந்த ஹதீதை ஹஜ்ரத் அபூஉமாமத்துல் பாஹிலி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.



وَاَكَّدَتْ زُهْدَهُ فِيهَا ضَرُورَتُهُ
اِنَّ الضَّرُورَةَ لَا تَعْدُو عَلَى الْعِصَمِ



## 32-வது பாட்டு.

அவற்றில் (மேற்கண்ட செல்வங்களில்) அவர்களது தேவைகள் (மிக அதிகமாகயிருந்துங்கூட) அவர்களின் பற்றற்ற தன்மையையே ஸ்திரப்படுத்திவிட்டன. ஏனெனில் உலகாவசியத் தேவைகள் பாபங்களை விட்டு பாதுகாக்கப்பட்ட (நபிய)வர்களிடம் பலிக்காது.

இவ்வுலகில் மாந்தருக்கேற்படுகிற அன்றாடத் தேவைகள் அவர்கள் உலக பாந்தவ்யத்தைத் தேடுவதற்குக் காரணங்களாய் அமைகின்றன. சிற்சில சமயங்களில் அத்தேவை

கள் உச்ச நிலையையடைந்து அவர்களது துறவறத்தையுங் கெடுத்துவிடுகின்றன. எனினும் நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் நபியாகயிருப்பினும், மானிட வர்க்கத்தைச் சார்ந்தவர்களாகையால், ஏனைய மனிதர்களுக்கு ஏற்படுகிற அன்றாடத் தேவைகள் இவர்களுக்கும் ஏற்பட்டுக்கொண்டு தான் இருந்தன. ஆயினும் மற்றவர்கள் போன்று பெருமானவர்கள் இத்தேவைகளுக்கு அடிமைப்பட்டு துறவறத்தை கைவிட்டுவிடவில்லை. இதுமட்டுமென்ன? இவர்களுக்கு உலகத் தேவைகள் அதிகரிக்கும் காலத்திலும் இவர்களது துறவறம் மிகவும் மேம்பாடுற்றே மிளிர்ந்துகொண்டிருந்தது. ஏனென்றால் இப்பிரபஞ்சத்தின் தன்மையையும், லக்ஷணங்களையும் அவர்கள் பரிபூரணமாக உணர்ந்துவைத்திருந்தநால் அவைகளுக்குப் பெருமான் (ஸல்) அவர்கள் மதிப்புக் கொடுக்கவில்லை. இதற்குரிய காரணத்தை அடுத்த செய்யுளில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.



وَكَيْفَ تَدْعُوْ إِلَى الدُّنْيَا ضَرُوْرَةُ مَنْ
لَوْلَاهُ لَمْ تُخْرَجِ الدُّنْيَا مِنَ الْعَدَمِ



## 33-வது பாட்டு.

(பெருமான்-ஸல்) அவர்கள் தோற்றுவிக்கப்பட்டு இல்லாவிடின் இவ்வுலகு இல்லாமையிலிருந்து உற்பத்தியாக்கப்பட்டிராத ஒருவரின் தேவைகள், எங்ஙனம் அவர்களை இவ்வுலகின்பால் அழைக்க முடியும்?

## சற்குணர் (ஸல்) சிருஷ்டிக்கப்படாவிடின் சர்வ உலகும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கா?

நபிமார்கள் பாபச் செய்கைகளை விட்டும் இறைவனால் பாதுகாக்கப்பட்டிருக்கின்றனர். ஆகையால் இவ்வுலகத் தேவைகள் அவர்களை இல்லறத் துறவறத்திலிருந்து திருப்பி சுயநலமிகளாக ஆக்கிவிடமுடியா. இவ்விஷயத்தில் அவர்களுக்கு இவ்வுலக சாதனங்கள் எத்துணைதான் முக்கியத் தேவையுடையவையாயினும், அவர்களது துறவறத் தன்மையைப் பாதிக்காது. எனவே இம்முக்கியத் தேவைகளினிமித்தம் தங்களது உயரிய லக்ஷியத்தை விட்டு கொஞ்சமும் அவர்கள் நழுவமாட்டார்கள்.

மேலும், இவ்வுலகில் மனித வர்க்கத்தைத் தோற்றுவிக்க வேண்டும்; அவர்களுக்கு வழிகாட்டும் பொருட்டு நபிகள் பெருமான் (ஸல்) அவர்களை நபியாக அனுப்பவேண்டுமென்றே இறைவன் இவ்வுலகினையும், அதன் வஸ்துக்களையும் தோற்றுவித்தான். இறுதிநபி (ஸல்) அவர்கள் உலகிற்கு எழுந்தருளியது கடைசி காலமாயினும் ஜோதி ரூபத்தில் உலகுக்கு முன்பு படைக்கப்பட்டவர்கள் என்பதற்கு அவர்கள் வாக்கே ஆதாரமாக அமைகின்றன.

"(ஆதி பிதா) ஆதம் (அலை) அவர்கள் உழை மண்ணிற்கும் தண்ணீருக்கும் மத்தியிலிருக்குங்கால் நான் நபியாக இருந்தேன்." (அல்ஹதீது)

"(நபியே!) நீர் இல்லையாயின் வானங்களை நான் சிருஷ்டித்திருக்கமாட்டேன்." (அல்ஹதீதுல் குத்ஸிய்யி)

"இறுதியில் தோன்றும் முஹம்மதின் பொருட்டால் தனது குற்றத்தை மன்னிக்கும்படி ஆதம் நபி (அலை) அவர்கள் இறைவனிடம் வேண்டிக்கொண்டபொழுது,

அவர்களை (ஆதமை) நோக்கி இறைவன், உமது குற்றத்தை நான் மன்னித்தேன். அவர் (முஹம்மத்) இல்லையாயின் உம்மை நான் சிருஷ்டித்திருக்கவே மாட்டேன் என இறைவன் சொன்ஞன்."

(அல்ஹதீது: ஹாகிம், பைஹகீ.)

இக்கருத்தைக்குறித்து மகாகவி உமருப்புலவரும் தாது சீருப்புராணத்தில் பின்வரும் கவிகள்மூலம் வெகு அழகாகச் சித்தரித்துக் காண்பிக்கிருர்.

"கலைமறை முஹம்மதென்னும் காரணமில்லையாயின்
உலகுவிண் இரவி திங்கள் ஒளிநாடு கணஞ்சுவர்க்கம்
மலைகடல் நதிபாதாளம் வானவர் முதலாயும்மை
நிலையுறப் படைப்பதில்லை யெனஇறை நிகழ்த்திஞனே."

இத்தனை உயர்வுபெற்ற நபிபெருமான் (ஸல்) அவர்களை இவ்வகிலத்தின் தேவைகள் எங்ஙனம் நிர்ப்பந்திக்கமுடியும்? ஒருக்காலு முடியா?



مُحَمَّدٌ سَيِّدُ الْكَوْنَيْنِ وَالثَّقَلَيْنِ
وَالْفَرِيقَيْنِ مِنْ عُرْبٍ وَّمِنْ عَجَمِ



## 34-வது பாட்டு.

முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் (இம்மை மறுமை ஆகிய) இரு உலகிற்கும் (மனித, ஜின் ஆகிய) இரு வகுப்பினருக்கும் அறபியர், அறபி அல்லாதார் ஆகிய இரு பிரிவினருக்கும் தலைவராவார்கள்.

இதுவரை காதலரான ஆசிரியப் பெரியார் நபிகள் பெருமான் (ஸல்) அவர்களது திருநாமத்தைக் கூறாது அன்னாரின் தன்மைகளை மட்டுமே குறிப்பிட்டு வந்தார். இவண் அவர்களினது உயரிய திருநாமத்தைக் குறிப்பிட்டு அவர்கள் சர்வகோடி ஜீவராசிகளுக்கும் தலைவராக இருக்கின்றார்கள் என்பதை நிரூபித்துக் கூறுகிறார்.

## دعَا

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا وَنَبِيِّنَا مُحَمَّدٍ فِي الْاَوَّلِيْنَ وَصَلِّ
عَلٰى سَيِّدِنَا وَنَبِيِّنَا مُحَمَّدٍ فِيْ كُلِّ وَقْتٍ وَحِيْنٍ وَصَلِّ عَلٰى
سَيِّدِنَا وَنَبِيِّنَا مُحَمَّدٍ مَادَامَتِ السَّمٰوَاتُ وَالْاَرْضُوْنَ وَصَلِّ
عَلٰى سَيِّدِنَا وَنَبِيِّنَا مُحَمَّدٍ حَتّٰى تَرِثَ الْاَرْضَ وَمَنْ عَلَيْهَا وَاَنْتَ
خَيْرُ الْوَارِثِيْنَ وَصَلِّ عَلَى الْجَمِيْعِ الْاَنْبِيَآءِ وَالْمُرْسَلِيْنَ وَعَلٰى
مَلٰئِكَتِكَ الْمُقَرَّبِيْنَ وَعَلٰى عِبَادِكَ الصّٰلِحِيْنَ وَعَلٰى اَهْلِ
طَاعَتِكَ اَجْمَعِيْنَ وَارْحَمْنَا مَعَهُمْ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرّٰحِمِيْنَ
اَللّٰهُمَّ مَا كَانَ لَنَا خَيْرًا فِيْ دِيْنِنَا وَدُنْيَانَا اِفْتَحْ لَنَا اَبْوَابَهُ وَيَسِّرْ
عَلَيْنَا اَسْبَابَهُ وَمَا كَانَ لَنَا شَرًّا فِيْ دِيْنِنَا وَدُنْيَانَا اَغْلِقْ عَلَيْنَا
اَبْوَابَهُ وَعَسِّرْ عَلَيْنَا اَسْبَابَهُ فَاِنَّكَ تَعْلَمُ وَنَحْنُ لَا نَعْلَمُ وَ
اَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ

نَبِيُّنَا الْاٰمِرُ النَّاهِيْ فَلَا اَحَدٌ
اَبَرَّ فِيْ قَوْلِ لَا مِنْهُ وَلَا نَعَمِ

## 35-வது பாட்டு.

எமது (நபி பிரான்-ஸல்) அவர்கள் (நன்மையான வற்றை) ஏவி, (தின்மையானவற்றை) விலக்குபவ ராவர். எனவே "ஆம்" அல்லது "அல்ல" என்ற வாக்கில் அவர்களைவிட வேறெவரும் சத்தியவந் தரல்லர்.

மனித இயல்பில் சிற்சில சமயம் இல்லாதவற்றை "உண்டு" என்றும், இருப்பவற்றை "இல்லை" என்றும் திரித்துக் கூறுவது வழக்கமாக இருக்கிறது. இவ்வாருன முரண்பாடு - சிறிய பொய்கூட நமது நபிகள் பிரான் (ஸல்) அவர்கள் விஷயத்தில் எச்சமயத்தும் ஏற்பட்டதே இல்லை. இருப்பவற்றை "ஆம், உண்டு" என்றும், இல்லாதவற்றை "இல்லை" என்றும் மெய்யாகவே கூறும் சத்தியவந்தராவார்கள் என்ற கருத்தையே இங்கு விளக்குகிறர்.

هُوَ الْحَبِيْبُ الَّذِيْ تُرْجٰى شَفَاعَتُهٗ
لِكُلِّ هَوْلٍ مِّنَ الْاَهْوَالِ مُقْتَحِمِ

# 36-வது பாட்டு.

**(பெருமான்-ஸல்) அவர்கள் ஒரு உயரிய நேசராவர்; திடுமெனக் கடினமாகச் சம்பவிக்கும் சகல பயங் கரமான கஷ்டங்களுக்கு (நிவாரணமாக) அவர் களின் 'சிபாரிஷை' ஆதரவு வைக்கப்படுகிறது.**

ஷைத்தான், நப்ஷு ஆகிய இரு ஜன்ம விரோதிகளின் மத்தியில் உழல்கின்ற மனிதன் இவ்வுலக மாய்கையில் சிக்காமலிருக்கமுடியாது. அபூர்வமாக வெகு சொற்ப நபர் கள்தான் இதிலிருந்து தப்பிப் பிழைக்கின்றனர். மற்றை யோர் அதிகமோ குறைவோ எவ்விதத்திலாயினும் பாபங் களிற் சிக்கிவிடுகின்றனர். இதன் காரணமாக மறுமையில் இறைவனுல் விசாரிக்கப்படும்பொழுது தாங்கள் உலகில் செய்த காரியங்களுக்காக அடையப்போகும் பயங்கரமான வேதனைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள ஒரு பெரிய மகா னின் சகாயமும் சிபாரிஷும் அத்தியாவசியமாகவிருக்கின் றன. இத்தகைய சிபாரிஷை 'ஷபாஅத்தை' எம்பிரான் (ஸல்) அவர்கள் மறுமையில் செய்வார்கள்; அவர்களது சிபாரிஷ் ஒவ்வொருவராலும் எதிர்பார்க்கப்படும். ஏனெனில் அவர்களோ எல்லோராலும் விரும்பப்படும் உயரிய நேசரா வார்கள்.



# دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ يَا مُفَتِّحَ الْاَبْوَابِ
وَيَا مُسَبِّبَ الْاَسْبَابِ وَيَا مُقَلِّبَ الْقُلُوْبِ وَالْاَبْصَارِ وَيَا
دَلِيْلَ الْمُتَحَيِّرِيْنَ اَغِثْنَا اَغِثْنَا تَوَكَّلْنَا عَلَيْكَ وَفَوَّضْنَا
اَمْرَنَا اِلَيْكَ يَا رَزَّاقُ يَا فَتَّاحُ يَا بَاسِطُ اَللّٰهُمَّ اِنَّا نَعُوْذُ
بِكَ مِنَ الْهَمِّ وَالْحَزَنِ وَالْغَمِّ وَنَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ
وَنَعُوْذُ بِكَ مِنَ الْجُبْنِ وَالْبُخْلِ وَنَعُوْذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ
وَقَهْرِ الرِّجَالِ اَللّٰهُمَّ اجْعَلْنَا مَحْبُوْبِيْنَ فِيْ قُلُوْبِ الْمُؤْمِنِيْنَ
وَبَلِّغْنَا بِمِائَةٍ وَعِشْرِيْنَ سَنَةً مِنْ غَيْرِ ضُعْفٍ وَعِلَّةٍ وَفَقْرٍ
وَفَاقَةٍ فَاللّٰهُ خَيْرٌ حَافِظًا وَهُوَ اَرْحَمُ الرَّاحِمِيْنَ ۝
اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى نَبِيِّكَ الْبَشِيْرِ الدَّاعِيْ اِلَيْكَ بِاِذْنِكَ السِّرَاجِ الْمُنِيْرِ

دَعَا اِلَى اللّٰهِ فَالْمُسْتَمْسِكُوْنَ بِهٖ
مُسْتَمْسِكُوْنَ بِحَبْلٍ غَيْرِ مُنْفَصِمِ

## 37-வது பாட்டு.

**அவர்கள் அல்லாஹ்வின்பால் (மாந்தர்களை) அழைத்தார்கள். அவர்களைக் கெட்டியாகப் பிடிப்பவர்கள் அறுந்துபோகாத (பலமான) கயிற்றைப் பற்றிப் பிடித்த(வர்கள் போன்ற)வராவார்கள்.**

"அல்லாஹ்வின்பால் அழைப்ப"தென்பது சன்மார்க்கப் பிரசாரம் செய்ததையும், "அறுந்து போகாத பலமான கயிறெ"ன்பது சத்திய சன்மார்க்கமாம் இஸ்லாத்தையும் குறிக்கின்றன. ஏனெனில் இஸ்லாமானது சம்பூர்ணமாக்கப் பெற்ற மார்க்கமாகும். இவ்வகிலம் அழியும்வரை அதுவே சன்மார்க்கமாகத் திகழுமென்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை.

دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ اَللّٰهُمَّ ارْزُقْنَا حُبَّكَ
وَحُبَّ مَنْ يُّحِبُّكَ وَحُبَّ عَمَلٍ يُّقَرِّبُنَا اِلٰى حُبِّكَ وَاجْعَلْ حُبَّكَ
اَحَبَّ اِلَيْنَا مِنَ الْبَارِدِ لِلْعَطْشَانِ وَاسْقِنَا بِكَأْسِ مُحَمَّدٍ صَلَّى
اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ شَرْبَةً لَّا نَظْمَاُ بَعْدَهَا يَاذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ ۝

فَاقَ النَّبِيِّينَ فِي خَلْقٍ وَفِي خُلُقٍ
وَلَمْ يُدَانُوهُ فِي عِلْمٍ وَلَا كَرَمِ

## 38-வது பாட்டு.

(பெருமான்-ஸல்) அவர்கள் சற்குணத்திலும் வடிவிலும் மற்றைய நபிமார்களைவிட மேம்பட்டு விட்டார்கள். அறிவிலும் பெருந்தன்மையிலும் (அண்ணல் நபிய)வர்களுக்கு அவர்கள் (மற்றைய நபிமார்கள்) நெருங்க (முடிய)வில்லை.

### நபி பெருமானும், இதர நபிமார்களும்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள் வடிவில் மிக அழகானவர்கள். வெளியுறுவில் அழகிருப்பதுபோன்று உள்ளழகான சற்குணத்திலும் சிறந்தவர்கள். எனவே இலட்சணம், குணம், அறிவு, தயை, பெருந்தன்மை, கொடை முதலான நற்குணங்கள் யாவும் ஒருங்கே அமையப்பெற்றிருந்தார்கள். மற்றைய நபிமார்களிடமும் இந்தற்குணங்கள் அமைந்திருந்தன என்றாலும் அவர்களிடம் இவை யாவும் ஒருங்கே அமையப்பெற்றில்லை. ஆகையால்தான் மற்றையவர்களைவிட பெருமான் (ஸல்) அவர்கள் மேம்பட்டவர்கள் என்பதை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

> **"நான் ஆதம் (அலை) அவர்களுடைய புதல்வர்களின் தலைவனாவேன். ஆனால் (நான்) பெருமை (கொண்டுவிட) இல்லை."** (அல்ஹதீது: புகாரி)

என்ற பெருமானாரின் வாக்கும் மேற்கண்ட கருத்தை ஊர்ஜிதம் செய்கிறது. அடுத்துவரும் செய்யுட்களும் அவர்களின் மேம்பாடுகள் பற்றி விவரித்துக் கூறுகின்றன.



وَكُلُّهُمْ مِنْ رَسُولِ اللّٰهِ مُلْتَمِسٌ
غَرْفًا مِنَ الْبَحْرِ اَوْ رَشْفًا مِنَ الدِّيَمِ



## 39-வது பாட்டு.

இன்னம் அவர்கள் (மற்றைய நபிமார்கள்) அல்லாஹ்வின் தூதர் [பெருமான் (ஸல்) அவர்கள்] மூலம் [ஞான] சமுத்திரத்திலிருந்து ஒரு சொங்கையளவு, அல்லது (அறிவென்ற) விடா மழையிலிருந்து ஒரு துளியளவைத்தான் பெற்றனர்.



وَوَاقِفُوْنَ لَدَيْهِ عِنْدَ حَدِّهِمِ
مِنْ نُقْطَةِ الْعِلْمِ اَوْ مِنْ شَكْلَةِ الْحِكَمِ



## 40-வது பாட்டு.

(எம்பிரான்-ஸல்) அவர்கள் முன்னிலையில் (மற்றைய நபிமார்களான) அவர்கள் அறிவின் ஒரு புள்ளி,

அல்லது ஞானத்தின் ஒரு வடிவம் என்ற எல்லையில்தான் நிற்கின்றனர்.

மற்றைய நபிமார்களுக்கு அளிக்கப்பெற்றிருக்கும் ஞானத்தையும், அறிவையும் நம்பிரான் (ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்றுள்ள ஞான அறிவுடன் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, மற்றையோரின் அறிவு ஞானமெல்லாம் ஒரு புள்ளி போன்றும், பெரிய சித்திரத்தின் சிறிய வடிவம் போன்றுமே இருக்கின்றன என்பது இங்கு கருத்தாக கொள்ளப்படுகிறது.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدِنِ السَّابِقِ اِلٰى مَقَامِ الْاِصْطِفَاۤءِ
وَاٰلِهٖ وَاَصْحَابِهٖ ذَوِى الصِّدْقِ وَالْوَفَاۤءِ وَالْعِرْفَانِ اَلْمُسْتَغَاثُ
يَا رَسُوْلَ اللّٰهِ اَلشَّفَاعَةَ يَا رَسُوْلَ اللّٰهِ اَلْخَلَاصَ يَا رَسُوْلَ
اللّٰهِ اَلْاَمَانَ يَا رَسُوْلَ اللّٰهِ



فَهُوَ الَّذِيْ تَمَّ مَعْنَاهُ وَصُوْرَتُهٗ
ثُمَّ اصْطَفَاهُ حَبِيْبًا بَارِئُ النَّسَمِ



## 41-வது பாட்டு.

எனவே [நபி பிரான் (ஸல்)] அவர்களது உள்நிலையும், வெளியுருவும் (அழகால்) சம்பூரணமெய்திவிட்டது. அப்பால் சிருஷ்டிகர்த்தா (வான அல்லாஹ்) அவர்களை(த் தனது) அன்பராகத் தெரிந்தெடுத்துக்கொண்டான்.



مُنَزَّهٌ عَنْ شَرِيكٍ فِي مَحَاسِنِهِ
فَجَوْهَرُ الْحُسْنِ فِيهِ غَيْرُ مُنْقَسِمِ



## 42-வது பாட்டு.

அவர்கள் தனது நற்குணங்களில் நிகராகுபவரை விட்டும் பரிசுத்தம் செய்யப்பட்டவர். அவர்களில் அமைந்துள்ள அழகெனும் அசல் (ஜௌஹர்) பங்கிடத் தகுந்ததன்று.

### அழகில் அவர்களுக்கு நிகர் அவர்களே.

ஹஜ்ரத் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவித்த பின்வரும் ஹதீதையே இச்செய்யுள் குறிப்பிடுகிறது.

"முதன்முதலாகச் சிருஷ்டிக்கப்பெற்றது எது?" என நான் (ஜாபிர்) அல்லாஹ்வின் தூதரிடம் வினவிய பொழுது, "முதன்முதலில் உமது நபியின் ஜோதியை அல்லாஹ் சிருஷ்டித்தான்; அப்பால் அந்த ஜோதியை

எங்கணும் பரவச்செய்தான். அந்த ஒளியிலிருந்தே அர்ஷு, குர்ஸீ, லௌஹு, கலம், விண், மண், ஆதம் (அலை) முதலிய எல்லாவற்றையும் சிருஷ்டித்தான்." எனப் பதிலளித்தார்கள்.

ஆகவே, இந்த ஹதீதின்மூலம் இப் பூமி, வானம், இவற்றிலுள்ள யாவும் நாயகம் (ஸல்) அவர்களுடைய ஜோதியினின்றும் உற்பத்தியாகியிருக்கும்பொழுது, அவர்களுக்கு நிகராக ஒப்பாக எவரும் இருக்கமுடியாதென்பது புலனாகிறது. அன்றியும் நபிகள் பிரான் (ஸல்) அவர்களது அசல் சாரமான ஆதி ஒளியைத்தான் ஆசிரியப் பெரியார் இச்செய்யுளில் "ஜௌஹர்" என்று குறிப்பிடுகிறார். "ஜௌஹர்" என்ற பதத்திற்கு இரத்தினம் என்ற பொருளும் கொள்ளப்படுகிறது. அப்பொருளும் இங்கு பொருந்தவே செய்யும். மேலே கூறப்பட்ட சர்வ வஸ்துக்களும் இந்த ஜோதியாகிய இரத்தினத்திலிருந்து பங்குவைத்துச் சிருஷ்டிக்கப்படாமல் இதிலிருந்து பரவிய பிரகாசத்தைக்கொண்டேதான் சிருஷ்டிககப்பட்டிருப்பதாக முன்கூறப்பட்ட ஹதீது அறிவிக்கிறது. எனவே பெருமான் (ஸல்) அவர்களின் ஆதிஒளிவான மூல இரத்தினம் பங்குவைத்துக் குறைந்துபோகாமல் அசலில் இருக்குமளவிற்கே இருந்துவருகிறதென்பது இதிலிருந்து விளங்குகிறது. இக்கருத்தையே நமது ஆசிரியப்பெரியார் இங்கு பிரஸ்தாபிக்கிறார்.



دَعْ مَا ادَّعَتْهُ النَّصَارٰى فِيْ نَبِيِّهِمِ
وَاحْكُمْ بِمَا شِئْتَ مَدْحًا فِيْهِ وَاحْتَكِمِ



# 43-வது பாட்டு.

*கிறிஸ்தவர்கள் தங்களது நபி(யான ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்கள்) விஷயத்தில் ("அல்லாஹ்வின் புதல்வன்" என்று) வாதித்த(துபோல் வாதிப்ப)தை மட்டும் நீ விட்டுவிட்டு மற்றைய எந்தப் புகழையும் அவர்கள் விஷயத்தில் நீ விரும்பியபடி கற்பித்துக்கொள்; அன்றியும் (அப்புகழை நிலை நாட்டி) ஸ்திரப்படுத்து.*

## ஈஸா நபியைக்குறித்து கிறிஸ்தவர்களின் கொள்கையும், நபிமார்களைப் புகழவேண்டிய ஒழுங்குமுறையும்.

*கிறிஸ்தவர்கள் தங்களது நபியாகிய ஹஜ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் அவர்கள் சம்பந்தமாக எல்லைமீறிப் புகழ்ந்து மதிப்பிடுகின்றனர். அன்னோர் உலகிற் றோன்றிச் செய்த அற்புதங்களையும் மக்களைத்திருத்த ஆற்றிய உபதேசங்களையும் பார்த்துப் பிரமித்து "பிதா, குமாரன், பரிசுத்த ஆவி" என்ற திரியேகத்துவக் கொள்கையைக் கற்பித்துவிட்டனர். "பிதா" என்றால் இறைவன்; "குமாரன்" என்றால் ஏசுநாதர்; "பரிசுத்த ஆவி" என்றால் ஹஜ்ரத் ஜிப்ரீல் (அலை) என்ற கருத்தைக்கொண்டு மூவரையும் தெய்வங்களாகக் கிறிஸ்தவர்கள் கொண்டாடுகின்றனர்.*

ஒரு நபியானவர் எவ்வளவுதான் உயர்ந்த அந்தஸ்து உடையவராயினும் எத்தனை அற்புதங்களைக் காட்டியிருப்பினும் வணங்கப்படத்தகுந்த தெய்வமாக ஆகிவிட முடியாது.

ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களும் இவ்வுலகில் மாந்தருக்கு சன்மார்க்கத்தைப் போதிக்கவும் தெய்வ வணக்கத்தின் கடமையை உணர்த்தவுமே வந்தார்கள். ஏக தெய்வ வணக்கத்தையே அவர்கள் உபதேசித்து தங்கள் கடமையை அவர்கள் நிறைவேற்றினார்கள். அவர்களது சீடர்களும் அதனையே போதித்தனர் ஆனால் அவர்களுக்குப்பின் தோன்றிய கிறிஸ்தவர்கள் ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களைக் "கடவுளின் குமாரன்'' என்றும், கடவுள் என்றும் பலவிதமாகக் கூறி ஏகதெய்வ வணக்கத்துக்கு இடையூறு விளைவித்ததுடன் திரியேகத்துவக் கொள்கையையும் புகுத்திவிட்டனர். நமது ஆசிரியப் பெரியார் இச் சம்பவத்தை இவண் சுட்டிக்காண்பித்து அக் கிறிஸ்தவர்கள் போன்று நாமும் நபிபெருமான் (ஸல்) அவர்களை எல்லைமீறி உயர்த்தி தகாத புகழ்களைப் புகுத்திவிட வேண்டாமென எச்சரிக்கிறார். ஏகதெய்வ கொள்கைக்கு இடையூறு விளைவிக்கும் எந்த வாழ்த்துதலையும், போற்றுதலையும் நபிகள் பிரான் (ஸல்) அவர்களுக்குக் கற்பித்துவிடாமல் அவர்களின் உயர் அந்தஸ்துக்குத் தக்கவாறு எப்படி வேண்டுமானாலும் போற்றிப் புகழலாம். அப்புகழை ஸ்திரப்படுத்த எத்தகைய வாதம் வேண்டுமானாலும் செய்யலாம் என்ற இஸ்லாமிய சித்தாந்தத்தை இங்கு விபரிக்கிறார்.



فَانْسُبْ إِلَىٰ ذَاتِهِ مَا شِئْتَ مِنْ شَرَفٍ
وَانْسُبْ إِلَىٰ قَدْرِهِ مَا شِئْتَ مِنْ عِظَمِ



## 44-வது பாட்டு.

எனவே, நீ விரும்பிய சிரேஷ்டச் சிறப்புகளை அ(ந்நபிய)வர்களின்பால் இணைத்துக்கொள்; நீ விரும்பிய மகத்துவங்களை அவர்களின் உயர் அந்தஸ்தில் சேர்த்துக்கொள்!

### دعَاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ مَنْ صَلّٰى عَلَيْهِ وَصَلِّ عَلٰى مُحَمَّدٍ
بِعَدَدِ مَنْ لَمْ يُصَلِّ عَلَيْهِ وَصَلِّ عَلٰى مُحَمَّدٍ كَمَا اَمَرْتَنَا بِالصَّلٰوةِ
عَلَيْهِ وَصَلِّ عَلٰى مُحَمَّدٍ كَمَا تُحِبُّ وَتَرْضٰى اَنْ تُصَلِّيَ عَلَيْهِ وَصَلِّ
عَلٰى مُحَمَّدٍ كَمَا يَنْبَغِي الصَّلَاةُ عَلَيْهِ وَرَضِيَ اللّٰهُ عَنْ ذَوِيْ
قَدْرٍ وَرَضِيَ اللّٰهُ عَنْ اَبِيْ بَكْرٍ وَعُمَرَ وَعُثْمَانَ وَعَلِيٍّ وَرَضِيَ اللّٰهُ
عَنْ اَصْحَابِ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَلْمُسْتَغَاثُ
يَا رَسُوْلَ اللّٰهِ ٣ اَلْخَلَاصَ يَا رَسُوْلَ اللّٰهِ ٣ اَلْاَمَانَ يَا رَسُوْلَ اللّٰهِ ٣

فَاِنَّ فَضْلَ رَسُوْلِ اللّٰهِ لَيْسَ لَهٗ
حَدٌّ فَيُعْرِبَ عَنْهُ نَاطِقٌ بِفَمِ

## 45-வது பாட்டு.

ஏனெனில் அல்லாஹ்வின் தூதரது மகத்துவத்திற்கு எத்த வரம்பும் கிடையாது. இனி அவரைக் குறித்து நாவாலுரைப்பவன் சம்பூரணமாக எங்கனம் விபரித்துவிட முடியும்?

### دعَـاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا وَمَوْلَانَا وَحَبِيْبِنَا وَهَادِيْنَا وَشَفِيْعِنَا
وَقُرَّةِ اَعْيُنِنَا وَوَسِيْلَتِنَا مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ صَلَاةً
تَمْلَأُ اَرْجَاءَ الْعَرْشِ وَمَا حَوَاهُ وَتَحُوْلُ بَيْنَنَا وَبَيْنَ الشَّرِّ
وَمَنْ نَوَاهُ يَاسَيِّدَ الْاَنْبِيَاءِ يَاسَيِّدَ الْاَوْلِيَاءِ يَاسَيِّدَ الْاَصْفِيَاءِ
اَسْأَلُكَ بِحَقِّ نَبِيِّكَ سَيِّدِنَا مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَنْ
تَجْعَلَ الْاِيْمَانَ نَصِيْبَنَا فِي الدَّارَيْنِ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِاِخْوَانِنَا
الَّذِيْنَ سَبَقُوْنَا بِالْاِيْمَانِ وَلَا تَجْعَلْ فِيْ قُلُوْبِنَا غِلًّا لِلَّذِيْنَ
اٰمَنُوْا رَبَّنَا اِنَّكَ رَءُوْفٌ رَحِيْمٌ



لَوْ نَاسَبَتْ قَدْرَهُ اٰيَاتُهُ عِظَمًا
اَحْيَى اسْمُهُ حِيْنَ يُدْعٰى دَارِسَ الرِّمَمِ



# 46-வது பாட்டு.

**அவரது கீர்த்திக்கு அவரது அற்புதங்கள் மகத்துவத்தில் நிகராக இருப்பின் அவரது திருநாமம் உச்சரிக்கப்படும் சமயத்து (மடிந்து) மக்கிப்போன எலும்பையும் உயிர்ப்பித்துவிடும். (ஆகவே. அவர்களது சொந்த கீர்த்திக்கு அற்புதங்கள் நிகரானவையல்ல.)**

## (முஃஜிஸாத்) அற்புதங்கள்.

உலகில் தோன்றிய சர்வ நபிமார்களும் அநேக அற்புதங்களை நிகழ்த்தியுள்ளனர். அதைப்போன்றே ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களும், நமது நபிகள்பிரான் (ஸல்) அவர்களும் நிகழ்த்தியுள்ளார்கள். நபிமார்கள் அற்புதங்கள் நிகழ்த்தியது குறித்து இஸ்லாம் எத்தகைய பாகுபாட்டையும் செய்யவில்லை. எனினும் கிறிஸ்தவர்கள் தங்களது நபியான ஈஸா (அலை) அவர்களை ஏனைய நபிமார்களைப் பார்க்கிலும் உயர்ந்தவர்களென்று வாதிக்கின்றனர். இந்த வாதத்தை நிரூபிப்பதற்கு அற்புதங்களைத்தான் கட்டிக் காண்பிக்கின்றனர். அதிலும் மரித்தவர்களை உயிர்ப்பித்த சம்பவத்தைத்தான் விசேஷமாக எடுத்துரைக்கின்றனர்.

### நபிமார்களை அறிந்துகொள்ள அற்புதங்கள் உறைகல்லன்று.

மேற்கண்ட கிறிஸ்தவர்களின் போக்கை நமது ஆசிரியப் பெரியார் கண்டித்து இங்கு பதிலளிக்கிறார். நபிமார்களை அறிந்துகொள்வதற்கு அற்புதங்களையே உறைகல்லாக மதிப்பது முறையற்ற குறைமதியாகும். அன்றியும், நபிகள் பெருமான் (ஸல்) அவர்களது சுய கீர்த்தியை உணர்ந்து கொள்வதற்கு 'மரித்தவரை உயிர்ப்பித்தல்' என்ற அற்பு

தமே அவசியமாக இருந்திருப்பின், அவர்களது திருநாமத்தைக்கூறி மக்கிப்போன எலும்பைக் கூவியழைத்தால் அதுவும் உயிர்பெற்றெழுந்துவிடும். ஆனல் அது அவர்களது சுய கீர்த்தியை உணர்ந்துகொள்வதற்கு தேவையற்றதாக இருந்தது.

### அவ்வக்கால மக்களின் போக்கைத் தழுவியே அன்பியாக்களின் அற்புதங்களிருந்தன.

நபிமார்கள் அற்புதங்கள் நிகழ்த்தியதெல்லாம் அவ்வக்காலத்திய மக்களின் போக்கைத் தழுவியனவாகவே இருந்தன. ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் காலத்தில் எகிப்து நாட்டில் மாந்திரீகவாதிகளுக்குச் செல்வாக்கு இருந்தது. அத்தொழிலில் அவர்களுக்கு நல்ல நிபுணத்துவமிருந்ததால் அதைக்குறித்து இறுமாப்புக் கொண்டிருந்தனர். இவர்களை முறியடிக்க இறைவன் ஹஜ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குத் தடியைச் சர்ப்பமாக்கும் அற்புதத்தையும், அதைப்போன்ற வேறு பல அற்புதங்களையும் அளித்திருந்தான்.

ஹஜ்ரத் ஈஸா (அலைஹி) அவர்கள் காலத்தில் சின்ன ஆசியாவிலும், கிரீஸிலும் வைத்தியத்தொழிலுக்கு மகத்துவமிருந்தது. பெரும் பெரும் வைத்தியச் சிரோன்மணிகளும் இருந்தனர். வெண் குஷ்டம், பிறவிக்குருடு போன்ற பெரும் நோய்களுக்கு அவிழ்தமில்லை. மனித சக்திக்கு புறம்பானவை இவ்வியாதிகள் கருமநோய்கள் என்ற முடிவுக்கு அவர்கள் வந்திருந்தனர். இன்னோரின் இம்மனோபாவத்தை முறியடிக்க இறைவன் ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களுக்கு இவ்வியாதிகளைக் குணப்படுத்தும் சக்தியையளித்திருந்தான். அன்றியும் அவர்கள் இறைவனின் திருநாமத்தைக்கூறி மரித்தவர்களை உயிர்ப்பித்தார்கள்; அநேக நோயாளிகளைக் குணப்படுத்தினார்கள்.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் காலத்தில் அறபியர்கள் வித்துவத்தொழிலில் மூழ்ந்திருந்தனர். அறபிய இலக்கண, இலக்கிய சம்பந்தமான சகல அம்சங்களும் பொருந்திய செய்யுட்களையும், காவியங்களையும், நூல்களையும் இயற்றுவதிலேயே அவர்களது கவனங்கள் சென்றுகொண்டிருந்தன. இதனை முறியடிக்க திரு குர்ஆனின் வசனங்கள் அமைந்திருந்தன. மரித்தவர்களை உயிர்பெற்றெழச் செய்யவேண்டுமென்ற பிரச்சினை எழவில்லை; அதனை அவ்வறபியர்கள் ஒரு பெருங் காரியமாகவும் கருதவில்லை. ஆகையால்தான் நபிபிரான் (ஸல்) அவர்களுக்கு மரித்தவர்களை உயிர்பெற்றெழச் செய்யவேண்டிய அற்புதத்தை நிகழ்த்தவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அங்ஙனம் அவசியமேற்பட்டிருப்பின் பெருமானார் (ஸல்) அவர்கள் செய்வது ஒருபுறமிருக்கட்டும்; அவர்களது திருப்பெயரைக்கூறி அவர்களது சீடர்களே அவ்வற்புதத்தை நிகழ்த்தியிருந்திருப்பார்கள்.

இவ்வுண்மையைத்தான் ஆசிரியப் பெரியார் மேலே கூறப்பட்ட செய்யுட்களில் கூறியுள்ளார்.





لَمْ يَمْتَحِنَّا بِمَا تَعْيَى الْعُقُولُ بِهِ
حِرْصًا عَلَيْنَا فَلَمْ نَرْتَبْ وَلَمْ نَهِمِ



# 47-வது பாட்டு.

(நபிபெருமான்-ஸல்) அவர்கள் நம்பால் கொண்டுள்ள பேரவாவினால் (நமது) அறிவுகள் எட்டிக் கொள்ள முடியாதவற்றைக்கொண்டு நம்மைச் சோதிக்கவில்லை. எனவே, (அவர்களது) போதனைகளில் நாம் சந்தேகிக்கவோ, தடுமாறவோ இல்லை.

## இஸ்லாமியப் போதனைகள் புத்திக்குப் பொருத்தமானவையே.

இச்செய்யுளில் இஸ்லாமிய சன்மார்க்க சட்டதிட்டங்கள், விதிவிலக்குகள் முதலியவற்றின் சிறப்புக்கள் கூறப்படுகின்றன.

எம்பெருமான் (ஸல்) அவர்கள் நமக்குப் போதித்த விதி விலக்குகள் எளிதில் புரிந்துகொள்ளத் தக்கவையாயும், எடுத்து நடத்த அநுபவசாத்தியமுடையவையாயும், புத்திக்கும், யுக்திக்கும் பொருந்தக்கூடியவையாயும் இருக்கின்றன. எனவே அவை சம்பந்தமாக நாம் விளங்கிக்கொள்ள முடியாமலோ, சுலபமாக நிறைவேற்ற முடியாமலோ இருப்பவையென்று யாரும் கூறமுடியாது. அதில் எத்தகைய சந்தேகத்தையும் விட்டுவைக்காமல் எம்பிரான் (ஸல்) அவர்கள் பூரணமாக விளக்கிக் காட்டிவிட்டார்கள். மற்றைய மதங்களைப் பொறுத்தவரை அவ்வாறில்லை. விஷயங்கள் விளக்கப்படாமலும், நடப்புக்கள் அநுபவசாத்தியமற்றதாயும், புத்திகள் ஏற்றுக்கொள்ள முடியாதவாறும் இருக்கின்றனவாகையால் அவைகளைக் கொண்டுள்ள மக்கள் கடுஞ்சோதனைக்காளாகியிருக்கின்றனர் என்பது இச்செய்யுளின் கருத்தாகும்.

أَعْيَى الْوَرَى فَهْمُ مَعْنَاهُ فَلَيْسَ يُرَى
لِلْقُرْبِ وَالْبُعْدِ مِنْهُ غَيْرُ مُنْفَحِمِ

# 48-வது பாட்டு.

**அவர்களின் (அந்தரங்க) நிலையை உணர்ந்துகொள்வது சிருஷ்டிகளை இயலாமையாக்கிற்று. எனவே, அண்மையோரும், அகன்றோரும் (அவர்களைப் பூரணமாக உணர்ந்துகொள்ளும் விஷயத்தில்) மௌனிகளாகவேயன்றி வேறு முறையில் காணப்படார்.**

## பெருமானாரின் மகத்துவம் வரையறைக்குட்பட்டதன்று.

மேற்கூறப்பட்ட 45-வது செய்யுளில் பெருமானார் (ஸல்) அவர்களது சிறப்புகளை வரையறுத்து நாவினால் கூறிவிட முடியாதென்று கூறப்பட்டுள்ளது. இந்த செய்யுளில் நாவால் மட்டுமென்ன? அறிவினாலுங்கூட அவர்களது மகத்துவத்தை வரையறுத்துக்கூற முடியாதென்ற விபரம் விபரிக்கப்படுகிறது. ஏனெனனில், நம் பெருமான் (ஸல்) அவர்கள் இவ்வகிலத்தோருக்குச் செய்த தொண்டுகள் அளவிலடங்காதவை. அத்தொண்டுகள் அவற்றின்மூலம் மனிதர் அடைந்து

கொண்டுவரும் நன்மைகள் மட்டுப்படுத்தக்கூடியவையன்று. இற்றைக்கு ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் வகுக்கப்பட்டு வழங்கப்பட்ட சன்மார்க்க சட்டதிட்டங்கள், இந் நவநாகரீக அணு சகாப்தத்திலுங்கூட மக்களின் க்ஷேமத்திற்கு வழிகாட்டிக் கொண்டிருப்பது பிரத்தியட்சம். எனவே, இவ்வாருன மகத்துவத்தையும், அதன் அந்தரங்க மர்மத்தையும் மனித அறிவு எங்ஙனம் புரிந்துகொள்ளவும், வரையறுக்கவும் முடியும்? இக்கருத்தைத்தான் இச்செய்யுள் உணர்த்துகிறது.

كَالشَّمْسِ تَظْهَرُ لِلْعَيْنَيْنِ مِنْ بُعُدٍ
صَغِيْرَةً وَّتُكِلُّ الطَّرْفَ مِنْ أَمَمِ

## 49-வது பாட்டு.

(அவர்,) சூரியன்போன்று (ஆவார்.) அது வெகு தொலைவிலிருக்குங்கால் நேத்திரங்களுக்குச் சிறியதாகக் காட்சியளிக்கிறது; சமீபத்திலிருந்தாலோ பார்வையை மழுங்கச் செய்துவிடுகிறது.

### பெருமானாரைக் கண்ணுற்றோர்களில் களித்தனர் ஒருசாரார், வெறுத்தனர் ஒருசாரார். ஏன்?

பெருமான் (ஸல்) அவர்களது மகத்துவத்தையும், இரகசியத்தையும் சம்பூரணமாகத் தெரிந்துகொள்ள முடியாதென்

பதை முன்னுள்ள செய்யுட்களில் குறிப்பிடப்பட்டது. இங்கு அவர்களுக்கு ஒரு உதாரணம் கூறப்படுகிறது. அதாவது: பெருமான் (ஸல்) அவர்கள் சூரியனைப்போன்றுவார்கள். சூரியனை வெகுதொலைவிலிருந்து பார்க்கமுடிகிறது. எனினுங் கூட கண்கள் கூசுகின்றன. அது அதிக தூரத்திலிருக்கும் பொழுது அதன் பரிமாணம் அந்தரங்கத் தன்மைகள் முதலானவற்றைச் சம்பூரணமாகத் தெரிந்துகொள்ளமுடியவில்லை. அது அருகிலிருந்துவிட்டால், ஜோதிமயமாக இருப்பதால் அதனை யாரும் பார்க்க இயலாது. அந்த ஜோதியைக் கிரகிக்கும் சக்தி நேத்திரங்களுக்கு இல்லை. இத்தன்மையைப் போன்று நாயகம் (ஸல்) அவர்களை ஸஹாபாக்கள், அவர்களைத் தொடர்ந்த தாபிஈன்கள் போன்ற முன்னோர்களும் முற்றிலும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அன்றியும் மிக மிக நெருங்கிய சுற்றத்தார்களும், மற்றைய அன்னியர்களும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால்தான் ஆரம்ப காலத்தில் அவர்கள் நம்பிரான் (ஸல்) அவர்களது சன்மார்க்கப் பிரச்சாரத்திற்கு முட்டுக்கட்டைகளாக இருந்தனர்; பெருமானுருடன் பல யுத்தங்களைப் புரிந்தனர்.

**இக்கருத்தை அனுசரித்தே ஹதீது ஷரீபில் "என்னை எவர் பார்த்தாரோ அவரை நரகம் தின்னாது" என** நாயகம் **(ஸல்)** அவர்கள் அருளிப்போந்தார்கள்.

அபூஜஹ்ல், அபூலஹபைப்போன்றோர் பெருமானவர்களை இளமை முதல் முதுமைவரைப் பார்த்தவர்கள்தான். எனினும், அவர்கள் யாவரும் அபூதாலிபிடம் வளர்ந்துவந்த அனாதையென்றே அல்லது தங்கள் பந்துவின் புதல்வர், தங்களது குலத்துதித்தவர், தங்கள் நாட்டில் பிறந்தவர் என்றேதான் எண்ணியிருந்தனரேயன்றி அவர் அல்லாஹ்வின் தூதர், மக்களுக்கு சத்திய சன்மார்க்கத்தைப் போதிக்க வந்த போதகர், உலகை உய்விக்கவந்த ஞானாசிரியர் என்ற முறையில் பார்க்கவேயில்லை. இந்நோக்குடன் பெருமானாரை

அவர்கள் பார்த்திருந்தால் ஒருபோதும் முட்டுக்கட்டையாக – எதிரிகளாக இருந்திருக்கவேமாட்டார்கள்.

## வள்ளலின் முன்னிலையில் வைராக்கிய வீராங்கனை.

வள்ளல் (ஸல்) அவர்களது மகத்துவத்தின் உண்மையை ஹஜ்ரத் அபூஸுஃப்யான் (ரலி) அவர்களுடைய மனைவியாரான ஹிந்த் (ரலி) அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் கூறியுள்ளார்.

இவ்வம்மையார் இஸ்லாத்தைத் தழுவுமுன்னர் அவரது சகோதரர், தந்தை முதலான பந்துக்கள் "பத்ரு" யுத்தத்தில் கொல்லப்பட்டுப்போயினர். இவர்களது பழியை வாங்காமல் தலையில் எண்ணெய் தேய்த்துக்கொள்ளுவதில்லை; சீவிவாரிக் கொள்ளுவதில்லையென்று பிரதிக்ஞை எடுத்துக்கொண்டார். இதனை நிவர்த்திப்பதற்காக இவரது கணவர் தளகர்த்தராக அமைந்து "உஹத்" என்ற ஸ்தலத்தில் பெருமானுடன் போர்புரிந்தார். பெருமானாரின் சிறிய தந்தையான ஹஜ்ரத் ஹம்ஜா (ரலி) அவர்கள் இந்த யுத்தத்தில் கொல்லப்பட்டு ஷஹீதானார்கள். இவர்களை ஷஹீதாக்குவதற்கு முக்கியத் தூண்டுகோலாக இருந்தவர் இவ்வம்மையார்தான். ஹம்ஜா (ரலி) அவர்களைக் கொன்றுதீர்க்கும்படி தனது அடிமையான வஹ்ஷி (ரலி) என்பவரை ஏற்பாடு செய்திருந்தார். இப் போர்க்கோலத்தை நேரில் கண்காணிக்க இவ்வம்மையாரும் போர்க்களத்திற்கு விஜயம் செய்திருந்தார். இம்மட்டுமல்ல; ஹஜ்ரத் ஹம்ஜா (ரலி) அவர்கள் ஷஹீதானபிறகு அவர்களது மார்பைப் பிளந்து ஈரல்குலையை எடுத்துக் கடிப்பதென்றால், அக்கால ஸ்திரீ வீராங்கனைகள் எவ்வளவு வைராக்கிய சித்தமுடையவர்களாக இருந்தார்களென்பது கவனிக்கத் தகுந்ததாகும்.

இத்தனை கொடூரமாக நடந்துகொண்ட கோர மனப் பான்மையுடைய இவ்வம்மையார், திரு மக்கமா நகரை பெருமான் (ஸல்) அவர்கள் வெற்றிகொண்டு கைப்பற்றியபின் இஸ்லாம் மதத்தைத் தழுவுகிறார். சிலநாட்கள்வரை பெருமானாரின் உபதேசங்களைச் செவியுறுகிறார். அதன்பின் பெருமான் (ஸல்) அவர்களிடம்,

"அல்லாஹ்வின் தூதரே! ஒருகாலத்தில் தங்களது கூடாரம் எனக்கு மிகமிக வெறுப்பானதாக இருந்தது. இப்போதோவெனில் தங்களது கூடாரமே உலகிலுள்ள மற்றெல்லாக் கூடாரங்களைப் பார்க்கினும் மிக மிக உகந்ததாக இருக்கிறது" என தம்முடைய மன மாற்றத்தைத் தெரிவிக்கிறார். இவ்வம்மையாருங்கூட இச் சமயத்து பெருமானாரை ஒரளவுதான் உணர்ந்திருந்தார்.

## பெற்றவன் ஜன்ம விரோதி, பிள்ளை உற்ற அன்பன்.

பெருமான் (ஸல்) அவர்களின் ஜன்மவிரோதியான அபூ ஜஹ்லுடைய புதல்வர் இக்ரிமா (ரலி) அவர்களுக்கும் மேற் கூறப்பெற்ற மனமாற்றம் ஏற்பட்டது. முன்னால் பிரஸ்தாபிக் கப்பட்ட அம்மையாரோ பெண்பாலாகவிருந்ததால், வாய்ச் சொல்லுடன் நின்றார். ஆனால் ஹஜ்ரத் இக்ரிமா ஆடவராக இருந்ததால், சன்மார்க்கத்திற்காக தனது உயிரை அர்ப் பணம் செய்ய முன்வந்து "எர்மூக்" போர்க்களத்தில் ஷஹீதானார். இத்தகைய சம்பவங்கள் பலவற்றை இவண் உதாரணமாகக் கூறலாமெனினும், விரிவஞ்சிவிடுத்தனம்.

ஆகவே பெருமானாரை சிலர் சில சமயத்திலும் பலர் பல சமயங்களிலும் பலவாறாகப் பார்த்து விளங்கியிருந்தனர்.



وَكَيْفَ يُدْرِكُ فِي الدُّنْيَا حَقِيقَتَهُ
قَوْمٌ نِيَامٌ تَسَلَّوْا عَنْهُ بِالْحُلُمِ



## 50-வது பாட்டு.

**கனவுகளைக்கண்டு அவையே போதுமென திருப்தியடைந்துகொள்ளும் துயில்கொண்ட கூட்டத்தினர், இவ்வுலகில் அ(ந்நபிய)வர்களின் அந்தரங்கத்தை எங்ஙனம் உணரமுடியும்?**

### இப்பிரபஞ்ச மயக்கத்துயில்.

"ஜனங்கள் நித்திரை புரிகிறார்கள் அவர்கள் மரிக்கும்போது விழித்துக்கொள்கின்றனர்" என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அதாவது: மக்கள் இவ்வுலக மாய்கையெனும் துயிலில் மூழ்கி அநித்தியமான இவ்வுலக வாழ்வை மெய்யென நம்பி மெய்யான நித்திய வாழ்வையளிக்கும் மறு உலக வாழ்வை மறந்து தங்கள் மனம்போன போக்குப்படித் திரிகின்றனர். அவர்கள் மரித்தபின்தான் இவ்வுலக வாழ்வு பொய்யான வாழ்வென்பதை உணர்வர். இதைத்தான் இங்கு பிரஸ்தாபிக்கப்பட்ட ஹதீதும் கூறுகிறது. இத்தகைய நிலையிலுள்ள இம்மக்கள் நபிகள் பெருமான் (ஸல்)

அவர்களை இவ்வுலகில் எங்ஙனம் சம்பூரணமாக உணர்ந்து கொள்ளமுடியும்? ஒருக்காலும் முடியாது. ஆனால் மரித்த பிறகு அவர்கள் விழித்துக்கொண்டு நபித்துவத்தின் மகத்துவத்தைத் தெரிந்துகொள்ளுகின்றனர். இவ்வுண்மையைத் தான் நமது ஆசிரியப்பெரியார் 'துயில்கொண்ட கூட்டத்தினர் பெருமானாரை எங்ஙனம் உணர்ந்துகொள்ளமுடியுமென்று வினாவின்மூலம் விளக்குகிறார்.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ اَللّٰهُمَّ يَا حَافِظَ
الذِّكْرِ احْفَظْنَا بِمَا حَفِظْتَ بِهٖ فَاِنَّكَ قُلْتَ وَقَوْلُكَ الْحَقُّ
اِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَاِنَّا لَهٗ لَحَافِظُوْنَ اَللّٰهُمَّ رَبَّ السَّمٰوٰتِ
السَّبْعِ وَرَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ كُنْ لَنَا حَافِظًا مِنْ شَرِّ هٰذَا السُّلْطَانِ
وَاَتْبَاعِهٖ وَاَعْوَانِهٖ وَعَزَّ جَاهُكَ وَجَلَّ ثَنَاؤُكَ وَلَا اِلٰهَ غَيْرُكَ



فَمَبْلَغُ الْعِلْمِ فِيْهِ اَنَّهٗ بَشَرٌ
وَاَنَّهٗ خَيْرُ خَلْقِ اللّٰهِ كُلِّهِمِ



# 51-வது பாட்டு.

**ஆனால் அவர்கள் சம்பந்தமாக (மக்கள்) அறிந்தவற்றின் கடைசி எல்லையானது மெய்யாக அவர் ஒரு மனிதர் என்றும் அல்லாஹ்வின் சிருஷ்டிகள் அனைவரிலும் சிரேஷ்டமானவரென்றுமே தான்.**

மேற்கூறப்பட்ட விஷயங்களிலிருந்து பெருமானாரை உணர்ந்துகொள்வதில் மக்கள் பலதீரப்பட்டவர்களாகவிருக்கின்றனர். அன்னாரின் அந்தரங்க சக்தியை-நிலையை விளங்கிக்கொள்ள முடியாதவர்களாக இருக்கின்றனர் என்பதைத் தெரிந்துகொள்கிறோம். பெருமானாரின் குணாதிசயங்களைப் பார்க்குமிடத்து அவர்கள் மனித இனத்தவரா? ஜின்னா? மலக்கா? என்றுங்கூட சந்தேகிக்க இடமேற்படுகிறது. எனினும் மனித அறிவின் முடிவும், திருகுர்ஆனின் தீர்ப்பும் அவர்கள் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்தான்; என்றாலும் இறைவனால் சிருஷ்டிக்கப்பெற்ற சர்வ சிருஷ்டிகளிலும் சிரேஷ்டமானவர்கள் என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ளுகிறோம். இந்த அளவிற்குமேல் இவ்வுலகில் அவர்களைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ள மனித சக்தியால் முடியக்கூடியதல்லவென்பதே இச்செய்யுளின் கருத்தாகும்.



وَكُلُّ آيٍ اَتَى الرُّسُلُ الْكِرَامُ بِهَا
فَاِنَّمَا اتَّصَلَتْ مِنْ نُوْرِهٖ بِهِمِ



## 52-வது பாட்டு.

சங்கைமிக்க (அல்லாஹ்வின்) தூதர்கள் கொண்டு வந்த அற்புதங்கள் அனைத்தும் (பெருமானார்) அவர்களின் ஜோதியினின்றேதான் அ(த்தூது)வர்களுக்குக் கிடைத்தன.



فَاِنَّهٗ شَمْسُ فَضْلٍ هُمْ كَوَاكِبُهَا
يُظْهِرْنَ اَنْوَارَهَا لِلنَّاسِ فِى الظُّلَمِ



## 53-வது பாட்டு.

ஏனெனில் திட்டமாக அவர் மேன்மையெனும் பகலவனாவார்; அவர்கள் அவற்றின் நட்சத்திரங்களாவர். அவை (-நட்சத்திரங்கள்) இருளில் மக்களுக்கு தமது ஜோதிகளை வெளிக்காட்டுகின்றன.

### பெருமானாருக்கும் மற்றைய நபிமார்களுக்குமுள்ள தாரதம்மியம்.

இவ்விரு செய்யுட்களிலும் பெருமானாருக்கும் மற்றைய நபிமார்களுக்குமுள்ள தாரதம்மியத்தைக் கூறப்படுகிறது.

சூரிய வெளிச்சத்திற்குமுன் நட்சத்திரங்களின் ஜோதி மறைந்துவிடுகிறது. சூரியன் மறைந்து இருள் கவிழ்ந்தபின்பு அவைகள் தமது ஜோதியை உலகில் பரப்புகின்றன. இதே போன்றுதான் பெருமான் (ஸல்) அவர்கள் முன்னிலையில் மற்றைய நபிமார்கள். எனினும் இரவிருளில் சந்திரன், நட்சத்திரங்கள் யாவும் ஒருங்கே பிரகாசித்து உலக மக்களுக்கு வெளிச்சத்தையளிப்பதுபோன்று மற்றைய நபிமார்களும் துன்மார்க்கமென்ற இருளில் சன்மார்க்க வெளிச்சத்தைக் காண்பித்து மக்களுக்கு வழிகாட்டினர் என்பதாக ஆசிரியப் பெரியார் மற்றைய நபிமார்களின் கண்ணியத்தைக் குறைத்துக் கூருதவாறு பெருமாஞருக்கும் மற்றவர்களுக்குமிடையிலுள்ள வித்தியாசத்தை விளக்குகின்ருர்.

நம்பிரான் (ஸல்) அவர்கள் சர்வ நபிமார்களுக்கும் கடைசியில்தான் தோன்றிஞர்கள். பிரதி நபிமார்களும் தத்தம் காலத்தில் அநேக அற்புதங்களை நிகழ்த்தியிருக்கின்றனர். நமது நபி அவர்கள் அனைவருக்கும் இறுதியாக இவ்வுலகில் தோன்றியதால் அவர்கள் நிகழ்த்திய அற்புதங்களும் பிந்தியவைதான் என்பதில் சந்தேகத்துக்கு இடமில்லை. எனினும் பெருமாஞர் (ஸல்) அவர்கள் இவ்வுலகத்தில் மாந்தர்கள் மத்தியில் ஜனித்து வளர்ந்தது பிந்தியாக இருப்பினும், ஆதியில் எல்லாவற்றிற்கும் முன்னதாகவே அவர்களது ஜோதி (நூரே முஹம்மதிய்யா) சிருஷ்டிக்கப்பட்டுவிட்டது. அவ்வொளியின் பிரகாசத்திலிருந்தே மற்றைய சிருஷ்டிகள் யாவும் சிருஷ்டிக்கப்பெற்றிருக்கின்றன. ஆகையால்தான் "அவர்களது ஜோதியினின்றே கிடைத்தன" என்று செய்யுளில் கூறப்பட்டிருக்கிறது.

أَكْرِمْ بِخَلْقِ نَبِيٍّ زَانَهُ خُلُقٌ
بِالْحُسْنِ مُشْتَمِلٍ بِالْبِشْرِ مُتَّسِمِ

## 54-வது பாட்டு.

*திருநபியினுடைய மேனியின் மேன்மையே மேன்மை! அதை நற்குணம் (வேறு) அலங்கரித்திருக்கிறது; (அவர்) அழகைக்கொண்டு இணைந்தவர்; மலர்ந்த முகத்தைக்கொண்டு வருணனை பெற்றவர்.*

### உள் வெளியழகை ஒருங்கே பெற்றவர் எம்பிரான் (ஸல்)

பெருமானார் (ஸல்) அவர்களின் உயரிய நற்குணங்களையும், திருமேனியழகையும் யாவசிடமும் மலர்ந்த முகத்துடன் பழகுவதையும் இங்கு விவசிக்கப்படுகின்றன.

அல்லாஹ்வினுடைய கிருபையைக்கொண்டே நீர், அவர்களிடம் இரக்கம் காட்டுகிறீர். வன்னெஞ்சராகவும், கடுகடுத்தவராகவும் நீர் இருப்பீராயின், அவர்கள் உம்மைவிட்டு அகன்றோடியிருப்பார்கள். (3-159) என்றும் "திட்டமாக நீர் மகத்தான நற்குணத்திலிருக்கின்றீர்" (68-3) என்றும் இறைவனால் திருகுர்ஆனில் கூறப்பட்டுள்ளது. எனவே பெருமானார் (ஸல்) அவர்கள்

அவைவரிடமும் போற்றத்தக்க முறையில் பழகுவதுடன் உயரிய நற்குணங்களைத் தாங்கியவர்களாக இருந்தார்கள் என்பதை இங்கு நன்கறிந்துகொள்கிறோம்.



كَالزَّهْرِ فِي تَرَفٍ وَالْبَدْرِ فِي شَرَفٍ
وَالْبَحْرِ فِي كَرَمٍ وَالدَّهْرِ فِي هِمَمِ



## 55-வது பாட்டு.

**பெருமானார் (ஸல்) மிருதுத்தன்மையில் புஷ்பத்தைப்போன்றும் சிறப்பில் சம்பூரண மதி போன்றும் ஈகையில் சமுத்திரம் போன்றும் தைரியத்தில் காலம் போன்றும் (இருந்தார்கள்).**

### பெருமானாரின் ஸ்தூலச்சிறப்பு: தன்மை, மேன்மை.

<u>மிருதுத்தன்மையில் புஷ்பம்.</u>

"நபிகள் பெருமான் (ஸல்) அவர்களது திருக்கரத்தைப் பார்க்கினும் மிக மிருதுத்தன்மை படைத்த பட்(டு)டை(யை)யோ, வெல்வெட்டையோ நான் தொட்டிலேன்" என ஹஜ்ரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரீ) பட்டுத்துணியானது மிகவும் மிருதுத்தன்மை படைத்ததென்பது யாவரும் அறிந்த உண்மை. இதனையும்விட மிருதுவாக பெருமானாரின் திருக்கரங்கள் இருந்தனவாம்.

## சிறப்பில் சம்பூரண மதி.

*சம்பூரண மதி (சந்திரன்) பிற நக்ஷத்திரங்களைப் பார்க்கினும் வனப்பு மிகுந்ததாகும். அழகிய முகத்தைப் பூரணச் சந்திரனுக்கு ஒப்பிடுவது வித்வான்களின் வழக்கமாகும். பெருமானாரவர்கள், அப்பூரணச் சந்திரனைப் பார்க்கினும் அதிக வடிவுள்ளவர்களாக இருந்தார்கள். உம்முல் மூமினீன் ஹழ்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.*

**"ஒருமுறை நாயகம் (ஸல்) அவர்கள் பௌர்ணமி இரவில் நிலா வெளிச்சத்தில் படுத்துக்கொண்டிருந்தார்கள். அதுசமயம் நான் ஒருமுறை சந்திரனை ஏறிட்டு நோக்குவதும் பின் பெருமானார் (ஸல்) அவர்களது (திரு)முகத்தை நோக்குவதும் இவ்விரு சந்திரன்களில் எந்தச்சந்திரன் அழகாக இருக்கிறதென்றும் சிந்தித்துக்கொண்டிருந்தேன்."**

இந்த *ஹதீதின்மூலம்* பெருமானாரின் வனப்புமிக்க மேனியைப்பற்றித் தெரிந்துகொள்கிறோம்.

## ஈகையில் சமுத்திரம்.

*தர்மவான்களை கடலுக்கும், துணிகரமான வீரத்தைச் சமுத்திரத்திற்கும் ஒப்பிடுவது வித்வான்களின் வழக்கமாகும்.*

"சன்மார்க்கத்தின் பெயரால் நபிகள் பெருமான் (ஸல்) அவர்களிடம் எதனைக் கேட்டபோதிலும் அளித்துவிடுவார்கள். "இல்லை" எனக்கூறியது கிடையாது" என்று ஹதீது ஷரீபில் கூறப்பட்டிருக்கிறது. (பாஜூரி)

ஒருமுறை ஒரு நபர் (அச்சமயம் அவர் இஸ்லாத்தைத் தழுவவில்லை.) பெருமானாரிடம் சென்று "தமக்கு இரண்டு மலைகளுக்குமிடையிலுள்ள வெளி அளவு ஆடுகள் தரவேண்

டும்" என்று கேட்டுக்கொண்டார். பெருமானர் (ஸல்) அவர்கள் அவரது விருப்பப்படி அவர் குறிப்பிட்ட இருமலைகளின் இடைவெளியளவு நிரம்பப் பரவிநின்று மேயத்தக்கவாறு அத்தனை ஏராளமான ஆடுகளைச் சன்மானமாக வழங்கினர்கள். இதனைப்பார்த்த அவர், தமது குலத்தாரிடம் சென்று, "எனது சமூகத்தவரே! நீங்கள் எல்லீரும் இஸ்லாத்தைத் தழுவிவிடுவீர்களாக. முஹம்மதானவர் தரித்திரியத்தைப் பயப்படாமல் ஏராளமாக தருமம் செய்கிருர்" என்று கூறினர். (அல்ஹதீது: பாஜூரி) இதுபோன்று மற்றைய ஏழைகளுக்கும் அள்ளியள்ளி தர்மம் அளித்த விபரம் ஹதீது ஷரீபுகளில் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றின்மூலம் அவர்களின் ஈகையை ஓரளவு தெரிந்துகொள்ளலாம்.

## தைரியத்தில் காலம்

துணிகரம், வீரம், தைரியம் ஆகியவற்றில் பெருமானரை மிஞ்சியவர் எவருமிலர் என்பது பிரசித்தம். இஸ்லாமிய சன்மார்க்கத்தைப் பிரச்சாரம் செய்ததன்பயனுக திருமக்கா நகரென்ன? அறபு நாடென்ன? அதற்கு வெளியிலுள்ள கிஸ்ரா, கைஸர் முதலானோரின் பிரமாண்டமான அரசாங்கங்களுடைய எதிர்ப்பையுங்கூட அவர்கள் கவனிக்கவேண்டியதிருந்தது.

கைஸர் சக்ரவர்த்தியின் உதவியுடன் அறபு நாட்டு எல்லைப்புறத்திலுள்ள கஸ்ஸானி கோத்திரத்து அறபிய கிறிஸ்துவர்கள் பிரமாண்டமான பெரிய படையுடன் திருமதீனவைத் தாக்க வருவதாக ஒருசமயம் மதீனவில் ஒரு வதந்தி உலாவினது. திருமதீன முஸ்லிம்கள் இதை எதிர்பார்த்தவாறு இரவுபகலாக நகரைக் காவல்புரிந்து முஸ்தீப்புடன் இருந்தனர். இரவில்கூட அநேக நபர்கள் தூங்காமல் உருவிய வாளுடன் நகர் தெருக்களிலும், 'மஸ்ஜிதே நபவிய்யி'லும் சுற்றிக்கொண்டு காவல்புரிந்தனர்.

## பீதியளிக்கும் நடுநிசியில் பெருமானார்.

இந்நிலையில் ஓரிரவு ஒருவகைக் கலவரக் கூச்சல் நகர் புறத்தின் வெளியிலிருந்து கேட்டது. தாங்கள் எதிர்நோக்கிக் கொண்டிருந்த விரோதிகள் வந்துவிட்டனர் போலிருக்கிற தென்று நகரத்திலுள்ள ஸ்திரீ குழந்தைகள் அனைவரும் கலவரமடைந்தனர். இந்நிலையில் பெருமானார் (ஸல்) அவர்கள் குதிரைமீதேறி தன்னந்தனியாக நகரின் வெளிப்புறத்திற்குச்சென்று வெகு தொலைவு வரை சுற்றிப்பார்த்துவிட்டு நகரத்து மக்களிடம் வந்து "பயப்படாதீர்கள்! பகைவர் எவரும் வரவில்லை" என்று ஆறுதல் கூறினார்கள்.

மற்றுமொரு சம்பவம்: பெருமானார் (ஸல்) அவர்களுக்கும் இணைவைத்து வணங்கும் எதிரிகளுக்கும் "ஹுனைன்" என்ற இடத்தில் பிரமாண்டமான யுத்தம் ஒன்று நிகழ்ந்தது. (அதன் விபரம் 128, 129-வது பாட்டுக்களின் விளக்க உரையில் வருகிறது.) அதுசமயம் பகைவர்களது தாக்குதல்களையும் சரமாரியாகப் பொழியப்பட்ட அம்புகளையும் தாங்கமுடியாத முஸ்லிம் வீரர்கள் யாவரும் போர்முனையைவிட்டு புறமுதுகு காட்டி ஓடிவிட்டார்கள். மிக நெருக்கடியான அந்தக்கட்டத்தில் - எதிரிகள் சூழ்ந்து நிற்கும் அந்நிலையில் பெருமானார் (ஸல்) அவர்கள் துணிகரமாகப் பகைவர்களை நோக்கி "நான் நபியாவேன்; இது பொய்யன்று, நான் அப்துல் முத்தலிபின் புதல்வனுவேன்" என்று கவியாகப்பாடிக்கொண்டு எதிர்த்தார்கள். போர்க்களத்தைவிட்டு மற்றையோர்கள்போன்று வெளியேறிவிடவில்லை. இதனைப்பார்த்த முஸ்லிம் வீரர்கள் திரும்பவும் வந்து வீராவேசத்துடன் எதிரிகளிடம் போரிட்டு வெற்றிகொண்டனர். பெருமானாரின் தைரியத்தை நிரூபிக்கும் சம்பவங்கள் இன்னும் பல உள. விரிவஞ்சி விடுத்தனம்.





كَأَنَّهُ وَهُوَ فَرْدٌ فِي جَلَالَتِهِ
فِي عَسْكَرٍ حِينَ تَلْقَاهُ وَفِي حَشَمِ



## 56-வது பாட்டு.

பெருமானார் (ஸல்) அவர்களைப் படையி(ன் மத்தியி)லும் பணியாளரி(ன் மத்தியி)லும் நீ சந்திக்குங்கால், அவர்களது கம்பீரத்தின் காரணத்தால் பிரத்தியேக நபர்போன்று இருக்கிறார்கள்.

### دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى كَمَا صَاحِبِ الْكَمَالِ وَاَفْضَلِ ذَوِي فَضْلِ
الْاِفْضَالِ مُحَمَّدٍ وَعَلٰى اٰلِهِ وَاَصْحَابِهِ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ
اَنْفَاسِ الْمَخْلُوقَاتِ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ اَشْعَارِ الْمَوْجُودَاتِ
اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ سَوَاكِنِ الْاَرْضِيْنَ وَالسَّمٰوٰتِ اَللّٰهُمَّ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ مَا خَلَقْتَ مِنَ الْبِدَايَاتِ وَالنِّهَايَاتِ وَمِنَ الْمَعْدُومَاتِ
وَالْمَوْجُودَاتِ اِلَى اَبَدِ الْاٰبَادِ مِنْ اَوَّلِ اٰزَالِهِ وَاَوْسَطِ حَشْرِهِ
وَاٰخِرِ بَقَائِهِ وَصَلِّ عَلٰى جِبْرَئِيلَ وَمِيكَائِيلَ وَصَلِّ عَلٰى اِسْرَافِيلَ
وَعِزْرَائِيلَ وَصَلِّ عَلٰى مُنْكَرٍ وَنَكِيرٍ وَمُبَشِّرٍ وَنَذِيرٍ وَصَلِّ عَلٰى

كِرَامٍ كَاتِبِيْنَ وَصَلِّ عَلَى جَمِيْعِ الْأَنْبِيَاءِ وَالْمُرْسَلِيْنَ وَعَلَى
الْمَلَائِكَةِ الْمُقَرَّبِيْنَ وَعَلَى الصِّدِّيْقِيْنَ وَالشُّهَدَاءِ وَالصَّالِحِيْنَ
وَعَلَى أَهْلِ طَاعَتِكَ أَجْمَعِيْنَ وَاحْشُرْنَا مَعَهُمْ بِرَحْمَتِكَ يَا
أَرْحَمَ الرَّاحِمِيْنَ. اِلٰهِيْ بِحُرْمَةِ مَمْدُوْحِ نَبِيِّكَ عَلَيْهِ الصَّلَاةُ وَالسَّلَامُ
وَبِحُرْمَةِ وَحَدَائِقِكَ وَرُبُوْبِيَّتِكَ يَا أَكْرَمَ الْأَكْرَمِيْنَ،
اِقْضِ حَاجَاتِنَا يَا قَاضِيَ الْحَاجَاتِ وَاسْتَجِبْ دَعْوَتَنَا يَا مُعْطِي
السَّائِلِيْنَ وَاَنْتَ الْمُعْطِيْ وَاَنَا السَّائِلُ وَلَا يَدْعُوْ السَّائِلُ
اِلَّا الْمُعْطِيَ يَا سَامِعَ الدُّعَاءِ وَيَا فَاطِرَ السَّمَاءِ وَيَا دَائِمَ الْبَقَاءِ
وَيَا وَاسِعَ الْعَطَاءِ بِرَحْمَتِكَ يَا أَرْحَمَ الرَّاحِمِيْنَ



كَأَنَّمَا اللُّؤْلُؤُ الْمَكْنُوْنُ فِيْ صَدَفٍ
مِنْ مَعْدِنَيْ مَنْطِقٍ مِنْهُ وَمُبْتَسَمِ



## 57-வது பாட்டு.

பெருமானார் (ஸல்) அவர்கள் உரையாடும்போதும், புன்முறுவல் பூக்கும்போதும் சிப்பியினுள் பாது காக்கப்பட்ட முத்து (வெளியாவது) போன்றிருக்கும்.



لَا طِيبَ يَعْدِلُ تُرْبًا ضَمَّ اَعْظُمَهُ
طُوبَى لِمُنْتَشِقٍ مِنْهُ وَمُلْتَثِمِ



## 58-வது பாட்டு.

**அவர்களின் திரு எலும்புகளை (-ஸ்தூலத்தை) அணைத்துக்கொண்டிருக்கும் மண்ணிற்கு நிகராகும் எத்தகைய நறுமணமும் கிடையா. அதை நுகர்ந்தோருக்கும், முத்தமிட்டோருக்கும் மங்களமுண்டாகட்டும்!**

### பெருமானாரின் கப்ரும், அதனை தரிசித்தலும்.

முந்திய செய்யுட்களில் பெருமான் (ஸல்) அவர்கள் இவ்வுலகிலிருக்குங்கால் அவர்களிடம் அமைந்துள்ள உயரிய இலக்ஷணங்கள், சிறப்புக்கள் ஆகியவற்றை விவரிக்கப்பட்டன. இச்செய்யுளில் அவர்கள் இப்பூவுலகை நீத்தபின் அவர்களது அந்தஸ்துக்கள் எத்தன்மையுடையவை என்பனவற்றை விளக்கப்படுகிறது.

பெருமான் (ஸல்) அவர்களது திருமேனியைப் பொதிந்துள்ள அம்மண்ணரை (கப்ரு) யானது பூமியின் மற்றைய பாகங்கள் கஃபாவென்ற தேவாலயம், அர்ஷு முதலான

எல்லாவற்றையும்விட மிகச் சிறப்புற்றதெனக் கூறப்பட்டிருக்கிறது. இங்கு அம்மண்ணை நுகர்ந்து முத்தமிடுவதென்பது, அவர்களது கப்ரை ஜியாரத் (தரிசித்தல்) என்பதையே கருத்தாகக் கொள்ளப்படுகிறது. ஏனெனில் கப்ருகளை முத்தமிடுவதை 'ஷரீஅத்' கூடாதெனக் கூறுகிறது. இந்த ஜியாரத் சம்பந்தமாக பெருமானார் (ஸல்) அவர்கள் "எனது கப்ரை ஜியாரத் செய்பவனுக்கு எனது சிபாரிஷ் உரித்தாகி விட்டது" (மிஷ்காத்) என்றும்,

"எனது மரணத்திற்குப்பின் என்(கப்ரை)னைச் சந்தித்தோன் நான் உயிருடனிருக்குங்கால் என்னைத் தரிசித்தவன் போன்றாகின்றான்." (புகாரீ) என்றும் கூறியுள்ளார்கள்.

ஆகவே திருமக்கா சென்று ஹஜ்ஜு செய்தபின் திருமதீனா சென்று (ஜியாரத்) தரிசனம் செய்பவர்களுக்கு மங்களமுண்டாகட்டுமென்பதே இவண் கருத்தாகும்.



## நான்காம் பிரிவு.

### பெருமானார் (ஸல்) அவர்களின் ஜனன மகிமை.



آبَانَ مَوْلِدُهُ عَنْ طِيبِ عُنْصُرِهِ
يَا طِيبَ مُبْتَدَءٍ مِنْهُ وَمُخْتَتَمِ



## 59-வது பாட்டு.

**அவர்களது ஜனனம், அவர்களது அசலின் பரிசுத்தத் தன்மையை வெளியிடுகிறது. அவர்களது பரம்பரை(யான ஆதம்நபி) யுடையவும், முடி(வான பிதா அப்துல்லாஹ்)வுடையவும் பரிசுத்தத் தன்மையின் மகிமையே!**

பெருமானாரின் ஜனனமும் அவர்களது பரம்பரையும் எத்தகைய அப்பழுக்கும் கூறமுடியாதவாறு பரிசுத்தத் தன்மையிலிருந்ததை இச்செய்யுள் விவரிக்கிறது.

பெருமானாரின் ஆதிபிதா ஆதம் நபி (அலை) அவர்களை எடுத்துக்கொண்டபோதிலும், பெருமானாரின் பரம்பரைப் பாட்டனார் ஹஜ்ரத் இப்ராஹீம் நபி (அலை) அவர்களை எடுத்துக்கொண்டபோதிலும், அவர்களது வர்க்கத் தலைவர்களை-மூதாதையர்களை எடுத்துக்கொண்ட போதிலும், அவர்களது

சொந்தத் தாய் தந்தையாரை எடுத்துக்கொண்டபோதிலும் எல்லவரும் பரிசுத்தத் தன்மையிலேயே இருந்துவந்திருக்கின்றனர். எனவே, அவர்களது பரம்பரையின் ஆதியும், முடிவும் எல்லாவகையிலும் மேம்பட்டவை என்பதையே நமது ஆசிரியப் பெரியார் இங்கு விளக்குகிருர்.



يَوْمٌ تَفَرَّسَ فِيهِ الْفُرْسُ أَنَّهُمْ
قَدْ أُنْذِرُوا بِحُلُولِ الْبُؤْسِ وَالنِّقَمِ



## 60-வது பாட்டு.

(பெருமாஞர் (ஸல்) ஜனித்த) அன்று பாரசீகர்கள் தங்களுக்கு வீழ்ச்சியும், வேதனையும் விளையப் போவதைக்குறித்து எச்சரிக்கப்பெற்றிருப்பதாக குறிப்பாலறிந்தனர்.



وَبَاتَ إِيوَانُ كِسْرَى وَهُوَ مُنْصَدِعٌ
كَشَمْلِ أَصْحَابِ كِسْرَى غَيْرَ مُلْتَئِمِ



## 61-வது பாட்டு.

(அன்று பாரசீக நாட்டு மன்னரான) கிஸ்ராவில் சகாக்கள் ஐக்கியமடைய முடியாதவாறு பிளவுண்டது போன்று கிஸ்ராவினது மாளிகை(யின் கலசங்கள்) பிளந்து இடிந்து விழ்ந்தது.

وَالنَّارُ خَامِدَةُ الْأَنْفَاسِ مِنْ أَسَفٍ
عَلَيْهِ وَالنَّهْرُ سَاهِي الْعَيْنِ مِنْ سَدَمِ

## 62-வது பாட்டு.

அன்றியும் (பெருமானார் (ஸல்) ஜனித்த அன்று பாரசீகர்களால் பூஜிக்கப்படும்) நெருப்பு கவலையால் அணைந்தும் (அந்நாட்டில் ஓடிக்கொண்டிருக்கும் புராத் எனும்) நதி துக்கத்தால் ஓடாது நின்றும் போயின.

وَسَاءَ سَاوَةَ أَنْ غَاضَتْ بُحَيْرَتُهَا
وَرُدَّ وَارِدُهَا بِالْغَيْظِ حِينَ ظَمِي

# பொருளடக்கம்

# 63-வது பாட்டு.

***ஸாவா எனும் நகருக்கு அதன் ஏரி வறண்டுவிட்ட காரணத்தால் துர்க்குறி பிடித்துவிட்டது. தாகித்த நிலையில் அதன்பால் தண்ணீர் அருந்தச் சென்ற வர்கள் (வறண்டு போயிருப்பதைக்கண்டு) எரிச் சலுடன் திரும்பினர்.***

பெருமானார் (ஸல்) அவர்கள் ஜனித்த அன்று ஸாவா நகரிலுள்ள பெரும் ஏரி வறண்டு போயிற்று. அதில் ஜலம் அருந்தச்சென்ற அந்நகரத்தார் வறண்டு போயிருப்பதைக் கண்டு வருத்தமும், எரிச்சலும் கொண்டு தங்கள் நாட்டிற்கு ஏதோ கெடுதி தோன்றப்போவதாக முடிவு செய்தனர்.

## ஸாவா நகரும் அதன் ஏரியும்.

ஸாவா என்பது ஈரான் தேசத்திலுள்ள முக்கிய பட்ட ணங்களில் ஒன்றாகும். ஹமதான், ரே ஆகிய இருநகரங் களுக்கு மத்தியில் இப்பட்டணம் இருந்தது. இங்குள்ள ஏரி பத்து மைல் நீளமும் ஆறு மைல் அகலமும் கொண்ட பிர மாண்ட ஏரியாகும். இதனைச் சிறு கடல் என்றும் கூறுவர். இதில் படகுகளும், சிறிய மரக்கலங்களும் வர்த்தகச்சாமான் களை ஏற்றிக்கொண்டு அதன் கரையோரமாகவுள்ள பட்ட ணங்களுக்குச் செல்வதுண்டாம். இவ்வளவு பெரிய ஏரியா னது பெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்த அன்று ஜலம் அறவேயில்லாது வரண்டு போயிற்று. இச்சம்பவத்தை அந்த ஸாவா நகரத்தார் இனி தங்களுக்கு நிகழப்போகும் ஒரு பெரும் விபத்துக்கு முன் அறிகுறியென மதித்து முடிவு கட்டிக்கொண்டனர்.

---



كَأَنَّ بِالنَّارِ مَا بِالْمَاءِ مِنْ بَلَلٍ
حُزْنًا وَبِالْمَاءِ مَا بِالنَّارِ مِنْ ضَرَمِ



## 64-வது பாட்டு.

**கவலையால், நெருப்பிருந்த இடத்தில் நீருக்குரிய ஈரமும், நீரிருந்தவிடத்தில் நெருப்புக்குரிய உஷ்ணமும், இருப்பது போன்றிருந்தது.**

### நெருப்பிருந்தவிடம் நீர், நீரிருந்தவிடம் நெருப்பு.

பெருமானார் (ஸல்) அவர்கள் ஜனித்த அன்று, பாரசீகர்களால் வணங்கப்பட்டுவந்த நெருப்பு கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த இடத்தில் நெருப்பெல்லாம் அணைந்து தண்ணீருக்குரிய ஈரநைப்பு தோன்றிவிட்டது. அன்றியும், பெரும் ஏரி வறண்டு போய்விட்டதால், பெருவாரியாக ஓடிக்கொண்டிருந்த தண்ணீரெல்லாம் இல்லாதுபோய் அவ்விடத்தில் நெருப்பின் உஷ்ணம்போன்று தகிக்கவாரம்பித்தது. ஆகக்கூடி நெருப்பிருந்த இடத்தில் குளிர்ச்சியும், தண்ணீரிருந்தவிடத்தில் நெருப்பும் ஆக ஒன்றுக்கொன்று நேர் முரணான தன்மைகள் உண்டாய்விட்டது. எனவே, இத்தகைய பெரும் மாறுதல் ஏற்பட்டதானது பிற்காலத்தில் உலகிலேற்படப்போகிற பெரிய மாறுதலுக்கு முன் அறிவிப்புக்களாக இருந்தன. இக்கருத்தைத்தான் மேலேகண்ட செய்யுட்கள் அறிவுறுத்துகின்றன.

وَالْجِنُّ تَهْتِفُ وَالْأَنْوَارُ سَاطِعَةٌ
وَالْحَقُّ يَظْهَرُ مِنْ مَعْنًى وَمِنْ كَلِمِ

## 65-வது பாட்டு.

மேலும், ஜின்கள் கூச்சலிடுகின்றன. (அஷ்டதிக்குகளிலும்) ஜோதிகள் பிரகாசிக்கின்றன; உண்மையானது உள்ளறிவின்மூலமும் உரைகளின்மூலமும் வெளியாகிறது.

عَمُوا وَصَمُّوا فَإِعْلَانُ الْبَشَائِرِ لَمْ
تُسْمَعْ وَبَارِقَةُ الْإِنْذَارِ لَمْ تُشَمِ

## 66-வது பாட்டு.

அவர்கள் குருடர்களாவும், செவிடர்களாகவும் இருந்தனர். எனவே, நல்வாக்குகளைக்கொண்ட பிரகடனம் செவியுறப்படவில்லை; எச்சரிக்கையெனும் மின்னலும் கவனிக்கப்படவில்லை.



مِنْ بَعْدِ مَا أَخْبَرَ الْأَقْوَامَ كَاهِنُهُمْ
بِأَنَّ دِينَهُمُ الْمُعْوَجَّ لَمْ يَقُمِ



## 67-வது பாட்டு.

அச்சமூகத்தாருக்கு அவர்களது கோணல் மார்க்கமானது (இனி) நிலைக்காதென அவர்களது குறிகாரர்கள் அறிவுறுத்தியபின்னரும்,



وَبَعْدَ مَا عَايَنُوا فِي الْأُفُقِ مِنْ شُهُبٍ
مُنْقَضَّةٍ وَفْقَ مَا فِي الْأَرْضِ مِنْ صَنَمِ



## 68-வது பாட்டு.

புவியிலுள்ள விக்கிரஹங்களுக்கு நேராக விழும் எரிநட்சத்திரங்களை விண்ணில் அவர்கள் கண்ணுற்ற பின்னரும் (மேற்கண்ட நிலையிலேயே இருக்கின்றனர்.)

## ஜின்கள் என்பவர் யாவர்?

ஜின்கள் என்பவர்கள் மனிதன், மலக்கு ஆகிய இரண்டுமல்லாத மூன்றுவதொரு வர்க்கமாகும். மனிதன் மண்ணினாலும், மலக்குகள் ஜோதியினாலும் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதுபோன்று, ஜின் வர்க்கம் நெருப்பினால் சிருஷ்டிக்கப்டுள்ளது. மானிட வர்க்கத்திற்கு மூலபிதாவாக ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்கள் அமைந்ததுபோல் ஜின் வர்க்கத்திற்கு மூலபிதாவாக "ஜான்னு" என்பவர் அமைந்திருக்கிறார். இவ்வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் மனிதன் முதலான சர்வ ஜீவராசிகளைப் போன்று உருவத்தோற்றம் கொள்ள சக்தி பெற்றிருக்கின்றனர். இவர்கள் விண்ணிலும், மண்ணிலும் சஞ்சரிப்பார்கள். குறி, கோடங்கி சொல்பவர்களிடம் இவர்கள் தோன்றி பல விஷயங்களையும் கூறுவதுண்டு. இவர்கள் கூறுவதை அக்குறிகாரர்கள் மக்களிடம் சொல்லி ஏமாற்றி அவர்களிடமிருந்து தங்கள் தேவைகளை நிறைவேற்றிக்கொள்கின்றனர். இது அநாகரீகர்களால் இன்றுங் கூட செய்யப்பட்டுக்கொண்டு வருகிறது.

பெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்த காலத்தில் அறப்நாட்டில் அத்தகார அஞ்ஞானம் சூழ்ந்திருந்ததாலும் விக்ரக ஆராதனை நிரம்பிப்போயிருந்ததாலும், குறி, கோடங்கி சொல்பவர்கள் மலிந்து காணப்பட்டனர். உண்மையில் அவர்களுக்கு இவர்கள்தான் மதகுருமார்கள் போன்றிருந்தனர் எனலாம். இவர்கள் கூறுகிறபடியே விக்கிரக ஆலயங்களை நிர்மாணிப்பதும், வணங்குவதும் வழக்கமாக இருந்து வந்தது. ஆகவே, ஜின் வர்க்கம் பெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்த தினத்தன்று பீதியுற்றுக் கதிகலங்கியது. ஏனெனில், இனிமேற்கொண்டு அசத்தியம் ஓங்காது; அஞ்ஞானம் அகன்று ஒழிந்துவிடும். தங்கள் கட்டளைக்கியங்க மக்கள் கண்மூடித்தனமாக இனி எதையும் வணங்கமாட்டார்கள். ஆகையால், இனிமேல் தங்களது செல்வாக்கு ஓங்காது

என்ற அச்சத்தால் கூச்சலிட்டனர். இதைத்தான் 65-வது செய்யுள் எடுத்துக்காண்பிக்கிறது.

ஜின்களின் கூச்சல் அவர்களது பீதியை அறிவித்த போதினும் பெருமானார் (ஸல்) அவர்கள் மூலமாக வருங் காலத்தில் அஞ்ஞானம் ஒழிந்து, மெஞ்ஞானம் பரவிப் பிரகா சிக்குமென்ற நற்செய்தியையும் பிரகடனப்படுத்தப்படுகிறது. இந்நற்செய்தியை கேட்டபின்னரும் அவர்கள் தங்களைத் திருத்திக்கொள்ள முன்வராததால் அன்னோர் செவியேற்க முடியாத செவிடர்களாகவே இருக்கின்றனர். அன்றியும், பெருமானார் (ஸல்) ஜனித்த அன்று அஷ்டதிக்குகளிலும் பிரகாசித்த ஜோதியானது உலகில் இனி ஏற்படவிருக்கும் விசேஷத் தன்மையைக்குறித்து நற்செய்தி சொல்வனவாக இருந்தன. இவ்வெச்சரிக்கையை அடையாளங்களின்மூலம் பார்த்தும் அவர்கள் திருந்தி நல்வழிவர முன்வரவில்லை. எனவே, அவர்கள் இவ்விஷயத்தில் குருடர்களாகவே இருக் கின்றனர். இக்கருத்துக்களைத்தான் 66, 67-வது செய்யுட்கள் அறிவிக்கின்றன.

இச் சம்பவங்களையும், முன் கூறப்பட்ட இதர சம்பவங் களையும்பற்றி அவர்கள் மத்தியிலுள்ள குறிகாரர்களும், ஜோஸியர்களும் தெரிந்திருந்துங்கூட அவர்கள் தங்களது போக்கைக் குறித்துச் சிந்திக்கவோ, தங்களைத் திருத்திக் கொள்ளவோ முன்வந்தனரில்லை.



حَتّٰى غَدَا عَنْ طَرِيْقِ الْوَحْيِ مُنْهَزِمٌ
مِنَ الشَّيَاطِيْنِ يَقْفُوْ اِثْرَ مُنْهَزِمِ



# 69-வது பாட்டு.

**முடிவில் தோல்வியுற்றவரின் சுவட்டைப் பின் தொடர்ந்து தோல்வியுற்ற ஷைத்தான்கள் தெய்வத் தூதின் (-வஹ்யின்) பாதையைவிட்டகன் றோடினர்.**

## குறிகாரர்களும், ஷைத்தான்களும்.

### எரி நட்சத்திரங்கள்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஜனித்த இரவு முழுமையும் வானிலிருந்து எரிநட்சத்திரங்கள் விழுந்து கொண்டிருந்த சம்பவத்தையும், அதனால் ஷைத்தான்கள் அடைந்த அல்லல்களையும் நமது ஆசிரியப் பெரியார் 68, 69-வது செய்யுட்கள்மூலம் விவரிக்கிறார்.

பெருமானார் (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு முன்னரும் இவ்வெரி நட்சத்திரங்கள் விழுந்துகொண்டுதானிருந்தன வெனினும், அன்றிரவு அதிகமாக விழுந்ததுபோன்று இல்லை. இதற்குக் காரணம் என்னவென்றால், இம் மண்ணுலகில் நிகழும் சர்வ காரியங்களையும் நிகழ்த்திச்செய்பவர்கள் மலக்குகளாவர். இவர்களது வாசஸ்தலங்கள் வானுலகாகும். தங்களது இறைவனால் தங்களுக்கிடப்படும் கட்டளைகளைக் குறித்து பரஸ்பரம் ஒருவரோடொருவர் பேசிக்கொள்வதை முன் பிரஸ்தாபிக்கப்பட்ட ஷைத்தான்கள் திருட்டுத்தனமாக செவியேற்று தங்களை ஆராதனை புரியும் குறிகாரர்களிடம் சொல்வதும், அத்துடன் நூற்றுக்கணக்கான பொய்களைச் சேர்த்துக்கொண்டு பொதுமக்களை குறிகாரர்கள் ஏமாற்றிப் பிழைப்பதும் வழக்கமாக இருந்துவந்தது.

பெருமானுர் (ஸல்) அவர்கள் பிறந்த சம்பவம், உலகப் போக்கில் ஒரு பெரிய மாறுதலை உண்டுபண்ணுவதற்கு முன்னேற்பாடானதாக இருந்ததால், இதனைக்குறித்து வானவர்கள் உரையாடிக்கொள்வதை முன் கூறப்பட்ட ஷைத்தான்கள் மேலேறித் திருட்டுத்தனமாகச் செவியேற்று மெய்யையும், பொய்யையும் கலந்து வருங்கால விஷயங்களை முற்கூட்டியே கூறிவிடுவதாகச் சொல்லி பொதுமக்களை வழிகெடுத்துவிடாமலிருக்கும்பொருட்டு நெருப்புப் பந்தங்களால் அவர்கள் துரத்தியடிக்கப்பட்டார்கள். மேலும் ஷைத்தான்கள் திருட்டுத்தனமாக மேலேறிச்செல்லும் பாதைகளிலெல்லாம் மலக்குகள் காவல் புரிந்து அங்கு ஒளிந்துகொண்டுவரும் ஷைத்தான்களை எரிநட்சத்திரங்களால் எறிந்து விரட்டினுர்கள். தோல்வியடைந்து ஓடுபவர்கள், ஒருவர்பின் ஒருவராக ஓடுவதுபோன்று இந்த ஷைத்தான்கள் ஓடிவருவதும் இருந்தது.

பெருமானுர் (ஸல்) அவர்கள் பிறந்த அன்று, வானிலிருந்து அதிகமான எரிநட்சத்திரங்கள் விழுவதையும் அன்றிரவு பூமியிலுள்ள விக்கிரகங்கள் தலைகீழாக கவிழ்ந்ததையும் அநேகர் பார்த்தனர்; எனினுங்கூட திருந்திக்கொள்ளாது குருடர்கள், செவிடர்கள்போன்றே இருந்துவிட்டனர்.



كَأَنَّهُمْ هَرَبًا أَبْطَالُ أَبْرَهَةٍ
أَوْ عَسْكَرٌ بِالْحَصَى مِنْ رَاحَتَيْهِ رُمِي



## 70-வது பாட்டு.

வெகுண்டோடுவதில், அவர்கள் (-ஷைத்தான்கள்) 'அப்ரஹா'வின் வீரர்கள் போன்றும் அல்லது பெருமான் (ஸல்) அவர்களின் இரு உள்ளங் கரங்கள்மூலம் கல்லடிபட்ட படையைப் போன்று மிருந்தார்.



نَبْذًا بِهِ بَعْدَ تَسْبِيحٍ بِبَطْنِهِمَا
نَبْذَ الْمُسَبِّحِ مِنْ أَحْشَاءِ مُلْتَقِمِ



## 71-வது பாட்டு.

அது (-அக் கல் அவர்களது) இரு உள்ளங்கைகளில் தஸ்பீஹ் செய்துகொண்டிருந்த பிறகு எறிந்தது போன்றும், (அல்லது) விழுங்கிக்கொண்டதின் (மீனின) வயிற்றில் தஸ்பீஹ் செய்துகொண் டிருந்த (யூனுஸ் நபிய)வர்களை எறிந்தது போன் றும் (இருந்தது).

துரத்தியடிக்கப்பட்ட ஷைத்தான்கள் வெகுண்டோடிய தன்மையை மூன்று உதாரணங்கள்மூலம் இச்செய்யுளில் விளக்கப்படுகிறது. அவற்றில் 70-வது செய்யுள் பெருமானார் (ஸல்) ஜனிப்பதற்கு சில நாட்களுக்கு முன்பு நடந்த சம்ப வத்தையும், 71-வது செய்யுள் பெருமானாரின் காலத்தில் நடந்த ஒரு சம்பவத்தையும் பெருமானாருக்கு முன்னுள்ள நபிமார்களில் ஒரு நபிக்கு நடந்த சம்பவத்தையும் விளக்கு கிறது.

<u>முதற் சம்பவம்.</u>

## கஃபாவை இடித்துத்தகர்க்க யானைப்படையுடன் புறப்பட்ட அப்ரஹா.

பெருமானார் (ஸல்) அவர்களுக்கு முன்னர் அறப் நாடானது வடக்கில் கைஸர் சக்கரவர்த்தியாலும் கிழக்கில் கிஸ்ரா சக்கரவர்த்தியாலும், தெற்கில் அபீஸீனியச் சக்கரவர்த்தியாலும் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. மேற்குப் பகுதியில் ஹிஜாஸ் மாகாணமும் அதனுடன் இணைந்துள்ள சில பகுதிகளும் மாத்திரம் அந்நிய அரசாங்கத்தினரால் ஆக்கிரமிக்கப் படவில்லை. எனினும் மேற்கண்ட மூன்று சக்கரவர்த்திகளும் இப்பிரதேசத்திலும் தங்களது ஆதிக்கத்தை நிலைநாட்ட முனைந்துகொண்டிருந்தனர்.

அபீஸீனியச் சக்கரவர்த்தியால் ஆக்கிரமிக்கப்பட்ட தென் பகுதியில் அப்ரஹா என்பவர் இராஜப்பிரதிநிதியாக இருந்து அரசாட்சி செய்துகொண்டிருந்தார். பிரதி ஆண்டும் அறபியர்கள் திருமக்காவுக்குக் கூட்டங்கூட்டமாகச் செல்வதையும் அங்குள்ள தேவாலயத்தை (-திருகஃபாவை)த் தரிசிப்பதையும் அறிந்த அவ்வரசப் பிரதிநிதி அவர்களை ஒன்றுகூடுவதற்கு இடங்கொடுத்துவந்தால் தங்களது ஏகாதிபத்தியக் கொள்கைக்கு இடைஞ்சல் ஏற்பட்டு சிதறிப் போய்விடுமெனப் பயந்து அவ்வறபியர்களை அங்கு செல்லாமல் தடுத்து நிறுத்த ஒரு யுக்தி செய்தார்.

எமன் தேசத்திலிருந்த தனது இராஜதானிப் பட்டணத்தில் ஒரு மாதா கோவிலை நிர்மாணித்து இக்கோவிலையே பிரதி ஆண்டும் ஜனங்கள் வந்து தரிசிக்கவேண்டுமென்றும் திருமக்கா சென்று கஃபா என்ற ஆலயத்தைத் தரிசிப்பதில் எத்தகைய புண்ணியமுமில்லையென்றும் பிரகடனம் செய்து

கிறிஸ்துவ மதப் பிரசாரத்தைத் தொடங்கினர். இப்பிரசாரப் பிரகடனம் நாட்டு மக்களுக்குத் தெரியவரவே ஒருவர் அந்த தலைநகருக்குச் சென்று அம்மாதாகோவிலின் பணியாளராக அமர்ந்து சிலநாட்களுக்குப் பின்னர் ஓரிரவில் அக்கோவிலி லேயே மலங்கழித்து அதனுள்ளிருந்த சிலைகளிலெல்லாம் அதனை எடுத்துத் தடவி அசங்கியம் செய்துவிட்டு இரவோடு இரவாகத் தப்பியோடிவிட்டார்.

மறுநாட்காலையில் இச்சம்பவம் கோவிலின் பிரதம அதிகாரிகளுக்கு எட்டிற்று. இராஜப்பிரதிநிதியான அப்ரஹாவுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. திருமக்காவின்மீது படையெடுத்து அறபிய மகாஜனங்களால் மதிக்கப்படுவதும் அதன்மூலம் அறபிய ஐக்கியம் ஏற்படக் காரணமாக இருப்பதுமான திருகஃபாவை இடித்துத் தகர்த்து தரைமட்டமாக்கிவிடவும் அறபியரை நிரந்தரமான அடிமைகளாக ஆக்கவும் தக்க காரணமும் சந்தர்ப்பமும் கிடைத்ததென மகிழ்ந்தார். தனது மாதா கோவிலை அசுத்தம் செய்தவன் திருமக்காவாசியாதலால் இச்செய்கைக்கு அவர்களும் சேர்ந்து சதி செய்திருப்பர்; ஆதலின் அவர்களது ஆலயத்தை இதற்குப் பதிலாக இடித்துத் தள்ளிவிடுகிறேன் எனப் பெரும் படையைத் திரட்டினான். அபிஸீனிய மன்னனுக்கும் இத்தகவலைத் தெரிவித்து அவரது சொந்த யானையான மஹ்மூது எனும் பெயருள்ள யானையையும் தருவித்து பெரும் யானைப் படையையும் தயார்செய்து திருமக்காவை நோக்கிப் புறப்பட்டான்.

திருமக்காவின் எல்லை வந்ததும் ஓரிடத்தில் கூடாரமடித்து முகாம் போட்டுக்கொண்டு ஒரு தூதுவனை மக்காவிற்கு அனுப்பி தனது வருகையைத் தெரிவித்தான். "திருமக்காவாசிகளோடு தான் போரிடப் போவதில்லை; திருகஃபாவை இடித்துத் தகர்க்கவேதான் வந்திருக்கிறேன். எனது இந்நோக்கத்தை நிறைவேற்றவிடாமல் தடுப்பவர் எவராயினும் நான் சரியானபடி, தண்டிக்க உறுதி கொண்டிருக்கிறேன்." எனவும் தகவல் அறிவித்திருந்தான்.

அக்காலத்தில் பெருமானார் (ஸல்) அவர்களின் பிதாமகர் அப்துல் முத்தலிப் என்பவர் திருமக்காவாசிகளின் தலைவராக வும், கஃபாவின் பிரதம நிர்வாகியாகவும் இருந்துகொண்டிருந் தார். அவரிடமே முன்கூறப்பட்ட அப்ரஹாவின் தூதுவன் வந்து தனது தலைவனின் செய்தியைத் தெரிவித்தான். "திரு கஃபாவை இடித்துத் தகர்ப்பதைத் தடுக்கத் தாம் எவ்வித ஏற்பாடும் செய்யப்போவதில்லை; அவ்வாலயத்துக்குச் சொந்தக்காரன் அதனைக்குறித்துப் பொறுப்பேற்றுக்கொள் வான்" என்று அர்த்தபுஷ்டியுடன் பதிற்சொல்லியனுப்பினார் என்றாலும் அப்ரஹாவின் கட்டளைப்படி அவனது சிப்பாய்கள் திருமக்காவாசிகளது ஒட்டகைகள், சொத்துக்கள் முதலிய வற்றைக் கொள்ளையடித்துக் கவர்ந்துசென்றனர். இவற்றில் அப்துல்முத்தலிபுக்குச் சொந்தமான ஒட்டகைகளுமிருந்தன வாதலால் அவற்றை மீட்டுவருவதற்காக அப்ரஹா இருக்கு மிடம் சென்று தனது விஜயம் குறித்துத் தகவல் தெரிவித் தார். அவனும் இவருக்குப் பேட்டியளித்து மரியாதை செய் தான். தம்மை பேட்டி காண வந்ததற்கான காரணத்தை அப்ரஹா வினவியபோது, "தம்முடையவும், தமது நகரவாசி களுடையவும் ஒட்டகைகள் கொள்ளையிடப்பட்டிருக்கின்றன. அவற்றை வாபஸ் பெற்றுச் செல்வதற்கே வந்தேன்" எனப் பதிலளித்தார் அப்துல் முத்தலிப். "திருகஃபாவை இடிக்க வேண்டாமென சிபாரிஷ் செய்யத்தாம் வந்திருக்கிறீரோ வென்று நினைத்தேன்" என்று அப்ரஹா உரைத்துவிட்டு ஒட்டகைகளை ஒப்படைத்துவிடுமாறு கட்டளையிட்டான். அத்தருணத்திலுங்கூட பெரியார் அப்துல்முத்தலிப் திரு கஃபாவுக்குச் சொந்தக்காரன் நான் அல்லன்; அதற்குச் சொந்தக்காரன்தான் அதனைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டும்; எனக்கு அதில் சிரத்தையில்லை என்று மறு மொழி கொடுத்துவிட்டு வந்தார்.

நகருக்கு வந்த அவர் பொதுமக்களை ஒன்றுகூட்டி விஷ யங்களை எடுத்துக்கூறி "அவரவர் சாமான்களை எடுத்துக்

கொண்டு மலைகளிற்சென்று பதுங்கிக்கொள்ளுங்கள்" என்று கட்டளையிட்டார். ஜனங்கள் நகரை காலிசெய்து விட்டுப் போனபிறகு அவரும் சில பிரபலஸ்தரும், திருக:பா சென்று அதற்குரியவனை இறைவனிடம் பிரார்த்தித்துவிட்டுச் சென்றுவிட்டனர். நகரமோ நிர்மானுஷ்யமாகிவிட்டது.

## அக்கிரமக்காரர்களின் அழிவு.

மறுநாட்காலையில் அப்ரஹா தம்பரிவாரங்களுடன் புறப் பட்டான். நகர எல்லையில் யானைகள் படுத்துக்கொண்டு எழுந்திருக்காமல் சத்தியாக்கிரகம் செய்தன. எல்லையினுட் பிரவேசிக்கவில்லை. நகர திசையைவிட்டு வேறு பக்கம் ஓட் டினால் அவைகள் எழுந்துசெல்கின்றன. நகரை நோக்கி ஒட்டினால் படுத்துவிடுகின்றன. இச்செய்கையால் கோபமுற்ற அவர்கள் அவைகளை அடித்துத் துன்புறுத்தி நிர்ப்பந்தித்துக் கொண்டிருக்கையில் விண்ணில் சிறிய பறவைக்கூட்டங்கள் தென்பட்டன. அவைகளிலிருந்து பொடிக்கற்கள் அப்படை யின்மீது வீழ்ந்தன. அக்கற்கள் மிகச்சிறியவையேயாயினும் இறைவனின் கோபாக்கினிக் கட்டளைப்படி வந்தவையாத வின் அக்கற்களால் அடிபட்ட யாவரும் மடிந்து துவம்சமா யினர். அடி பொறுக்கமாட்டாமல் பின்வாங்கி ஓடிய யாவரை யும் அப்பறவைகள் விடாமல் பின்தொடர்ந்து சென்று கற்களை வீசின. இச்சம்பவத்தைக்குறித்து இறைவனும் தனது திருகுர்ஆனில் "ஸூரத்துல்பீல்" என்ற அத்தியா யத்தில் பிரஸ்தாபித்துள்ளான்.

இவர்கள் பின்வாங்கியோடினதுபோன்றே வான் நோக் கிச்சென்ற வைத்தான்கள் துரத்தியடிக்கப்பட்டபோது ஓடிய காட்சியிருந்தது என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

இரண்டாம் சம்பவம்.

## கற்களின் தஸ்பீஹ்.

பெருமானார் (ஸல்) அவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தக்கால், எதிரிகளால் மூட்டப்பட்ட பல போர்களில் எதிர்த்துப்போராடவேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு ஏற்பட்டது. அவ்வாறு நிகழ்ந்த போராட்டங்களில் பத்ரு என்ற ஸ்தலத்திலும், ஹுனைன் என்ற ஸ்தலத்திலும் (இவ்விரு யுத்தங்கள்பற்றிய முழு விபரம் பின்னால் வரும்.) நிகழ்ந்த யுத்தங்களின்போது பெருமானார் (ஸல்) அவர்கள், தங்கள் திருக்கரங்கள் நிறையப் பொடிக்கற்களைப் பகைவர்களை நோக்கி எறிந்தார்கள். இக்கற்கள் ஒன்றுகூட இலக்குத் தவருது அப்பகைவர்கள்மீது தைத்தன. இதனால் அவர்களுக்கு அதைரியமுண்டாகி பீதியடைந்து பின்வாங்கி ஓடினர். முஸ்லிம்கள் அவர்களைப் பின்தொடர்ந்து தாக்கி, அநேகர்களைக் கைதும் செய்தனர். முஸ்லிம்கள் இங்கு வெற்றியடைவதற்கு அவர்களது சுயபலம் முக்கியக்காரணமன்று. பெருமானாரின் பொடிக்கற்களினடிதான் முக்கியக்காரணம். இதனை இறைவனும் தனது திருகுர்ஆனில் பின்வருமாறு பிரஸ்தாபிக்கிருன்.

**“நீங்கள் அவர்களைக் கொன்றுவிடவில்லை; எனினும் அல்லாஹ்வே அவர்களைக் கொன்ருன். (கற்களை) நீர் எறிந்தபொழுது நீர் எறியவில்லை. எனினும் அல்லாஹ்வே எறிந்தான். அதன்மூலம் உண்மை விசுவாசிகளை அழகான சோதனையாக அல்லாஹ் சோதிப்பான்வேண்டி; நிச்சயமாக அல்லாஹ் அதிகமாகச் செவியுறுவோனும் மிக்க அறிந்தோனுமாவான்.” (8-17)**

எனவே அவர்கள் அதைரியமடைந்ததும் தோல்வியுண்டதும் தன்னுல்தான் என்பதை இவ்வசனத்தின்மூலம் இறைவன் உணர்த்துகின்ருன்.

தஸ்பீஹ்.

இக் கற்கள் பெருமானாரின் கரங்களிலிருக்கும்பொழுது இறைவனை தஸ்பீஹ் செய்தன என்ற பொருள் கொள்ளத் தக்கவிதத்தில் செய்யுள் கூறுகிறது.

மேலும், "நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் (திருக்) கரங்களால் கற்களை எடுத்தார்கள். அவர்களது கைகளில் அவை தஸ்பீஹ் செய்தன. பின்னர் அவைகளை ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் கொடுத்தார்கள். அவர்களது கையிலும் அவைகள் தஸ்பீஹ் செய்தன. இதனை நாம் செவியேற்றோம். பின்னர் எங்கள் கைகளில் கொடுத்தனர். அவைகள் தஸ்பீஹ் செய்யவில்லை." என்று ஹஜ்ரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (நூல்: பாஜூரி)

மூன்றும் சம்பவம்.

## ஹஜ்ரத் யூனுஸ் நபி (அலை).

மேற்கண்ட இரு சம்பவங்களில் பொடிக்கற்கள் எறியப் பட்டதற்கு வேறொரு முற்கால சரித்திர சம்பந்தமான ஒரு சம்பவத்தை நமது ஆசிரியப்பெரியார் உதாரணம் கூறுகிறார். அது ஹஜ்ரத் யூனுஸ் நபி (அலை) அவர்கள் சம்பந்தமாக நிகழ்ந்த ஒரு அற்புதத்தைச் சுட்டிக்காண்பிக்கிறது. அவ்வற்புதம் வருமாறு:

இராக் தேசத்துக்கு வடக்கிலுள்ள மோசூல் நகருக்கு எதிரில் டைகிரிஸ் நதிக்கப்பால் நைனுவா என்றொரு நகரமுண்டு. அந்நகரிலுள்ள மக்கள் அல்லாஹ்விற்கு இணை வைத்து வணங்குபவர்களாயிருந்தனர். அவர்களுக்குச் சன்மார்க்கத்தைப் போதிக்கும்பொருட்டு ஹஜ்ரத் யூனுஸ் நபி (அலை) அவர்களை இறைவன் தோற்றுவித்தான். அவரது

உபதேசங்கள் அம்மக்களின் செவிகளில் ஏறவில்லை. அவர்கள் கோரிக்கொண்ட அற்புதங்களை அந்த நபி அவர்கள் காண்பித்துங்கூட அவர்கள் மனந்திரும்பினாரல்லர். எனவே, அன்னோரின்மீது இறைவன் கடும் வேதனையை இறக்கப் போவதாக ஹஜ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் தெரிவித்தார்கள். இவ்வெச்சரிக்கையை அவர்களுக்கு உணர்த்தியுங்கூட அவர்கள் பொருட்படுத்தவில்லை. ஆகவே வேதனை இறங்குவதற்கென்று குறிப்பிட்டுள்ள தவணை வரையில் யூனுஸ் நபி (அலை) அவர்கள் அந்த ஜனங்களுடன் இருந்துவிட்டு அப்பால் தம் மனைவியையும், இரு புதல்வர்களையும் அழைத்துக் கொண்டு நகரைவிட்டு வெளியேறினார்கள்.

குறிப்பிட்ட தவணையில் வேதனை இறங்குவதற்கான அறிகுறிகள் வானில் தோன்றின. இவற்றைக்கண்ணுற்ற அம்மக்கள் பீதியடைந்து யூனுஸ் நபியை தேடிப்பார்த்தார்கள். நபியவர்கள் நகரில் இல்லாததால் அல்லாஹ்விடமே அவர்கள் யாவரும் மன்னிப்புக்கோரி கெஞ்சினர்கள். தங்களது குற்றங்களையும், அநியாயங்களையும் அடியுடன் விட்டொழித்தனர். உண்மையாகவே தங்களது முன்செய்கைகள் குறித்து அழுது பச்சாதாபப்பட்டனர். இறைவனும் அவர்களை மன்னித்து அவர்கள்பால் இறக்கவிருந்த வேதனையை மாற்றிவிட்டான்.

ஹஜ்ரத் யூனுஸ் நபியவர்கள் நகரைவிட்டு வெளியேறி விட்டபோதிலும் நகர மக்களின் கதியை அறிய விரும்பினார்கள். அச்சமயத்து ஒரு வயோதிகன் தென்பட்டான். அவனை விசாரித்தபொழுது, "நகரில் ஒன்றும் நிகழவில்லை. யூனுஸ் தங்களிடம் பொய்யுரைத்துவிட்டு வெளியேறிவிட்டதாக நகர மக்கள் கருதுகின்றனர்" என்று தகவல் கொடுத்தான். இவ்வாறு தகவல் கொடுத்தவன் மனித ரூபத்தில் தோன்றிய "இப்லீஸ்" ஆவான். உண்மையற்ற இவ்விபரத்தைக்கேட்டு நம்பிக்கை கொண்ட யூனுஸ் நபி "தன்னை பொய்யன்" எனக்

கருதுபவர்களிடம் திரும்பவும் செல்வதில்லை என¯ சபதம் செய்துகொண்டு வேறு எங்கேனும் சென்றுவிடத் தீர்மா னித்து புறப்பட்டார்கள்.

ஹஜ்ரத் யூனுஸ் நபியவர்கள் இறைவனின் கட்டளைப் படியே நகரைவிட்டு வெளியேறினார்களென்றாலும், அவ்வூருக் குத் திரும்பவும் செல்வதில்லையென வைராக்கியங்கொண்டது அவசரப்பட்ட செய்கையாகும். அவர்கள் நபியாக இருந்தும் தன் கட்டளைக்குக் காத்திராமல் ஆத்திரப்பட்டதால் அல் லாஹ் அவரை பல சோதனைகளுக்கு உட்படுத்தினான். ஆனால், ஹஜ்ரத் யூனுஸ் நபியவர்கள் இவ்வாறு செய்தது சாமானிய மனிதர்கள் சாதாரணமாகச் செய்யும் காரியமே; குற்றமற்றதே. எனினும் இவர்கள் நபியாக இருந்ததால் மறுபடியும் இறைவனின் கட்டளை எப்படி பிறக்கிறதென் பதை எதிர்பார்த்திருக்கவேண்டும். எனவே இது அவர்கள் சம்பந்தப்பட்டமட்டில் அவரது அந்தஸ்துக்கு ஒவ்வாத செய்கையாதலால் சோதனைச்சுழலில் தள்ளப்பட்டார்கள்.

## மனைவி மக்களை இழந்து பரிதவித்த நபி.

யூனுஸ் நபி தம் மனைவி மக்களுடன் போய்க்கொண்டிருக் கையில் ஒரு நதி குறுக்கிட்டது. அதில் வெள்ளப் பிரவாகம் வந்துகொண்டிருந்ததால், தம் புதல்வர்களை ஒவ்வொருவ ராக கடத்தும் வேலையில் ஈடுபட்டார்கள். முதலில், தமது மூத்த புதல்வரை நதியைவிட்டுக் கடத்தி அப்பால் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். திரும்பவும் வந்து இரண்டாம் புதல் வரைத் தூக்கிக்கொண்டு நதியில் நீந்திச்செல்கையில் பெரும் அலை வந்து மோதியதால் இளைய புதல்வர் நழுவி ஜலத்தில் மூழ்கிவிட்டார். குழந்தையைத் தேடிப்பார்த்தும் அகப்படாததால் குழந்தைக்கு ஆபத்து நேரிட்டுவிட்ட தென்று பெரும் கவலைக்குள்ளானார்கள். இதற்குள் மறு

கரையில் விடப்பட்டிருந்த மூத்த புதல்வரை ஒரு ஓநாய் கௌவிக்கொண்டு ஓடிற்று. அதனைப் பின்தொடர்ந்த நபியவர்கள் ஓடியும் ஓநாய் கைக்கு அகப்படவில்லை. ஆனால், அது பின்வருமாறு பேசிற்று. "யூனுஸே! நீர் திரும்பிச் செல்லும்; உமது குழந்தையை விடமாட்டேன்" இதனைச் செவியேற்ற நபியவர்கள் இன்னுமதிகக் கவலையுடன் இக் கரைக்கு வந்து பார்க்குமிடத்து தமது மனைவியைக் காண வில்லை. எனவே, மனைவிமக்களை இழந்து பரிதபித்து கவலை யில் மூழ்கியவர்களாக மனம்போன போக்கில் நடந்து சென் றார்கள். ஒரு கடற்கரையை அடைந்தார்கள். இனி எங்கே போவது?

## ஆம்! மச்சத்தின் வயிற்றினுள்தான்!

அங்கு ஒரு மரக்கலம் நின்றுகொண்டிருந்தது. அதன் மாலுமி இவரைக்கண்டு இரக்கங்கொண்டு எத்தகைய கூலி பணமுமின்றி தனது கப்பலில் ஏற்றிக்கொண்டான். அம் மரக் கலம் சமுத்திரத்தில் கொஞ்ச தூரம்தான் போயிருக்கும். திடீரென ஒரு பெரும் புயல் ஏற்பட்டது. மரக்கலம் மூழ்கி விடும்போல் தோன்றிற்று. "எத்தகைய முன்னறிகுறியுமின்றி திடீரெனப் புயல் ஏற்பட்டு அவதிக்காளாவதற்குக் காரணம் இதிலமர்ந்திருக்கும் பிரயாணிகளில் எவரேனும் குற்றவாளி யாக இருக்கவேண்டும். அவரால்தான் இத்தனை கஷ்டம் வந்து சம்பவித்திருக்கிறது" என்று அம் மரக்கலத்தார் முடிவுகட்டினர். அப்பொழுது ஹஜ்ரத் யூனுஸ் (அலை) அவர் கள், "இதில் ஒரு அடிமையிருக்கிறான், அவன் தன் எஜ மானனை விட்டு ஓடிவந்தவன். அவனை நீங்கள் சமுத்திரத் தில் தள்ளிவிடுங்கள். அவ்வாறு செய்தால்தான் நீங்கள் இவ்வாபத்திலிருந்து தப்பமுடியும்" என்றார்கள். இவ்வாறு அவர்கள் கூறிக்கொண்டிருக்குங்கால், ஒரு பிரமாண்டமான மீன் வாயைத் திறந்துகொண்டு ஆவேசத்தோடு வந்து

கொண்டிருந்தது. இம் மச்சம் அம் மரக்கலத்தையே விழுங்கி விடுமோவென எல்லோரும் அஞ்சினர். அச்சமயம் யூனுஸ் நபியவர்கள் "இக்கொடிய கஷ்டங்களுக்கு நானேதான் காரணஸ்தன். என்னைச் சமுத்திரத்தில் தள்ளிவிடுங்கள். உங்களுக்கு விமோசனம் உண்டாய்விடும்" என்று கூறினார்கள். இதனை அவர்கள் செவியேற்காமல், "திருவுளச் சீட்டுப் போட்டுப்பார்ப்போம்; எவர் பெயர் விழுகிறதோ அவரைத் தள்ளிவிடுவோம்" என்று முடிவு செய்துகொண்டு சீட்டுப்போட்டனர். மூன்று முறைகள் திரும்பத்திரும்பப் போட்டும் ஹஜ்ரத் யூனுஸ் நபி (அலை) அவர்களின் பெயர் தான் விழுந்தது. இதற்கிணங்க அவர்களைச் சமுத்திரத்தினுள் தள்ளிவிட்டுப் போய்விட்டனர்.

நபியவர்கள் தங்களுக்குச் சம்பவித்த அடுக்கடுக்கான கவலைகளையும், சமுத்திரத்தில் ஆபத்து வந்ததையும் அறிந்தவுடன் தமது தவறை உணர்ந்துகொண்டார்கள். "இறைவனது கட்டளைக்காக காத்திராமல் சுயமாக ஓடிவந்தது தமது அந்தஸ்துக்கு ஒவ்வாதது; ஆகையினால்தான் இத்தகைய விபத்துக்கள் தம்மைத் தாக்குகின்றன" என்று உணர்ந்தார்கள். மனப்பூர்வமாகத் தான் செய்த தவறுக்குப் பரிகாரம் தன்னை அர்ப்பணிப்பதே என்று கண்டார்கள். ஆகவேதான் மேற்கண்டவாறு கப்பலிலுள்ளோரிடம் கூறினார்கள். அவர் குற்றத்தை ஒப்புக்கொண்டு மனப்பூர்வமாக பரிகாரம் தேடிக்கொண்டதால் இறைவனும் அவர்களைக் காப்பாற்றினான். அதாவது வாயைப் பிளந்துகொண்டு வந்த மேற்படி மீன் அப்படியே அவரை விழுங்கிக்கொண்டது. அவர்களின் அவையவங்களுக்கு எத்தகைய சிறிய சேதமும், காயமும் ஏற்படவில்லை. மச்சத்தின் வயிறு அவர்களுக்கு வீடு போன்றாயிற்று. அவர்கள் அதனுள் மரித்து விடாமல், அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்துகொண்டேயிருந்தார்கள்.

இச்சம்பவம் நடுநிசியில் நிகழ்ந்தது. அவரை விழுங்கிய மீன் சமுத்திரத்தினடியில் சென்றுவிட்டது. எனவே நடுநிசி, சமுத்திரத்தினடி, மீன் வயிறு ஆகிய மூவகை இருட்டினுள் சிக்கிக்கொண்டார்கள். இதற்குப்பின்னர் அவர்கள் "உன்னைத்தவிர்த்து வேறு நாயனிலன், நீ தூயவன். நான் அநியாயக்காரர்களில் ஒருவனுகிவிட்டேன்" என்பதாக மீன் வயிற்றினுள்ளிருந்துகொண்டு இறைவனைக் கூவிப் பிரார்த்தித்தார்கள். கப்பலிலிருக்கும்போது குற்றத்தையுணர்ந்து அதற்குப் பிராயச்சித்தமாக தம்மை மனப்பூர்வமாக அர்ப்பணித்தார்கள். இப்பொழுதோ முறைப்படி அல்லாஹ் இறைவனிடம் மன்னிப்பும் கேட்டுவிட்டார்கள். ஆகையால் அவர்களது நகரத்தாரைக் காத்து விடுதலை செய்தது போன்று அவர்களையும் விடுதலை செய்தான். அதாவது அம்மச்சம் அவர்களை சமுத்திரத்தின் மேல் பாகத்திற்குக் கொண்டுவந்து கக்கிவிட்டது. சமுத்திரத்தின் அலைகள் அவர்களைக் கரையில் கொண்டுவந்து தள்ளிவிட்டன.

## சுரைக் கொடியும், மான் பாலும்.

இம்முறையில் அவர்கள் வெளியேற்றப்பட்டது முஹர்ரம் மாதம் 7-ம் தெய்தியாகும். இவர்களைக் காப்பதற்காக இறைவன் அவ்விடத்தில் ஒரு சுரைக்கொடியை உண்டாக்கினுன். அதன் நிழலில் இருந்துகொண்டிருந்தார்கள். அன்றுடம் ஒரு பெண் மான் அவருக்குப் பால்கொடுத்துக்கொண்டு வந்தது. இவ்வண்ணம் 40 நாட்கள் இருந்தார்கள். பின்னர் அக்கொடி மறைந்து மானும் சென்றுவிட்டது. இதனைப் பார்த்து அவர்கள் வருந்தி அழுதார்கள். அச்சமயம் இறைவன் அவர்களுக்கு 'வஹீ' மூலம் "நீ உற்பத்தி செய்யாத அச் சுரைக்கொடியும், உம்மால் சிருஷ்டித்துப் போஷித்து வளர்க்கமுடியாத மானும் உம்மைவிட்டு மறைந்ததற்காக அழும் நீர், லட்சக்கணக்கான மக்களுக்கு வேதனை இறங்கினுல் அழிந்துவிடுவார்களே என்று அவர்களின் அழிவுக்காக

அழாமல் வைராக்கியத்துடன் சென்றீரே!" என இடித்துக் காட்டினான்.

பின்னர் யூனுஸ் நபியவர்கள் தமது சொந்த நகருக்குத் திரும்பினார்கள். வரும் வழியில் ஓநாயிடம் சிக்கிய புதல்வரும், ஜலத்தில் மூழ்கிய புதல்வரும் க்ஷேமமாக இருக்கக் கண்டார்கள். மனைவியையும் அடைந்துகொண்டார்கள். இவர்களைக் காணாது தவித்த அந்நகர மக்கள் இவர்கள் வந்த செய்தி தெரிந்து யாவரும் எதிர்கொண்டழைத்துவந்து சந்தோஷமாக வாழ்ந்தனர்.

இங்கு நமது ஆசிரியப்பெரியார் ஹஜ்ரத் யூனுஸ் நபியவர்களை மீன் கக்கியபின்பு சமுத்திர அலைகளால் அவர்கள் கரைசேர்க்கப்பட்டதைச் சுட்டிக்காண்பித்துள்ளார்கள்.



## ஐந்தாம் பிரிவு.

பெருமானார் (ஸல்) அவர்களது அற்புத நிகழ்ச்சிகள்.



جَاءَتْ لِدَعْوَتِهِ الْأَشْجَارُ سَاجِدَةً
تَمْشِي إِلَيْهِ عَلَى سَاقٍ بِلَا قَدَمِ



### 72-வது பாட்டு.

(பெருமானார்-ஸல்) அவர்களின் அழைப்பிற்கிணங்க விருட்சங்கள் பணிவுடன் வந்தன. அவை பாதமின்றி கெண்டைக்காலால் அவர்கள் பால் நடந்துவந்தன.



كَأَنَّمَا سَطَرَتْ سَطْرًا لِمَا كَتَبَتْ
فُرُوعُهَا مِنْ بَدِيعِ الْخَطِّ فِي اللَّقَمِ



### 73-வது பாட்டு.

(அவை நடந்துவந்ததின் தன்மையானது) அவற்றின் கிளைகள், எழுதுவதற்காக நடுப்பாதையில் நவீனக் கோடுகளால் வரிப்பிளந்தது போன்று இருந்தது.



مِثْلَ الْغَمَامَةِ أَنَّى سَارَ سَائِرَةً
تَقِيهِ حَرَّ وَطِيسٍ لِلْهَجِيرِ حَمِي



# 74-வது பாட்டு.

**அவர்கள் எங்கு சென்றபோதிலும் நடுப்பகலின் கடும் உஷ்ணத்தைவிட்டு அவர்களைக் காத்துக் கொள்ள (உச்சிக்கு நேராகச்) சென்றுகொண்டிருக்கும் முகிலை (மேகத்தை)ப் போன்று.**

இம்மூன்று பாடல்களிலும் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு நிகழ்ந்த இரு அற்புதங்களைப்பற்றிக் கூறப்படுகின்றன. முதற்பாடலில், அவர்களின் அழைப்பிற்கிணங்க மரங்கள் பணிவுடன் நடந்துவந்ததையும், இரண்டாம் பாடலில் அவை நடந்து வந்த காட்சியையும், மூன்ரும் பாடலில் அவர்களுக்கு மேகம் குடைபோன்று நிழலிட்ட சம்பவத்தையும் விபரிக்கப்படுகிறது.

## விருட்சங்கள் நடந்துவந்த அற்புதம்.

"ஒருமுறை நாட்டுப்புறத்து அறபி ஒருவர், பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து தமக்கு ஒரு அற்புதத்தை நிகழ்த்திக்காட்ட வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அப்பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள் அவரைநோக்கி, "அதோ நிற்கும் விருட்சத்தினிடம் சென்று அல்லாஹ்வின் தூதர் உன்னையழைக்கிருர் எனக் கூறும்படி சொன்னுர்கள். அவர்

அவ்விருட்சத்தின் சமீபம் சென்று தமக்கு கூறப்பட்டதை கூறிய க்ஷணத்திலேயே அம் மரமானது முன்னும், பின்னும் வலப்புறமும், இடப்புறமும் அசைந்து வேருடன் பிடுங்கிக் கொண்டு எத்தகைய கோணலுமின்றி நேராக நபி பெருமா னார் (ஸல்) அவர்கள் சமுகம் வந்து ஸலாம் கூறி நின்றது. இதனைக்கண்ட அந்தக் காட்டறபியானவர் மீண்டும் அவ் விருட்சம் தன்னிடத்திற்கே சென்று நிற்கவேண்டுமென்று வேண்டிநின்றார். பெருமானாரும் அவ்வாறே அதற்குக் கட் டளையிட்டார்கள். அக்ஷணமே அவ்விருட்சமும் வந்தவாறே திரும்பச்சென்று தன்னிடம் போய் ஊன்றி நின்றுகொண்டது. அப்பொழுது அவர் "அல்லாஹ்வின் தூதரே! நான் தங்க ளுக்கு ஸுஜூது செய்ய அனுமதித்தல் வேண்டும்" என்றார்.

## அல்லாஹ்வைத் தவிர்த்து அவனது சிருஷ்டிகளுக்கு ஸுஜூது செய்யேல்!

பெருமானார் (ஸல்) அவர்கள் அநுமதியளிக்க மறுத்த துடன், "ஒருவர் மற்றொருவருக்கு ஸுஜூது செய்யலா மென்றிருப்பின், கணவனுக்கு அவனது மனைவியை ஸுஜூது செய்ய ஏவியிருப்பேன்" என்றனர். பின்னர், அவர் "தங்களின் கரங்களையும், கால்களையும் முத்தமிட அநுமதிப்பீர்களாக" என வேண்ட அவ்வாறே அநுமதியளித் தார்கள். (பாஜூரி).

இச்சம்பவம், ஹதீது கிரந்தங்களில் பல பிரிவாகக் கூறப்பட்டுள்ளது. அன்றியும் பெருமானார் (ஸல்) அவர்களது உத்திரவுக்குப் பணிந்து விருட்சங்கள் நடந்துவந்த வேறு சம்பவங்களும் 'முஸ்லிம்' என்ற பிரபல ஹதீது கிரந்தத் திலும் கூறப்பட்டுள்ளன.

## முகில் நிழலிட்ட அற்புதமும், புஹைறா சந்நியாசியின் முன்னறிவிப்பும்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் இளம் வயதினராக

இருந்த சமயம் ஒருமுறை தங்களது பெரிய தந்தையுடன் ஷாம் (சிரியா) நாட்டிற்கு வர்த்தகக் கூட்டத்தினருடன் சென்றார்கள். அறபுநாட்டு எல்லைப்புறத்தைச் சேர்ந்த புஹைறா எனும் ஸ்தலத்தில் இவ்வர்த்தகக் கோஷ்டியினர் வந்து தங்கினர். அவண் கிறிஸ்து சமயத்தைச் சார்ந்த சந்நியாசியொருவர் இக்கோஷ்டியினரை விருந்துக்கு அழைத்திருந்தார். இவ்வழைப்பையேற்ற அன்னோர் யாவரும் விருந்துண்ண அவரது ஆசிரமம் சென்றனர். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்கள் ஏறத்தாழ பன்னிரண்டே ஆண்டு இளைஞராக இருந்ததால் அவர்களை அக்கோஷ்டியினர் தங்களது வர்த்தகப் பொருட்களுக்கு காவலராக நிறுத்திவிட்டுச் சென்றனர். எனவே எம்பெருமானார் (ஸல்) அவ்விருந்துக்கு அவர்களுடன் செல்லவில்லை. ஆசிரமத்தில் யாவரும் அன்புடன் வரவேற்கப்பட்டனர். "எல்லோரும் விஜயம் செய்துவிட்டீர்களா?" என அச்சந்நியாசி வினவ, "ஆம்! ஒரு சிறுவனை மட்டும் எங்கள் வர்த்தகப் பொருட்களுக்குக் காவலாக வைத்துவிட்டு மீதியுள்ள அனைவரும் விஜயம் தந்திருக்கிறோம்" என அவர்கள் பதிலிறுத்தனர். "சிறு பையன் என்பதாக நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கும் அப் பெரியாருக்குத்தான் உண்மையில் நான் விருந்தளிக்கிறேன். நீங்களோ அவருடன் சேர்ந்து விஜயம் செய்யும் துணை விருந்தினர்தான். எனவே அவரை அழைத்துவாருங்கள்!" என அழுத்தமாகக் கூறினார். உடனேயே பெருமானார் (ஸல்) அவர்கள் அழைத்துவரப்பட்டார்கள். யாவரும் விருந்துண்டனர். பின்னர் அச்சந்நியாசியானவர் பெருமானாரைப்பற்றி, அபூதாலிபிடம் விசாரித்துத் தெரிந்துகொண்டு, உமது இளைய சகோதரரின் ஒரே அருமந்த அநாதைக் குழந்தையாகிய இவரேதான் எமது வேதத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள "பாரகலீத்" எனும் தீர்க்கதரிசியாவர். இவரது வருகையை எதிர்பார்த்துக் கிறிஸ்துவர்கள் காத்திருக்கின்றனர். ஆனால் யூதர்களுக்கு இவர்பால் துவேஷ மனப்பான்மை ஏற்படும். இவர் தற்போது சிறுவராக இருப்பதால் இவருக்கு அன்னோர் ஏதாவது இடர் விளைவிக்கக்கூடும்

என்று அஞ்சுகின்றேன். நீங்கள் செல்ல எண்ணியுள்ள நாட்டில் யூதர்கள் அதிகமிருக்கின்றனர். எனவே அவண் செல்லும் எண்ணத்தைக் கைவிட்டு இங்கேயே உங்களது சரக்குகளை விற்பனை செய்துவிட்டு திருமக்கா சென்றுவிடுங்கள். எதிர்பார்க்கப்பட்ட இறுதிகாலத் தீர்க்கதரிசியை குழந்தைப் பருவத்திலேயே கண்டுகளிக்கும் பாக்கியம் பெற்றமைக்காக நான் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்" என்றார்.

இதைச் செவியேற்ற அபூதாலிப் "இறுதிகாலத் தீர்க்கதரிசி இவர்தான் என்பதற்கு அடையாளமென்ன?" என்று வினவியபொழுது, "உங்களுடைய கோஷ்டி எட்ட வருவதை நான் கண்ணுற்றேன். உங்கள் சிரங்களுக்கு நேரே மேலாக ஒரு மேகம் நிழலிட்டுக்கொண்டு உங்களுடனேயே வந்து கொண்டிருந்தது. நீங்கள் தங்கிய இடத்திலேயே அதுவும் நின்றுகொண்டது. இறுதிகாலத்துத் தீர்க்கதரிசிக்கு மேகம் நிழலாகும் என எங்களது வேதங்களில் அடையாளம் குறிப்பிடப்பட்டுள்ளது. அதைக்கொண்டேதான் இவரை நான் உணர்ந்தேன்" எனப் பதிலளித்தார் அச்சந்நியாசி. இதனைச் செவியுற்ற அபூதாலிப் அவர்கள் தமது சரக்குகளை அவ்வூரிலேயே விற்றுவிட்டு திருமக்கா திரும்பிவிட்டார்கள்.

(ஸீரத்துன் நபி)

இஃதன்றி நபி பெருமானுர் (ஸல்) அவர்கள் வாலிப திசையடைந்தபொழுது உம்முல்முஃமினீன் கதீஜா பிராட்டியாரின் வர்த்தகப் பிரதிநிதியாக ஷாம் தேசம் சென்று திரும்பிவருகையில் அவர்களது தலைக்குமேல் மேகம் குடையிட்டுக்கொண்டு வருவதை ஆச்சரியத்துடன் நோக்கியதோடு, தமது மற்றைய பணியாளர்கள்மூலம் நபி பெருமானாரின் கீர்த்திகளைச் செவியேற்று அவர்களைத் தமது கணவராக வரித்து மணந்துகொண்டதும் நபி பெருமானாரின் சரித்திரங்கள் கூறும் உண்மையாகும்.

திருமதீனுவில் "மஸ்ஜிதுல்கமாமா" என்ருெரு பள்ளிவாயில் இன்றுங்கூட இருந்துவருகிறது. இவ்விடத்தில் நபி பெருமானர் (ஸல்) அவர்கள் பெருநாள் தொழுகையை நிறைவேற்றியபொழுது மேகம் நிழலிட்டுக்கொண்டிருந்ததாயும் அதன் ஞாபகார்த்தமாக மேற்கண்ட மஸ்ஜித் கட்டப்பட்டதாகவும் அப்பள்ளிவாயிலின் வரலாறுபற்றி கூறப்படுகிறது. "மஸ்ஜிதுல்கமாமா" என்ருல் 'முகில் பள்ளிவாயில்' என்பது பொருளாகும்.

எனவே நபி பெருமானர் (ஸல்) அவர்கள் செல்லுமிடங்களிலெல்லாம் மேகம் நிழலிட்டுக் கதிரவனின் உஷ்ணத்தை விட்டும் கார்த்தது என்ற கருத்தையே இங்கு ஆசிரியப் பெரியார் சுட்டிக்காட்டியுள்ளார்.

اَقْسَمْتُ بِالْقَمَرِ الْمُنْشَقِّ اِنَّ لَهٗ
مِنْ قَلْبِهٖ نِسْبَةً مَبْرُوْرَةَ الْقَسَمِ

## 75-வது பாட்டு.

பிளந்த சந்திரனைக்கொண்டு உண்மையான சத்தியம் செய்கின்றேன்; "திண்ணமாக அதற்கு அவர்களது இதயத்துடன் ஒரு (வகையான) சம்பந்தமுளது."

இச்செய்யுளில் இரு சம்பவங்களைப்பற்றிய குறிப்பு காட்டப்பட்டுள்ளது. (1) திருமக்காவாசிகள் நபி பெருமானரிடம் வேண்டிக்கொண்டதற்கிணங்க செய்து காட்டிய அற்புத

நிகழ்ச்சி. (2) நபி பெருமானார் (ஸல்) அவர்களிலேயே நிகழ்ந்த சம்பவம்.

## 1. சந்திரன் பிளந்த அற்புதம்.

நபி பெருமானார் (ஸல்) அவர்கள் சன்மார்க்கப் பிரசாரம் செய்துவருவதை எதிர்த்து மக்காவாசிகள் எத்தனையோ எதிர்ப்புக்களைச் செய்தனர்; சூழ்ச்சி செய்தும் பார்த்தனர். ஒன்றிலும் அவர்கள் வெற்றி காணமுடியவில்லை. "முஹம்மத் பெரிய மாந்தரீகவாதி; சூனியக்காரர்; கவிஞர்; தனது கவியின் திறமையால் யாவரையும் வசீகரித்து வசியம் செய்து விடுகிறார். எம்முறையிலாவது அவரை மடக்கிவிடவேண்டும்" என்று முடிவுகட்டிக் கூடிக் கலந்தாலோசித்தனர். பின்வரும் ஏகோபித்த முடிவுக்கு வந்தனர். "மந்திரவாதிகள், சூனியக்காரர்கள் முதலியோரின் மந்திர சூனியங்கள் இம்மண்ணுலகம் சம்பந்தப்பட்ட மட்டில்தான் பலிதமாகும்; விண்ணில் எதுவும் செய்துவிட அவர்கள் சக்தி பெற்றிலர். எனவே சந்திரனை இரு பிளப்பாக பிளந்து காட்டித்தருமாறு கேட்க வேண்டும். மெய்யாக அவர் நபியாக இருந்தால் செய்து காட்ட அவரால் முடியும். இல்லையெனில் முடியாது. அப்பொழுது அவரது வேஷம் வெளிப்பட்டுவிடும்." இந்த முடிவில் அவர்கள் நபி பெருமானாரிடம் வந்து "நீர் மெய்யாக நபியாக இருப்பின் பூரணச்சந்திரனை இரு துண்டுகளாகப் பிளந்து காண்பிக்கவேண்டும். அப்பொழுது நாங்கள் உம்மை நபியென விசுவாசிக்கின்றோம்" என்றனர். இதற்கிணங்க நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அவ்வூர்வாசிகளை ஒன்றுகூடச் செய்து சந்திரனை நோக்கி விரலால் சமிக்ஞை செய்து காட்டலானார்கள். உடனேயே அது இரண்டாகப் பிளந்து விலகிற்று. கூடியிருந்தோரை நோக்கி "பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். அவர்கள் யாவரும் அதனை நன்கு பார்த்தபிறகு மீண்டும் அவ்விரு துண்டுகளும் ஒன்று சேர்ந்துவிட்டன. இவ்வற்புதத்தைக் கண்டுங்கூட சன்

மார்க்க விரோதிகளது தலைவர்கள் சத்தியத்தை ஏற்றுக் கொள்ளாமல், "இதுவும் ஒரு நிலையான சூனியம்" எனக் கூறிப்போந்தனர். இச்சம்பவத்தை திருமக்காவாசிகள் மட்டு மின்றி அக்கம்பக்கத்து கிராமவாசிகளுங்கூட ஆச்சரியப் பட்டுக் கண்ணுற்றதாக சரித்திர ஆதாரம் கூறிக்கொண் டிருக்கிறது. (ஸீரத்துன் நபி)

## 2. மார்பு பிளக்கப்பட்ட அற்புதம்.

பெருமானார் (ஸல்) அவர்கள் பால்குடிக் குழந்தையாக இருந்த காலத்திலிருந்து ஐந்து வயதுப் பாலகனாக ஆகும் வரை திருமக்காவுக்கு வெளியிலுள்ள 'ஹுனைன்' எனும் பட்டினத்தில் ஹலீமா ஸஃதிய்யா என்ற பெயருள்ள ஒரு செவிலித்தாயால் வளர்க்கப்பட்டார்கள்.

சுமார் ஐந்து வயதுப் பாலகனாக இருந்தபொழுது அவ் வீட்டிலுள்ள மற்றையக் குழந்தைகளுடன் சேர்ந்து அச் சிறு வர்கள் ஆடு மேய்க்கும் இடத்திற்குச் செல்வதும் அவர்கள் வீடுதிரும்பும்போது அவர்களுடன் திரும்புவதும் வழக்கமாக இருந்தது. ஒருதினம் இவ்வாறு போயிருக்கையில் தூய வெள்ளாடைகள் அணிந்த இருவர் தோன்றிப் பெருமா னரைக் கீழே மல்லாத்திப்போட்டு மார்பைப் பிளந்தனர். இதனைக் கண்ணுற்ற மற்றைய குழந்தைகள் நடுங்கியவண் ணம் வீட்டுக்கு ஓடிவந்து, தங்கள் தாயிடம், "நமது குறைஷித் தம்பியை இருவர் தோன்றி கீழே தள்ளி நெஞ்சைப் பிளந்து விட்டனர்" என்று கூறினர்.

இதனைச் செவியேற்ற செவிலித்தாய் ஹலீமாவும், அவரது கணவரும் பதைபதைத்து அவ்விடத்துக்கு ஓடினர். அங்கு பெருமானார் (ஸல்) அவர்கள் க்ஷேமமாக தனியே நின்றுகொண்டிருந்தனர். முகத்தில் ஒருவிதமான சோர்வும், நிறத்தில் மாறுதலும்தான் இருந்தது. அவர்கள் பெருமா னரைக் கட்டித்தழுவி முத்தமிட்டு சமாசாரம் என்னவென

விளவிளர். "வெண்மையான உடையணிந்த இருவர் தோன்றி என்னைக் கீழே மல்லாத்திப்போட்டு மார்பைப் பிளந்து ஈரல்குலையிலிருந்து ஏதோவொன்றை எடுத்து தூரே எறிந்துவிட்டு கழுவிச் சுத்தமாக்கி மறுபடியும் வைத்துத் தைத்துவிட்டுச் சென்றுவிட்டனர்" எனப் பெருமானார் (ஸல்) பதிலுரைத்தார்கள். அக்காலம் அஞ்ஞானம் நிரம்பியதாக இருந்ததால் இச்செய்கை பைசாசத்தின் வேலையாக இருக்கலாமென்று அவர்கள் பயந்து அன்றுமுதல் மற்றைய குழந்தைகளுடன் பெருமானாரைக் காட்டிற்கு அனுப்பாமல் பாதுகாத்துவைத்திருந்து சின்னாட்களுக்குள் மக்காவிற்குக் கூட்டிச்சென்று பெற்ற அன்னை ஆமீனா அவர்களிடம் நபி பெருமானாரை ஒப்படைத்துவிட்டுச் சென்றனர்.

(ஸீரத்துல் ஹலபிய்யா)

இதேபோன்று நபி பெருமானாருக்கு நபித்துவம் வருவதற்கு சிலநாள் முன்னரும் அவர்கள் மிஃராஜ் செல்வதற்கு முன்னரும் இரு சந்தர்ப்பங்களில் நிகழ்ந்தது. எனவே நபி பெருமானாருக்கு அவர்களது ஜீவிய காலத்தில் மும்முறை மார்பு பிளக்கப்பட்டதாக நபி பெருமானாரைப்பற்றிய வரலாற்றுச் சரித்திரங்கள் குறிப்பிடுகின்றன.

இங்கு ஆசிரியரும் இச்சம்பவத்தைக்குறித்தே "புறத்திலுள்ள சந்திரனுக்கும், மார்பினுள் இருக்கும் இதயத்திற்கும் ஒற்றுமையுளது" எனக் கூறுகிறார். எவ்வாறெனில் புறத்திலுள்ள சந்திரனின் பிரகாசம் அதற்கு இயற்கையாக உளதல்ல. சூரியனுடைய பிரகாசத்தின் பிரதிபிம்பம்தான் நிலா வெளிச்சம். இஃதேபோன்று இறைவனது 'வஹ்யை' நபி பெருமானார் (ஸல்) அவர்களது இதயம் கிரகித்து இப்பிரபஞ்ச மன்பதைகளுக்கு அளிக்கிறது. எனவே புறச்சந்திரன் இருளை நீக்கி உலகைப் பிரகாசிக்கச் செய்வதுபோன்று நபி பெருமானார் (ஸல்) அவர்களது இதயமாகிய சந்திரன் அஞ்

ஞான இருளையகற்றி அக உலகையும், அறிவுஞான உலகையும் இலங்கச்செய்கிறது.

ஆகையால்தான் சந்திரனுக்கும் நபி பெருமானாரின் இதயத்துக்கும் சம்பந்தமும் ஒப்பும் இருக்கிறதென்று சத்தியம் செய்து இங்கு கூறுகிறார் நமது ஆசிரியப் பெரியார்.



وَمَا حَوَى الْغَارُ مِنْ خَيْرٍ وَمِنْ كَرَمٍ
وَكُلُّ طَرْفٍ مِنَ الْكُفَّارِ عَنْهُ عَمِي



## 76-வது பாட்டு.

குகை (தன்னுள்) அணைத்து மறைத்துக்கொண்டது, நன்மையை(யுடையவரை)யும் கொடையை(யுடையவரை)யும்தான்.
அந்நிலையில் காபிர்களது நேத்திரங்கள் அனைத்தும் அதை (க்கண்ணுறுவதை) விட்டும் குருடாய்விட்டன.

### நன்மையும், கொடையும்.

இங்கு நன்மை என்பது நபி பெருமானார் (ஸல்) அவர்களைக் குறிப்பிடுவதாகும். நன்மையான காரியத்தைத் தவிர்த்து பிறிதொன்றையும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் செய்யாததால் நன்மையின் பிழம்பாக இருக்கும் அவர்களை "நன்மை" என்றே ஆசிரியர் இங்கு கூறிவிட்டார்.

கொடை என்பது ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களைக் குறிப்பிடுவதாகும். அவர்கள் ஒரு மாபெரும் தர்மவான்; கொடை வள்ளல். தமக்கென எதையும் வைத்துக் கொள்ளாமலும் பின்னர் தனது மனைவிமக்களுக்கு வேண்டுமே என நினைக்காமலும் தமது ஆஸ்திகளனைத்தையும் தர்ம காரியங்களுக்கே செலவு செய்துவிட்டதால் தர்மத்தின் பிழம்பான அவர்களை தர்மம் என்றே ஆசிரியர் வருணனை செய்கிறார். ஒருவரின் தன்மைகளைப்பற்றிக் கூறி குறிப்பிடுங்கால், அவரது தன்மைகளை அவராகவே பாவித்துக்கூறி வர்ணிப்பது புலவர்களின் வழக்கமாகும். இவ்வழக்கையநுசரித்தே நமது ஆசிரியரும் இங்கு வர்ணித்துக் கூறுகிறார்.



فَالصِّدْقُ فِي الْغَارِ وَالصِّدِّيقُ لَمْ يَرِيَا
وَهُمْ يَقُولُونَ مَا بِالْغَارِ مِنْ اَرِمِ



## 77-வது பாட்டு.

எனவே மெய்யும் மெய்ப்பிப்பவரும் (கண்களுக்குத்) தென்படாமல் குகையிலிருக்கின்றனர். ஆனால் அவர்களோ (காபிர்களோ) "குகையில் எவருமே யில்லை"யெனக் கூறுகின்றனர்.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ اَللّٰهُمَّ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ بَحْرِ اَنْوَارِكَ وَمَعْدَنِ اَسْرَارِكَ وَلِسَانِ
حُجَّتِكَ وَعَرُوْسِ مَمْلَكَتِكَ وَاِمَامِ حَضْرَتِكَ وَخَاتَمِ
اَنْبِيَائِكَ صَلَاةً تَدُوْمُ بِدَوَامِكَ وَتَبْقٰى بِبَقَائِكَ صَلَاةً
تُرْضِيْكَ وَتُرْضِيْهِ وَتَرْضٰى بِهَا عَنَّا يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ اَللّٰهُمَّ
اِرْحَمْنَا مِنْ زَمَانِنَا هٰذَا اَوْ اِحْدَاقِ الْفِتَنِ وَتَطَاوُلِ اَهْلِ الْجُرْأَةِ
عَلَيْنَا وَاسْتِضْعَافِهِمْ اِيَّانَا اَللّٰهُمَّ اجْعَلْنَا مِنْكَ فِيْ عِيَاذٍ مَنِيْعٍ
وَحِرْزٍ حَصِيْنٍ مِّنْ جَمِيْعِ خَلْقِكَ حَتّٰى تُبَلِّغَنَا اَجَلَنَا مَعَافًا
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ ه



ظَنُّوا الْحَمَامَ وَظَنُّوا الْعَنْكَبُوْتَ عَلٰى
خَيْرِ الْبَرِيَّةِ لَمْ تَنْسُجْ وَلَمْ تَحُمِ



## 78-வது பாட்டு.

(முஹம்மத் (ஸல்) குகையினுள்ளிருப்பதாயின்) புருவும் சிலந்திப்பூச்சியும் சிருஷ்டிகளிற் சிரேஷ்டர் மீது நூல் நூற்றிருக்கவும், சுற்றிக்கொண்டிருக்கவும் செய்யாவென அன்னோர் (-காபிர்கள்) எண்ணிக்கொண்டனர்.



وِقَايَةُ اللهِ أَغْنَتْ عَنْ مُضَاعَفَةٍ
مِنَ الدُّرُوعِ وَعَنْ عَالٍ مِنَ الأُطُمِ



## 79-வது பாட்டு.

அல்லாஹ்வின் பாதுகாவல், (எதிரிகளின் தாக்குதலிலிருந்து தற்காத்துக்கொள்ள அணியப்படும்) இரட்டை உருக்குச் சட்டைகள், உயரமான கோட்டைகள் ஆகியவற்றை விட்டும் தேவையறச் செய்துவிட்டது.

77-வது பாட்டில், "ஸித்க்" மெய் என்று குறிப்பிடுவது நபி பெருமானாரைக் குறித்ததாகும். அதாவது 77-வது பாட்டின் குறிப்பில் கூறப்பட்ட இலக்கணப்படியே இங்கும் ஆசிரியர் கூறுகிறார். மேலும், இந்நான்கு பாடல்களிலும், நபி பெருமானார் (ஸல்) அவர்கள் திருமக்காவைத் துறந்து திருமதீனாவில் குடியேறப் பிரயாணப்பட்டபோது இடை

வெளியில் நிகழ்ந்த சில அற்புதங்கள் பற்றிய குறிப்புக்களும் இங்கு கூறப்படுகின்றன. முழு விருத்தாந்தத்தையும் சுருக்கமாக இங்கு கூறுவோம்.

## உருவிய வாளுடன் நின்ற எதிரிகளின் கண்களில் மண்களை வாரி இறைத்தலும், ஹிஜ்ரத்தும்.

*திருமக்காவில் நபி பெருமான் (ஸல்) அவர்கள் பதின் மூன்று வருடகாலம்வரை சன்மார்க்கப் பிரச்சாரம் புரிந்தும், நூற்றுக்கணக்கானவர்கள்தான் இஸ்லாத்தைத் தழுவினர். ஆனால், பகைவர்களது எதிர்ப்பும், தடுப்பும், சூழ்ச்சிகளும் தினேதினே அதிகரித்துக்கொண்டு போனதேயன்றி குறைவு படவில்லை. ஆகையால் திருமக்காவில் இக் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டிருக்க இயலாத பெருமானாரின் சிஷ்யர்கள், முதலில் அபீஸீனியாவிற்கும் பின்னர் திருமதீனாவிற்கும் ஹிஜ்ரத் செய்து செல்லும்படி முறையே உத்தரவிடப்பட்டார்கள். இவ்வுத்தரவைச் செவியுற்றவுடன் இஸ்லாத்தை பகிரங்கமாகத் தழுவிய யாவரும் ஒருவர்பின் ஒருவராக திருமதீனாவிற்குச் சென்றனர். ஜனங்களால் முக்கியமென மதிக்கப்படாத ஸ்திரீகளும், குழந்தைகளும்தான் எஞ்சியிருந்தனர். முக்கியஸ்தர்களில் நபி பெருமானாரும், ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி), ஹஜ்ரத் அலி (ரலி) ஆகிய மூவருமேதான் மக்காவில் எஞ்சியிருந்தனர்.*

எஞ்சியுள்ள இவர்களை விட்டுவிட்டால் வருங்காலத்தில் பெருஞ்சங்கடங்கள் விளையலாமாகையால் இப்போதே அதற்கான முன்னேற்பாட்டைச் செய்துகொள்ளவேண்டுமென்று குறைஷித்தலைவர்கள் ஒன்றுகூடி பின்வரும் திட்டத்தை வகுத்தனர்.

*"திருமக்காவிலுள்ள பெருங்குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் குடும்பத்துக்கு ஒரு நபர் வீதம் ஒன்றுகூடி எல்லோரும்*

இரவு நேரத்தில் வாளாயுதங்கொண்டு அவரை (நபி பெருமானாரை)த் தாக்கி கொன்றுவிடவேண்டும்; அவ்வாறு செய்தால் தான் அப்துல்முனாபுடைய குடும்பத்தார் ஏககாலத்தில் திருமக்காவிலுள்ள எல்லவரையும் எதிர்க்கத் துணியமாட்டார்கள்; எனவே அக்குடும்பத்தாருக்கு இவரைக் கொன்றதற்காக நஷ்ட ஈட்டைக்கொடுத்து ராஜி செய்துகொள்ளலாம்." இத் திட்டம் யாவராலும் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

இச்சமயத்தில் அல்லாஹ் 'வஹ்யின்'மூலம் இச்சூழ்ச்சி பற்றி நபி பெருமானாருக்கு அறிவித்து திருமதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்யுமாறு கட்டளையிட்டான். இறைவனிடமிருந்து தமக்குக் கிடைத்த இக்கட்டளையை நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் அறிவித்தார்கள். இருவரும் ஒன்றுசேர்ந்து புறப்படவேண்டுமென திட்டம் வகுத்தனர். திட்டமிட்டபடி நபிபெருமானார் (ஸல்) அவர்கள் அன்றிரவு குறித்த நேரத்தில் ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களைத் தமது படுக்கையில் படுக்கவைத்து தமது போர்வையை போர்த்துக்கொள்ளச் செய்துவிட்டு வீட்டை விட்டு வெளியேறினார்கள்.

## கொலைபுரிய நின்றோர் குருடராயினர்

நபி பெருமானாரைக் கொலைசெய்ய வெளியில் வீட்டைச் சுற்றிலும் உருவிய வாளுடன் பலர் காவல் நின்றனர். ஆகவே நபி பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு பிடி மண்ணை எடுத்து சூரத்து யாசீனிலிருந்து சில ஆயத்துக்களை ஓதி அம்மண்ணை அவர்கள்மீது எறிந்தார்கள். அக்கூட்டத்தினரோ விழித்துக்கொண்டுதானிருந்தனர். எனினும் நபி பெருமானார் (ஸல்) அவர்களைக் காணமுடியாத குருடராயினர். இதைக்குறித்து திருகுர்ஆனில் இறைவனும்,

"(நபியே! எதிரிகளின்பால்) நீர் (பிடிமண்ணை) எறிந்த போது (அதனை) நீர் எறியவில்லை, எனினும் அல்லாஹ்வேதான் (அதனை) எறிந்தான்." (3 : 17) என்று கூறியுள்ளான்.

பின்னர் நபி பெருமானாரும் ஸித்தீக்கும் திருமக்காவை விட்டு வெளியேறி தென்கிழக்குத் திசையில் சில மைல்கள் தூரமுள்ள 'தௌர்' என்ற மலைக்குச்சென்று அதன் உச்சியிலுள்ள கற்குகை ஒன்றினுள் புகுந்து ஒளிந்துகொண்டனர். இவ்விருவரும் ஹிஜ்ரத் செய்து சென்றுவிட்ட சமாசாரம் மறுநாட் காலையில் ஊரெங்கும் தெரிந்தபொழுது ஆத்திரம் மிகுந்த அவ்விரோதிகள், நபி பெருமானாரையும் ஸித்தீக்கையும் பிடித்துவிடவேண்டுமென நாலுபக்கங்களிலும் ஆட்களை அனுப்பிவைத்தனர். அவ்விருவரையும் பிடித்துக்கொடுப்பவர்களுக்கு நூறு ஒட்டகைகள் வழங்கப்படுமென வாக்களித்துப் பறைசாற்றப்பட்டது. எனவே திருமக்காவாசிகள் மட்டுமின்றி அக்கம்பக்கத்து கிராமவாசிகளுங்கூட இம்முயற்சியில் ஈடுபட்டு தேடத் தலைப்பட்டனர்.

அப்பெருமகரிருவரும் 'தௌர்' மலையின் குகையினுள் பிரவேசித்த பின்னர், குகையின் முகத்துவாரத்தில் சிலந்திப்பூச்சி வலை பின்னிவிட்டது. புறு அங்கு கூடு கட்டி முட்டையிட்டு அங்குமிங்குமாகப் பறந்து உலவ ஆரம்பித்துவிட்டது. அதுசமயம் இவர்களைத் தேட வருபவர்கள் அக்குகையின் அண்டையில் வந்துவிட்டனர். குகையினுள் ஒளிந்திருக்கும் இருவரும் தங்களைத் தேடிவரும் விரோதிகளைக் கண்ணுறுகின்றனர். கலங்காமலும் பீதியடையாமலும் மன அமைதியுடன் உள்ளேயிருக்கின்றனர். குகையின் வெகு சமீபம் எதிரிகள் நெருங்கிவிட்டனர். அவர்களின் காலடிச் சப்தத்தை செவியுற்ற அபூபக்கர்ஸித்தீக் (ரலி) அவர்கள் பீதியடைந்து "அதோ நெருங்கிவிட்டார்களே" எனப் பெருமானாரை நோக்கிக் கூறினர்கள். அதற்கு நபி பெருமானரவர்கள்

ஆறுதலான வார்த்தைகள் கூறி அச்சத்தைத் தீர்த்துவைத் தார்கள். இதைக்குறித்து இறைவனும் தனது திருகுர்ஆனில் ('தௌர்' மலைக்) குகையில் அவர்களிருவரும் இருந்த பொழுது தனது தோழ(ராகிய அபூபக்க)ரை நோக்கி "நீர் கவலையுறவேண்டாம். நிச்சயமாக அல்லாஹ் நம்முடனே இருக்கிறான்" என்று கூறிய சமயம் அல்லாஹ் அவரின்மீது தனது சாந்தியை இறக்கினான். [9:40] என்று கூறியுள்ளான். தேடி வந்தவர்கள் குகையின் முகத்துவாரத்தின் வழியாக உள்ளே பார்த்தால் இவ்விருவரையும் கண்டுகொள்ளலாம். ஆனால் அவர்களுக்கு அவ்வாறு செய்யவேண்டுமென்ற எண்ணம் தோன்றவேயில்லை. "நிச்சயமாக அல்லாஹ் அவருக்கு உதவியளித்தான்." (9:40)

எதிரிகள் அங்கு வந்த சமயம் உள்ளிருந்து புறு ஒன்று பறந்து வெளியோடிற்று. உள்ளே ஆள் சென்றிருந்தால் புறுக்கூடு அங்கே இருந்திருக்காது; புறு உள்ளே போவதும் வெளியே போவதுமான செய்கை நடந்திருக்காது. சிலந்தி வலையுமிருக்காது. இவ்வாறு பரஸ்பரம் பேசிக்கொண்டு "அங்கு ஒருவருமிலர்" என்று கூறியவாறே அதனைவிட்டகன்றனர்.

இவ்வாறு பகைவர்களை விட்டும் அவர்கள் தப்பித்துக் கொண்டு, மூன்று நாட்கள் அங்கு தங்கியிருந்த பின்னர், திரு மதீனாவை நோக்கிச் சென்று பத்திரமாக அதனையடைந்தனர்.

இவ்விபரமேதான் இந் நான்கு செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளது. காபிர்கள் பிரமாதமான முறையில் காவல் நின்றும், பெருமானாரவர்கள் தங்கள் முன்பாகவே சென்றதைப் பார்க்கமுடியாத குருடர்களாய்விட்டனர். இவ்விருவரும் குகையினுள்ளிருக்கையில் பகைவர்கள் தங்களைத் தேடிக்கொண்டு தங்கள் எதிரில் வந்தபோதுங்கூட கலக்க

மடையாமல் தெம்புடனிருந்தனர். இறைவனின்மீது அவர்கள் கொண்டுள்ள நம்பிக்கையானது பலவாருக அவர்களைக் காப்பாற்றியது. சிலந்தி வலையும், புருவும் அங்கிருப்பதைக் கண்ணுற்று உள்ளே ஒருவரும் இல்லையென அவர்கள் எண்ணிக்கொண்டனர். போருக்குச் செல்லும் வீரர்கள், எதிரிகளின் ஆயுதங்கள் தங்களைக் காயப்படுத்திவிடாமலிருக்க இரட்டை உருக்குச் சட்டை அணிந்துசெல்வதையும் உயரமான பெருங் கோட்டைகளைக் கட்டிக்கொள்வதையும் போன்று இவ்விருவரும் செய்துகொள்ளவில்லை. இறைவனின் பாதுகாப்பு ஒன்றே இவர்களுக்குப் போதுமானதாக ஆகிவிட்டது. எனவே சிலந்தி வலையும், புருக்கூடும் கோட்டைகளாக அமைந்தனவென்பதை ஆசிரியப் பெரியார் இங்கு கட்டிக் காண்பித்துள்ளார்.



مَا سَامَنِى الدَّهْرُ ضَيْمًا وَّاسْتَجَرْتُ بِهِ
اِلَّا وَنِلْتُ جِوَارًا مِّنْهُ لَمْ يُضَمِ



## 80-வது பாட்டு.

காலமானது, எனக்கு அநீதத்தை விளைவித்து என்னைக் காக்கும்படி (நபி பெருமான்-ஸல்) அவர்களை நான் வேண்ட ஊறு விளைவிக்கப்படாத பாதுகாப்பை அவர்கள்மூலம் பெற்றேயன்றி வேறன்று.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ مَادَامَتِ الصَّلَاةُ عَلَيْهِ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى
مُحَمَّدٍ مَادَامَتِ الْبَرَكَاتُ عَلَيْهِ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ مَادَامَتِ الرَّحْمَةُ
عَلَيْهِ وَصَلِّ عَلٰى قَبْرِ مُحَمَّدٍ فِي الْقُبُوْرِ وَصَلِّ عَلٰى جَسَدِ مُحَمَّدٍ فِي
الْاَجْسَادِ وَصَلِّ عَلٰى تُرْبَةِ مُحَمَّدٍ فِي التُّرَابِ وَصَلِّ عَلٰى رَوْضَةِ
مُحَمَّدٍ فِي الرِّيَاضِ وَصَلِّ عَلٰى شَعْرِ مُحَمَّدٍ فِي الْاَشْعَارِ وَصَلِّ عَلٰى
رَأْسِ مُحَمَّدٍ فِي الرُّؤُسِ وَصَلِّ عَلٰى نَفْسِ مُحَمَّدٍ فِي النُّفُوْسِ وَصَلِّ
عَلٰى وَجْهِ مُحَمَّدٍ فِي الْوُجُوْهِ وَصَلِّ عَلٰى قَلْبِ مُحَمَّدٍ فِي الْقُلُوْبِ وَصَلِّ
عَلٰى صَدْرِ مُحَمَّدٍ فِي الصُّدُوْرِ وَصَلِّ عَلٰى صُوْرَةِ مُحَمَّدٍ فِي الصُّوَرِ
وَصَلِّ عَلٰى اِسْمِ مُحَمَّدٍ فِي الْاَسْمَآءِ وَصَلِّ عَلٰى نُوْرِ مُحَمَّدٍ فِي الْاَنْوَارِ
وَصَلِّ عَلٰى اُمَّةِ مُحَمَّدٍ فِي الْاُمَمِ وَصَلِّ عَلٰى جَمِيْعِ الْاَنْبِيَآءِ وَالْمُرْسَلِيْنَ

وَالْمَلَائِكَةِ الْمُقَرَّبِيْنَ وَالصِّدِّيْقِيْنَ وَالشُّهَدَاءِ وَالصَّالِحِيْنَ
وَعَلٰى أَهْلِ طَاعَتِكَ أَجْمَعِيْنَ بِرَحْمَتِكَ يَا أَرْحَمَ الرَّاحِمِيْنَ،
اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَبْدِكَ سَيِّدِ الْمُرْسَلِيْنَ مِلْأَ السَّمٰوَاتِ
وَمِلْأَ الْأَرَضِيْنَ وَمِلْأَ الْعَرْشِ الْعَظِيْمِ الْمُسْتَغَاثَ يَا رَسُوْلَ
اللّٰهِ الشَّفَاعَةَ يَا رَسُوْلَ اللّٰهِ الْخَلَاصَ يَا رَسُوْلَ اللّٰهِ الْأَمَانَ
يَا رَسُوْلَ اللّٰهِ



وَلَا الْتَمَسْتُ غِنَى الدَّارَيْنِ مِنْ يَدِهِ
إِلَّا اسْتَلَمْتُ النَّدٰى مِنْ خَيْرِ مُسْتَلَمِ



## 81-வது பாட்டு.

அவர்களது பரோபகாரத்தின்மூலம் ஈருலகச் செல்வத்தையும் நான் வேண்ட, வேண்டப்படுபவரில் சிறந்தவரால் கொடையை நான் பெற்றேயன்றி வேறல்ல.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள்மூலமாக அவர்களது உம்மத்துக்களாகிய முஸ்லிம்களுக்கு ஈருலகச் சிறப்புக்களும், செல்வங்களும் கிடைக்கின்றனவென்பதை இச் செய்யுட்கள் உணர்த்துகின்றன. இத்தகைய செல்வங்களை

அவர்கள்மூலம் பெற்று, அவர்களிடம் நான் அடைக்கலம் புகுந்துவிட்டதால் இவ்வுலகவாசிகளில் எவராலும் எனக்கு எத்தகைய தீங்கும் விளைவிக்கமுடியாது என ஆசிரியர் தெரிவித்துக்கொள்கிருர்.



لَا تُنْكِرِ الْوَحْيَ مِنْ رُؤْيَاهُ إِنَّ لَهُ
قَلْبًا إِذَا نَامَتِ الْعَيْنَانِ لَمْ يَنَمِ



## 82-வது பாட்டு.

(பெருமானார்-ஸல்) அவர்களது கனவின்மூலம் தோன்றிய 'வஹ்'யை நீ மறுக்காதே! (ஏனெனில்) நிச்சயமாக இரு விழிகள் தூங்கிவிடினும், தூங்காத இதயம் அவர்களுக்கு உண்டு.



فَذَاكَ حِينَ بُلُوغٍ مِنْ نُبُوَّتِهِ
فَلَيْسَ يُنْكَرُ فِيهِ حَالُ مُحْتَلِمِ



## 83-வது பாட்டு.

அ(வர்களின் கனவிற்ருேன்றிய வஹ்யான)து, அவர்கள் நபித்துவத்திற்கு அணுகும்பொழுதாகும். எனவே, (நபித்துவத்திற்கு) அ(ணுகும் சமயத்)தில் கனவு காண்பவரின் நிலை மறுக்கப் படுவதில்லை.

تَبَارَكَ اللّٰهُ مَا وَحْيٌ بِمُكْتَسَبٍ
وَلَا نَبِيٌّ عَلَى غَيْبٍ بِمُتَّهَمِ

## 84-வது பாட்டு.

**அல்லாஹ் (சர்வ குறைகளை விட்டும்) உயர்ந்தவன். வஹீ என்பது (சுயமாகச்) சம்பாதிக்கப்படக்கூடிய தன்று. எந்த நபியும் மறைவான(வற்றை அவருக்கு கூறப்படும்பொழுது) அதில் சந்தேகிப்பவரல்லர்.**

இம்மூன்று செய்யுட்களிலும் நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு ஆரம்பத்தில் நிகழ்ந்த 'வஹ்'யைக் குறித்தும், நபித்துவம் என்பது ஒருவரின் சொந்தப் பிரயாசையினால் ஏற்படக்கூடியதன்று; அது இறைவனால் கடாக்ஷமாகவே கிடைக்கக்கூடியது; நபிமார்கள் தங்களுக்கு இறைவனால் அறிவிக்கப்படும் மறைவான விஷயங்கள் குறித்து எத்தகைய சந்தேகமும் கொள்ளக்கூடியவர்கள் அல்லர் என்பனபோன்ற கருத்துக்கள் குறித்தும் விளக்கப்படுகின்றன.

### வஹ்யின் ஆரம்ப நிலையும், நுபுவத்தும்.

மனிதர்களுக்கு நித்திரை வந்தால் அவர்களது நரம்புகள் சோர்வு அடைந்து அவர்கள் தங்களை மறந்து அயர்ந்து விடுகின்றனர். இத்தகைய நிலை நபி பெருமானார் (ஸல்)

அவர்களுக்கு இருந்ததில்லை. மற்றையவர் போன்று அவர்கள் நித்திரை புரிந்தாலும், இரு நேத்திரங்கள் தான் தூங்குமேயன்றி அவர்களது இதயம் தூங்காது. எனவே மற்றையோர், நித்திரையில் காண்கின்ற கனவு தவறிவிடுவது போன்று அவர்களது சொப்பனம் தவறுவதில்லை. அக்கனவு பிரத்தியட்சமாக பின்னர் உலகில் நிகழ்ந்துவிடும். அவர்களுக்கு வஹ்யேயன்றி வெறும் சொப்பனமல்ல. "வஹ்யின் ஆரம்பமானது நித்திரையில் நேரிய கனவைக்கொண்டே இருந்தது. நபி பெருமானார் (ஸல்) அவர்கள் எக்கனவைக் கண்டாலும் அது விடியற்காலையின் வெண்மை போன்று (பிரத்தியட்சமாய்) நிகழ்ந்ததேயன்றி வேறல்ல."

(அல்ஹதீது; புகாரீ)

இக்கருத்துக்களைத்தான் முந்திய இரு செய்யுட்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. நபிப்பட்டமானது கடாக்ஷமாகக் கிடைக்கும் பொருள் என்ற கருத்தை கடைசிச் செய்யுளில் குறிப்பிடப்படுகிறது.

## دعاء

اللهم صل على محمد وعلى آل محمد النبي بحر مكرمة المرسل راحة رسولك
محمد صلى الله عليه وسلم ان تشفينا من جميع اللوم
والانتقام اللهم صل على سيدنا محمد طب القلوب ودوائها
وعافية الابدان وشفائها ونور الابصار وضيائها وعلى
اله وصحبه وسلم

كَمْ اَبْرَاَتْ وَصِبًا بِاللَّمْسِ رَاحَتُهُ
وَاَطْلَقَتْ اَرِبًا مِنْ رِبْقَةِ اللَّمَمِ

## 85-வது பாட்டு.

எத்தனையோ நோயாளிகளை (நபி பெருமானார்-ஸல்) அவர்களின் உள்ளங்கையானது தொடுவதன் மூலம் குணப்படுத்தியுள்ளது. அன்றியும் அது தேவையுடையவனுக்கு பைத்தியமென்ற முடிச்சையும் அவிழ்த்துள்ளது.

## ١٣ دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ سِرِّ الْبَرَكَاتِ اَللّٰهُمَّ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ سَبَبِ الْخَيْرَاتِ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ
وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ صَلَاةً تُنَجِّيْنَا بِهَا مِنْ جَمِيْعِ الْاَهْوَالِ وَالْاٰفَاتِ
وَتَقْضِيْ لَنَا بِهَا جَمِيْعَ الْحَاجَاتِ وَتُطَهِّرُنَا بِهَا مِنْ جَمِيْعِ
السَّيِّاٰتِ وَتَرْفَعُنَا بِهَا عِنْدَكَ اَعْلَى الدَّرَجَاتِ وَتُبَلِّغُنَا بِهَا
اَقْصَى الْغَايَاتِ مِنْ جَمِيْعِ الْخَيْرَاتِ فِى الْحَيٰوةِ وَبَعْدَ الْمَمَاتِ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ

وَاَحْيَتِ السَّنَةَ الشَّهْبَاءَ دَعْوَتُهُ
حَتّٰى حَكَتْ غُرَّةً فِى الْاَعْصُرِ الدُّهُمِ

## 86-வது பாட்டு.

அவர்களின் பிரார்த்தனையானது (பஞ்சமென்ற) வெண்மையான ஆண்டை உயிர்ப்பித்து (செழிப்புறச்செய்து)விட்டது. முடிவில் (அவ்வெண்மையானது) செழித்த காலங்(களாகிய கருங்குதிரை)களுக்கு நெற்றிச்சுட்டி போன்றாகிவிட்டது.

بِعَارِضٍ جَادَ اَوْ خِلْتَ الْبِطَاحَ بِهَا
سَيْبًا مِنَ الْيَمِّ اَوْ سَيْلًا مِنَ الْعَرِمِ

## 87-வது பாட்டு.

வர்ஷிக்கின்ற கார்மேகத்தைக்கொண்டு (அவர்களது பிரார்த்தனை நாட்டைச் செழிப்புறச் செய்து விட்டது.) மேலும் விசாலமான ஓடைகளை கடலின் கொடையோ அன்றி அணைக்கட்டின் பிரவாகமோவென நீ எண்ணும் அளவிற்கு (மழை வர்ஷித்தது.)

## கரம் படும் க்ஷணமே கடும் வியாதியும் குணம்.

நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அநேக வியாதியஸ்தரையும், சித்தசுவாதீனமற்றவரையும் தொட்டுத் தடவிக் குணமடையச்செய்த சம்பவங்களின் குறிப்பைப்பற்றி முதற் செய்யுளில் கூறப்பட்டுள்ளது.

நபி பெருமானார் (ஸல்) அவர்களும், ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரவி) அவர்களும் ஹிஜ்ரத் செய்து 'தௌர்' என்ற மலைக்குள்ளிருந்தபோது ஹஜ்ரத் ஸித்தீக் (ரவி) அவர்களை ஒரு சர்ப்பம் தீண்டிவிட்டது. சர்ப்பத்தினுல் கடிபட்ட இடத்தில் நபி பெருமானுர் (ஸல்) அவர்கள் தங்கள் உமிழ்நீரை வைத்துத் தடவிய உடன் முழு விஷமும் இறங்கி சுகம் பெற்ருர்கள். இதன் முழு விபரமும் நபி பெருமான் (ஸல்) அவர்களின் சரித்திர நூல்களில் குறிக்கப்பட்டிருக்கிறது.

"ஒருசமயம் ஒரு ஸ்திரீ தனது குழந்தையை நபி பெருமானுரிடம் தூக்கிக்கொண்டு வந்து "அல்லாஹ்வின் தூதரே! எனது இக்குழந்தைக்கு பைத்தியம் பிடித்திருக்கிறது" என முறையிட்டனள். உடனே நபி பெருமானுர் (ஸல்) அவர்கள் அக்குழந்தையின் நெஞ்சைத் தடவிவிட்டார்கள். அச்சணமே அக்குழந்தை வாந்தி செய்தது. "அதன்பின் அதற்குப் பைத்தியம் இல்லை" என ஹஜ்ரத் இப்னுஅப்பாஸ் (ரவி) அவர்கள் ரிவாயத்துச் செய்தார்கள்.

(பாஜூரி மதனுல்புர்தாஹ்)

"உஹதுச் சண்டையின்பொழுது ஹஜ்ரத் கதாதா (ரவி) அவர்களது கண்விழி பிதுங்கி வெளியில் வந்துவிட்டது. நபி பெருமானுர் (ஸல்) அவர்கள் அதனை அந்த ஸ்தானத்தில் எடுத்துவைத்துத் தடவிவிட்டார்கள். உடனேயே அது குணமடைந்துவிட்டது." (பாஜூரி) இன்னும் இவை போன்ற எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன; குருடர்கள் பார்வையடைந்திருக்கின்றனர்.

*பிந்திய இரு செய்யுட்களிலும் அறப் நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்ட சமயம் நபி பெருமானாரின் பிரார்த்தனையால் நாடு செழிப்புற்ற சம்பவத்தைக் குறித்து விபரிக்கிருர்.*

## பெரும் பஞ்சமும் பறந்தோடிற்று.

*நபி பெருமானார் (ஸல்) அவர்களது காலத்தில் அறப் நாட்டில் கடும் பஞ்சம் தோன்றிற்று. மழை வர்ஷிக்கவில்லை. ஒரு வெள்ளிக்கிழமையன்று நபிபெருமானார் (ஸல்) அவர்கள் திருமதீனாவில் குத்பாப் பிரசங்கத்தை நிகழ்த்திக்கொண்டிருந்த சமயம் ஒரு காட்டறபி எழுந்து நின்று "அல்லாஹ்வின் தூதரே! மழை இல்லாத காரணத்தால் பஞ்சம் தோன்றி மக்கள் வாடுகின்றனர். கால்நடைகள் மரிக்கின்றன. மழைக்காக பிரார்த்தனை புரியுங்கள்" எனக் கேட்டுக்கொண்டார். நபி பெருமானாரிடம் அவர் இவ்வேண்டுகோளைத் தெரிவிக்கும்போது வானம் நிர்மலமாகவிருந்தது. நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அப்படியே கரமேந்திப் பிரார்த்தித்தார்கள். அச்சணமே கார்மேகங்கள் ஒன்றுதிரண்டு பலத்த மழையைப் பொழியவாரம்பித்துவிட்டது. மறு வெள்ளிக்கிழமை ஜும்ஆ வரை பொழிந்துகொண்டேயிருந்தது. மறு ஜும்ஆவில் அதே காட்டறபியானவர் எழுந்து நின்றுகொண்டு "அல்லாஹ்வின் தூதரே! வீடுகளெல்லாம் இடித்து விழுகின்றன. சுவர்களெல்லாம் சாய்கின்றன; கால்நடைகள் அழிகின்றன. மழையை நிறுத்த இறைவனைப் பிரார்த்தியுங்கள்" எனக் கேட்டுக்கொண்டார். நபி பெருமான் (ஸல்) அவர்கள் பிரார்த்திக்க மழை நின்று வானம் வெளிவாங்கிற்று. அன்று தான் அவர்கள் பொழுது முகத்தைப் பார்க்க முடிந்தது."*

[புகாரீ.]

## நபி பெருமானாரின் பிரார்த்தனையை எதிரிகளும் எதிர்பார்த்து நின்றனர்.

*ஒருசமயம் திரு மக்காவில் மழை வர்ஷிக்காத காரணத்தால் கடும் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் பிணத்தின் எலும்புகளைத்*

திண்டாடவாரம்பித்தனர். உயிருக்குப் போராடும் நிலை ஏற்பட்டு விட்டது. அதுசமயம் அவர்கள் யாவரும் ஒன்றுகூடி "நாம் முகம்மதுக்கு கொடுமைகள் பல புரிந்தாலும் அவரோ மிக்க தயாள சிந்தையுள்ளவர்; கொடை வள்ளல்; சற்குணவான்; தயை காட்டுவதில் சிநேகிதர், விரோதி என்ற பாகுபாட்டைக் காட்டமாட்டார். ஆகையால் அவரிடம் சென்று பஞ்ச நிவாரணத்திற்கு ஒரு வழி செய்யுமாறு கூறவேண்டும்" என்று முடிவு செய்துகொண்டு அபூஸுப்யானிப்னுஹர்ப் என்ற குறைஷித்தலைவரை நபி பெருமானாரிடம் அனுப்பினார்கள். அவர் நபி பெருமானாரிடம் சென்று, "முஹம்மதே! தாங்கள், குடும்பத்தவருடன் அன்புடன் பழகவேண்டுமென்றும், ஒற்றுமையாக வாழ வேண்டுமென்றும் மற்றையோருக்குப் போதிக்கிறீர்கள். தற்சமயம் தங்களது சமூகத்தார் பஞ்சத்தால் வாடி மடிகிறது. இதற்கு நிவாரணமளிக்க இறைவன்பால் பிரார்த்தனை புரிவீர்களாக!" என வேண்டிக்கொண்டார். உடனேயே நபி பெருமான் (ஸல்) அவர்கள் இறைவனிடம் கரமேந்திப் பிரார்த்தித்தார்கள். மழை வர்ஷித்து நாடு செழிப்புற்றது. பஞ்சம் நீங்கி சுபீட்ச நிலை ஏற்பட்டது.

(அல்ஹதீது)

இவற்றைப்போல் இன்னும் பல சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. இவைகளைக் குறித்துத்தான் நமது ஆசிரியப் பெரியார் இவ்விரண்டு செய்யுட்களிலும் பிரஸ்தாபிக்கிறார்.



# ஆறும் பிரிவு.

## திரு குர்ஆனின் சிறப்பு.

دَعْنِيْ وَوَصْفِيْ اٰيَاتٍ لَهُ ظَهَرَتْ
ظُهُوْرَ نَارِ الْقِرٰى لَيْلًا عَلٰى عَلَمٖ

## 88-வது பாட்டு.

**இரவில் உயர்ந்த மலையின் மீது விருந்து (அழைப்பு)க்குரிய நெருப்பு வெளியாவது போன்று (நபி பெருமானார் – ஸல் – அவர்களுக்கு) வெளியான அற்புதங்களை நான் வருணிக்க என்னை விடு.**

### அறப் நாட்டின் விருந்தழைப்பு முறை.

அறப் நாட்டிலுள்ள தனவந்தர்கள் பொழுதுவிருந்தளிப்பதென்றால் தங்கள் ஊருக்குச் சமீபமான உயர்ந்த மலையின் சிகரத்தில் இராக்காலங்களில் நெருப்பை மூட்டி வைத்துவிடுவார்கள். இவ்வாறு செய்வதால் யாவரும் தம் இல்லத்திற்கு விஜயம் செய்து விருந்துண்ண வேண்டுமென்று அழைப்பு விடுத்ததாக ஆகிவிடுகிறது. அன்றியும் இவ்வாறு செய்வதன் மூலம் நாட்டுவாசிகள் யாவரும் பொது விருந்து என்றும் முடிவு செய்துகொண்டு ஆஜராகிவிடுவர். தம்மை எவரும் வந்து அழைக்கவில்லையென்று குறை கூறவும் மாட்டார்கள். இது

அந்நாட்டுப் பழக்கமாகும். பொது விருந்தளிப்பதற்கு அழைப்படையாளமாக மலையின் உச்சியில் நெருப்பு கொளுத்தப்படுவது பகிரங்க அழைப்பாக இருப்பதுபோன்று நபி பெருமானார் (ஸல்) அவர்களது அற்புதங்கள் யாவருக்கும் பகிரங்கமாகத் தெரிந்தவை. அவற்றை நான் வர்ணிப்பது எனக்குகந்த செய்கையாதலால் அது விஷயத்தில் யாரும் குறுக்கே நிற்காமல் என் போக்கில் என்னை விட்டுவிடவும் என்ற கருத்தை இவண் ஆசிரியர் விளக்குகிறார்.



فَالدُّرُّ يَزْدَادُ حُسْنًا وَهُوَ مُنْتَظِمٌ
وَلَيْسَ يَنْقُصُ قَدْرًا غَيْرَ مُنْتَظِمِ



## 89-வது பாட்டு.

**முத்தானது தொடுக்கப்பட்டாலும் அதிக அழகைக் கொடுக்கிறது. ஆனால் அது தொடுக்கப்படாத நிலையிலும் மதிப்பில் குறைந்து விடுவதில்லை.**

### நபி பெருமானாரின் பிரசித்தமான அற்புதங்களை விளக்குதல் ஏன்?

நபி பெருமானார் (ஸல்) அவர்களின் அற்புதங்கள் கணக்கிலடங்காதவை. அவை குன்றின் மேலிட்ட தீபம் போன்று எங்கும் பிரசித்தியடைந்து அவற்றின் ஜோதியானது வியாபித்திருக்கிறது. இந்நிலையில் அதைத் திரும்ப கூறுவதாலும்

செய்யுளாக இயற்றுவதாலும் என்ன பயன் உள்ளது? எனச் சிலர் கருதக்கூடும். அவர்களின் இச் சந்தேகத்திற்கு இங்கு ஆசிரியர் பதிலளிக்கிறார்.

முத்துக்கள் இயற்கையில் அழகானவை. அவற்றிற்கு செயற்கையழகு செய்யவேண்டிய அவசியமில்லை. எனினும் அவற்றை ஒழுங்கான முறையில் பதித்துக் கோர்த்துவைத்தால் அவற்றின் அழகு பன்மடங்காகச் சோபிக்கும். அவ்வாறு செய்யாமல் தனித்தனியே வைத்திருந்தாலும் அவற்றின் இயற்கையழகு குன்றிப் போய்விடாது. இஃதேபோன்று நபி பெருமானார் (ஸல்) அவர்களது அற்புதங்களைக் காவிய முறையில் யான் கூறுவதானது கேட்போர்ச் செவிக்கினிமையாகவும், மனதுக்கு ரம்மியமாகவும் இருப்பதற்காகத்தான் என இங்கு உவமான ரூபத்தில் பதிலளிக்கிறார்.

## دُعَاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَبْدِكَ خَيْرِ الْخَلَائِقِ وَاَفْضَلِ الْبَشَرِ
شَفِيْعِ الْاُمَمِ يَوْمَ الْحَشْرِ وَالنَّشْرِ سَيِّدِنَا مُحَمَّدٍ بِعَدَدِ كُلِّ مَعْلُوْمٍ
لَكَ يَا اَللّٰهُ يَا رَحْمٰنُ يَا رَحِيْمُ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَيْنِ الْعِنَايَةِ
كَنْزِ الْهِدَايَةِ طِرَازِ الْحُلَلِ نَاصِرِ الْمِلَلِ شَمْسِ الشَّرِيْعَةِ زَيْنِ
الْقِيَامَةِ شَفِيْعِ الْاُمَّةِ وَعَلٰى اٰلِهٖ وَخُدَّامِهٖ وَاَحْشَامِهٖ وَ
عِتْرَتِهٖ وَعَشِيْرَتِهٖ وَبَارِكْ وَسَلِّمْ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ

فَمَا تَطَاوَلَ آمَالُ الْمَدِيحِ إِلَى
مَا فِيهِ مِنْ كَرَمِ الْأَخْلَاقِ وَالشِّيَمِ

## 90-வது பாட்டு.

**எனவே (நபி பெருமான் - ஸல்) அவர்களில் (அமைந்து) உள்ள நற்குணங்கள், தன்மைகளின் எல்லைவரை புகழ்பவரின் சிந்தனைகள் நீண்டு (முடிவடைந்து) விடவில்லை.**

மேற்கூறப்பட்ட செய்யுட்களில் நபி பெருமானார் (ஸல்) அவர்களது அற்புதச் செய்கைகளின் தன்மைகள் பற்றியே கூறப்பட்டன. அவர்களது சொந்த நற்குணங்களையும், தன்மைகளையும் பற்றிக் கூறப்படவில்லை. இதனைக் குறித்து இங்கு ஏற்படுகிற ஐயத்துக்குப் பதில் கூறுகிறார்.

நபி பெருமானார் (ஸல்) அவர்களின் சொந்த நற்குணங்களையும், தன்மைகளையும் முதலிற் கூறாமல் அற்புதங்களைத் தான் முதலில் கூறினேன். காரணமென்னவென்றால் அவற்றிற்கு எல்லையில்லை. ஆகையினால் அவற்றை முற்றிலும் உணர இயலாது போயிற்று. அவ்வாறிருக்க அவற்றைப் பற்றிக் கூற சிந்தித்து முடிவுக்குக் கொண்டுவர புகழ்பவரால் எங்ஙனம் சாத்தியப்படும்? அளவிடமுடியாத அவைகளை எங்ஙனம் கூறி முடிக்கச்சாலும்? என்ற விபரத்தை இங்கு கூறுகிறார்.



أٰيَاتُ حَقٍّ مِّنَ الرَّحْمٰنِ مُحْدَثَةٌ
قَدِيمَةٌ صِفَةُ الْمَوْصُوفِ بِالْقِدَمِ



# 91-வது பாட்டு.

ரஹ்மானுடைய சத்திய வாக்கியங்கள் (திருகுர் ஆனின் வசனங்கள் அவற்றின் புற உச்சரிப்புக்களானது) புதியவை. (அவற்றின் கருத்துக்களோ) பூர்வீகமானவை. (ஏனெனில்) பூர்வீகம் (என்பது) கொண்டு வருணிக்கப்பட்ட (ஆண்ட)வனின் வருணனையானவை.

## சிறந்த அற்புதம் திரு குர்ஆனாகும்

நபி பெருமானார் (ஸல்) அவர்களால் நிகழ்ந்த அற்புதங்களில் திரு குர்ஆன் நிரந்தரமானதும் மிக்க மேலானதுமான அற்புதமாகும். இவ்வகிலம் உள்ளளவும், நபி பெருமானார் (ஸல்) அவர்கள் சத்தியத் திருநபி என்பதை அது ருஜூப் படுத்திக்கொண்டிருக்கிறது. எனவே அவ்வற்புதத்தின் தன்மையைக்குறித்து ஆசிரியப்பெரியார் இங்கு விபரிக்கிறார்.

திரு குர்ஆனின் ஆயத்துக்கள் (வசனங்கள்) ரஹ்மானால் அருளப்பட்டவையாகும். அவன் அநாதியாதலின் அவனது சர்வ தன்மைகளும் பூர்வீகமானவை. திருகுர்ஆன் அவனது வாக்கியங்களாகையால் அதுவும் பூர்வீகமானதேயாகும். எனினும் அது நம் நபி பெருமானார் (ஸல்) அவர்களுக்கு அருளப்

பெற்ற காலத்தைக் கவனிக்கும்பொழுது இறக்கப்பெற்ற செய்கையும், புற உச்சரிப்புந்தான் புதியனவேயன்றி அதன் கருத்துக்களல்ல. இதுதான் திருகுர்ஆன் சம்பந்தமாக முஸ்லிம்களது சித்தாந்தமுங்கூட. இக்கருத்தையே ஆசிரியருங் கூறுகிறார்.



لَمْ تَقْتَرِنْ بِزَمَانٍ وَهِيَ تُخْبِرُنَا
عَنِ الْمَعَادِ وَعَنْ عَادٍ وَعَنْ إِرَمِ



## 92-வது பாட்டு.

அவை ஒருகாலத்தைக்கொண்டு (மட்டும்) கட்டுப்பட்டவையல்ல. அவையோ நமக்கு மறுமையைப் பற்றியும் 'ஆத்' (கிளையினர்) பற்றியும் 'இரம்' (வாசிகள்) பற்றியும் அறிவித்துக்கொண்டிருக்கின்றன.

### திருகுர்ஆன் பூர்வீகமானது

திரு குர்ஆனின் வசனங்கள் பூர்வீகமானவை. ஆதி அந்தமற்றவையென்பதற்கு இங்கு ஆதாரம் கூறப்படுகிறது.

இப்பிரபஞ்சம் அழிந்தபிறகு மன்பதைகள் மறு உலகில் அடையும் பயன்பற்றி இந்த குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. எனவே இக்காரியம் இனிமேல் நிகழக்கூடியது. மறுமையில் நிகழ்வனவற்றை அறிவிப்பவைகள், அந்நிகழ்ச்சிகள் நடைபெற்ற பின்னரும் இருக்கக்கூடியவையே. ஆகவே இப்பிர

பஞ்சம் இருக்கும்வரை தான் நாள், கிழமை, மாதம், வருடம் போன்றவைகள் இருந்துவரும். இவ்வுலகம் முடியும்பொழுது இவைகளும் ஒழிந்துவிடுகின்றன. எனவே காலத்துக்குத் தான் அநித்தியம் இருக்கிறதேயன்றி இவ்வாயத்துகளுக்கு அநித்தியமில்லை.

தவிர இற்றைக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த 'ஆத்' 'இரம்' வர்க்கத்தினரைக் குறித்தும் இத்திருகுர்ஆனில் கூறப்படுகிறது. ஆகையால் இது எப்போது ஆரம்பமானதென நிர்ணயிப்பதற்கில்லை. ஆதலின் திருகுர்ஆனானது ஒரு காலத்தைக்கொண்டு கட்டுப்பட்டதல்ல. அதற்குப் புறம்பானது என ஆசிரியர் இங்கு குறிப்பிடுகிறார்.

திருகுர்ஆனில் இவ்வுலகத்தின் ஆரம்பமும் கூறப்பட்டுள்ளது. எனவே இவ்வுலகின் ஆரம்பத்தையும் இது கண்டிருப்பதால் இதன் தொடக்கம் உலகுக்கும், உலகிலுள்ள சந்திரன், சூரியன் அவற்றால் கணிக்கப்படும் நாள், கிழமை, வருடம், மாதம், தேதி ஆகியவைகளுங்கூட முந்தியுள்ளதென்பது வெள்ளிடைமலையாகும்.

## ஆத். இரம் வர்க்கத்தினர்.

இங்கு பிரஸ்தாபிக்கப்படுகிற ஆத் என்பவர் ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களது புதல்வரான ஸாம் என்பவரின் பௌத்திரர் அவ்ஸ் என்பவரின் புதல்வராவார். அவரது சந்ததியாருக்கு ஆத் கிளையினர் என்று பெயர். இவர் 1200 வயது வரை உலகில் ஜீவித்திருந்தாராம். தன்னுடைய புதல்வர்களில் 4000 பேர்களைப் பார்க்கும் பாக்கியம் பெற்றவராவார். ஆயிரம் பெண்களை மணந்திருந்தாராம். இவரது இச்சந்ததியார் பிற்காலத்தில் பலுகிப் பெருகிப் பெருங்கூட்டத்தினராகிவிட்டனர். இவர்களுக்கு சன்மார்க்க உபதேசம் புரிய ஹஜ்ரத் ஹூது (அலை) அவர்கள் நபியாக

அனுப்பப்பட்டார்கள். இக்கூட்டத்தினரோ அந்நபியின் போதனைகளைச் செவியுறாமல் எதிர்த்துப் பெருங் குற்றங்களை செய்து இறைவனது கோபத்திற்குள்ளாகி மடிந்தனர்.

இரம் வாசிகளெனப்படுவோர், ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களது பௌத்திரரும், ஸாம் என்பவரின் புதல்வருமான இரம் என்பவரது பெயரால் இக்கிளையினர் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் வாழ்ந்த இடத்திற்கு 'இரம்' என்று பெயர். இக்கிளையினரில் ஹஜ்ரத் ஹூது (அலை) அவர்களை விஸ்வாசித்தவர்கள் அழியாமல் தப்பினர். இவர்களது சந்ததியும் வெகு துரிதமாகப் பலுகிப் பெருகிற்று. பின்னர் இவர்களிடையே துன்மார்க்கம் பரவினதால், இவர்களைத் திருத்துவதற்காக ஹஜ்ரத் ஸாலிஹ் நபி (அலை) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். இக்கூட்டத்தினருக்கு 'தமூத்' என்று கூறப்படும். இவர்களை ஆதுல் உக்ரா பித்திய ஆது என்றுங் கூறுவர்.

"ஆத்" என்பவரின் புதல்வரான ஷத்தாத் என்பவர் நிர்மாணித்த ஊரை இரம் என்ற பெயர் குறிப்பிடுகிறதென்றுங் கூறுவர். இந்த ஷத்தாத் என்பவர் துன்மார்க்கர், சன்மார்க்க விரோதி. ஆதலால் நபிமார்களால் பிரஸ்தாபிக்கப்படுகிற சுவர்க்கத்திற்குப்பதிலாக போட்டி சுவர்க்கத்தை உண்டுபண்ணுகிறேன் என்று சுவர்க்கத்தைக் குறித்த வர்ணனைகளெல்லாம் பொருந்த ஒரு பெரும் நகரை நிர்மாணித்து பரிவாரங்களுடன் அதில் குடியேறச் செல்கையில் அவரும், அவரது பரிவாரங்களும் அல்லாஹ்வினால் அழிக்கப்பட்டனர். பின்னர் அந்நகரமும் ஜன சஞ்சாரமின்றி பாழடைந்து மறைந்தது.

[பாஜூரி - மதனுல் புர்தாஹ்]



دَامَتْ لَدَيْنَا فَفَاقَتْ كُلَّ مُعْجِزَةٍ
مِنَ النَّبِيِّينَ إِذْ جَاءَتْ وَلَمْ تَدُمِ

## 93-வது பாட்டு.

அவை நம்மிடையே நிரந்தரமாகிவிட்டன. எனவே அவை (மற்றைய) நபிமார்களினால் (நிகழ்ந்து) உள்ள சர்வ அற்புதங்களையும் மிகைத்துவிட்டன. (அந்நபிமார்கள் மூலம் அற்புதங்கள்) நிகழ்ந்தன வெனினும் அவை நிரந்தரமாக (என்றென்றும்) இருக்கவில்லை.

### அற்புதச் செய்கைகள் ஐவகைப்படுவன.

அற்புதச் செய்கைகள் நபிமார்களால் நிகழ்த்தப்படின் "முஃஜிஸாத்" என்றும் வலிமார்களால் நிகழ்த்தப்படின், கராமத் என்றும் சாமானிய முஸ்லிம்களால் நிகழ்த்தப்படின், மஊனத் என்றும் மூமினாக இல்லாத மற்றையோரால் அவர்களது தாவாவுக்கேற்ப நிகழ்த்தப்படின், இஸ்தித்ராஜ் என்றும் தாவாவுக்கு விரோதமாக நிகழ்ந்துவிடின், இஹானத் என்றும் பெயர்கள் கூறப்படுகின்றன. ஆகவேதான் ஒருவர் வாதிக்கும் தாவா மெய்யானதென்று நிரூபணமாகவேண்டுமாயின் அவர் அற்புதங்களை நிகழ்த்தவேண்டுமென்ற நிபந்தனை கிடையாது. இஸ்லாமிய சன்மார்க்கம் சத்தியமானது என நிரூபிக்க நபி பெருமானார் (ஸல்) அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அம்

மார்க்கத்தில் கூறப்பட்டுள்ளவை நேர்மையானவைகளா? அல்லவா? என்பதைத்தான் சிந்தித்துச் சீர்தூக்கிப்பார்க்க வேண்டும். இஸ்லாம் மார்க்கத்தின் சத்தியத் தன்மையை அறிஞர்கள் உணர்ந்தனர். எத்தகைய அற்புத நிகழ்ச்சிகளையும் காட்டித்தான் தீரவேண்டுமென்று கேட்காமல் அம் மதத்தை தழுவிவிட்டனர். எதிரிகளோவெனின், அற்புதம் நிகழவேண்டுமெனக் கேட்டனர். பெருமானார் (ஸல்) அவர்கள் நிகழ்த்திக்காண்பித்தார்கள். ஆனால், அவ்விரோதிகளோ அதனால் பயன்பெற்று சன்மார்க்கர்களாக ஆகிவிடவில்லை. பாமர மக்களோ இந்நிலையில் இல்லை. ஆகையால்தான் பெருமானார் (ஸல்) அவர்கள், அவர்களைத் திருப்தி செய்ய பல அற்புதங்களை நிகழ்த்திக் காண்பித்தார்கள். நபி பெருமானாருக்கு முன்தோன்றிய மற்றைய நபிமார்களும் அற்புதங்களை நிகழ்த்திக் காண்பித்தனர். எனினும் பெருமானாருக்கு நிகழ்ந்துள்ள அற்புதங்களில் திருகுர்ஆன் அருளப்பட்டது மிகப்பெரிய அற்புதமாகும். அது நிலைத்து நிரந்தரமாகவிருப்பதுபோல் வேறு எந்த நபிமார்களின் அற்புதங்களும் நிரந்தரமாகவிருந்ததில்லை. இக்கருத்தைத்தான் ஆசிரியர் இங்கு விளக்குகிறார்.

பொதுவாக நபிமார்கள் அற்புதங்களை நிகழ்த்துவது அங்கீகரிக்கப்பட்ட விஷயமாகும்.



مُحْكَمَاتٌ فَمَا يُبْقِينَ مِنْ شُبَهٍ
لِذِي شِقَاقٍ وَلَا تَبْغِينَ مِنْ حَكَمِ



# 94-வது பாட்டு.

**(அவ்வசனங்கள்) உறுதியாக்கப்பட்டவை; எனவே அவை மாறுபட்ட கருத்தினருக்கு எத்தகைய ஐயங்களுக்கும் இடம்வைக்கவில்லை; *(தனக்குச் சாதகமாக தீர்ப்புச்செய்ய)* எந்த நீதிபதியையும் அவை தேடவில்லை.**

**திருகுர்ஆனின் தன்மைகள்**

இங்கிருந்து 104-வது பாட்டு முடிய திருகுர்ஆனின் தன்மைகள் கூறப்படுகின்றன. திருகுர்ஆனின் ஆயத்துக்கள் தான் இஸ்லாமிய சட்டதிட்டங்களுக்கு அடிப்படையானவை. அவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் மார்க்கச் சட்டங்கள் வகுக்கப்படுகின்றன. மத சம்பந்தமான பிரச்சினைகள் ஏற்படும்சமயம் அவை சம்பந்தமாகக் கூறப்படும் கருத்துக்கள் சரியா தப்பாவெனத் தீர்ப்புக்கூற திருகுர்ஆன் ஆயத்துக்களைத் தவிர்த்து வேறு நியாயாதிபதியை நியமிப்பதில்லை. வசனங்களுக்கு மாறுபட்ட கருத்துக்களை கூறும் எதிரிகளின் தாவாவை முறியடித்து நியாயம் வழங்க எத்தகைய நீதிபதியையும் அவை தேடவில்லை. எவர் எத்தகைய கருத்தைக் கூறினும், அது சரியா, தப்பாவென நிர்ணயிப்பதற்கு திருகுர்ஆனே தான் நீதிபதியாக நியமிக்கப்படுகிறது என்ற கருத்துக்களை இச்செய்யுளில் விபரிக்கிறார் நமது ஆசிரியப்பெரியார்.

مَاحُورِبَتْ قَطُّ اِلَّا عَادَمِنْ حَرَبٍ
أَعْدَى الْأَعَادِيْ اِلَيْهَامُلْقِيَ السَّلَمِ

# 95-வது பாட்டு.

**அவற்றுடன் விவாதப் போரிட்டு, விரோதிகளில் கொடிய விரோதியும் (முடிவில்) அவற்றிற்கு சரணடைந்து, (தனது) விவாதப்போரை 'வாபஸ்' பெற்றேயன்றி வேறன்று.**

## திருகுர்ஆனின்முன் பரம விரோதியும் சரணாகதி.

*திருகுர்ஆனின்* வசனங்கள், சொன்னயம், பொருட் பொலிவு, சுருங்கக்கூறி விளங்கவைத்தல், கூறியது கூறாமை, நடையழகு போன்ற இலக்கண இலக்கியத்திற்குள்ள எல்லா அம்சங்களும் பொருந்தியுள்ளன. இவற்றைப்போன்று எம் மாலும் இயற்றமுடியுமென்று நினைத்துக்கொண்டு இவற்றி னுடன் போட்டிக்கு வந்தவர்கள், இறுதியில் தோல்வி அடைந்து தங்களால் இவைபோன்று ஒரு சிறிய வசனமும் இயற்றமுடியாதெனத் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு சரணடைந்துவிட்டனர். இதைக்குறித்து இறைவனும் தனது *திருகுர்ஆனில்,*

> **"நாம் நமது அடியாரின்பால் இறக்கியவற்றில் நீங்கள் சந்தேகம் கொள்வீராயின், அதைப்போன்று ஒரு (சிறிய) சூரத்தை (அத்தியாயத்தை)க் கொண்டுவாருங் கள்." (2:23) "அவ்வாறு நீங்கள் செய்யவில்லையா யின், ஒருக்காலும் நீங்கள் செய்யவே முடியாது" (2:24) என்று கூறியுள்ளான்.**

இவ்வறைகூவல் *திருகுர்ஆனில் நிரந்தரமாகவே* இருந்து வருகிறது. இச்சவாலுக்கு பதில் கூற எத்தனையோ இலக் கண-இலக்கிய வித்துவான்கள் தனி முறையிலும், கூட்டு முறையிலும் முயன்றுபார்த்து, முடியாமல் தோல்வியுற்றனர். இவ்வறைகூவல் இனியும் இருந்துதான்வரும். எவர் வேண்

டுமாயினும் முயன்று பார்க்கட்டும். ஒருக்காலும் இதை வெற்றிகொள்ள முடியாதென்ற உண்மையை இச்செய்யுளில் ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார்.



رَدَّتْ بَلَاغَتُهَا دَعْوٰى مُعَارِضِهَا
رَدَّ الْغَيُوْرِ يَدَ الْجَانِيْ عَنِ الْحُرَمِ



## 96-வது பாட்டு

**ரோஷமிக்கவன், தன் பெண்டிரைத் துர் எண்ணத்துடன் தீண்டும் அயலானின் கரத்தைத் தட்டுவது போன்று (திருகுர்ஆன் வசனங்களென்ற) அவற்றின் கருத்தமைந்த நவீனப் போக்கானது அவற்றினிடம் தர்க்கிப்பவனின் தாவாவைத் தட்டி விடுகின்றன.**

தனது மனைவி, மக்கள், தாய், சகோதரி முதலான நெருங்கிய பாந்தத்துவமுள்ள ஸ்திரீகளை துர் எண்ணத்துடன் தகாத முறையில் தீண்டுபவர்களை ரோஷமிக்கவன் தட்டி விலக்குவது போன்று திருகுர்ஆனின் வசனங்களிலுள்ள "பலாகத்" எனும் கருத்தமைந்த சொல், பொருள் நயப்போக்கானது தனக்குப் போட்டியாக வருபவர்களைத் தட்டி ஒடுக்கிவிடுகிறது.

لَهَا مَعَانٍ كَمَوْجِ الْبَحْرِ فِي مَدَدٍ
وَفَوْقَ جَوْهَرِهِ فِي الْحُسْنِ وَالْقِيَمِ

## 97-வது பாட்டு.

**அவற்றிற்கு சமுத்திர அலைபோன்று அதிகமான பொருள்களிருக்கின்றன. அழகிலும், விலைமதிப்பிலுமோ அ(ச் சமுத்திரத்)தின் முத்துக்கும் மேம்பட்டதாகயிருக்கிறது.**

### திருகுர்ஆனின் கருத்துக்களை அளவிடமுடியாது.

சமுத்திரத்தின் அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கடுக்காக வருவதுடன், இத்தனை அலைகள் என்று கணிக்க முடியாமல் மிக அதிகமாகவிருப்பதுபோல் திருகுர்ஆனின் வசனங்களுக்குப் பல பொருள்களும், கருத்துக்களும் அடுக்கடுக்காக அதிகமாக இருக்கின்றன. ஆனால் அலை ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இல்லாமல், ஒன்று மற்றொன்றுக்கு உதவியாகவும் ஆதாரமாகவும், அதிக விளக்கமுடையதாகவும் இருக்கின்றன. சமுத்திர அலைகளுக்கு ஓய்வு இல்லாதது போன்று திருகுர்ஆனின் கருத்துக்களுக்கும் ஒரு முடிவு கிடையாது. நாம் ஆராயும் அளவிற்கு கருத்துக்களும், பொருள்களும் புதிது புதிதாகப் பெருகிக்கொண்டே போகின்றன.

சமுத்திரங்களினடியிலிருந்து எடுக்கப்படும் முத்துக்களை தரவாரியாக விலைகள் மதிக்கப்படுகின்றன. ஆனால் திருகுர்ஆனின் வசனங்களிலுள்ள கருத்துக்களாகிய முத்துக்கள்

அழகிலும், மதிப்பிலும் சமுத்திர முத்துக்களுக்கும் மேம் பட்டவையாகும்.



فَلَا تُعَدُّ وَلَا تُحْصٰى عَجَائِبُهَا
وَلَا تُسَامُ عَلَى الْإِكْثَارِ بِالسَّأَمِ



## 98-வது பாட்டு.

எனவே, அவற்றின் நிகரற்ற அற்புதங்களை எண்ணி விடவோ, கணித்துவிடவோ முடியா. அன்றியும் அவற்றை (ஓதுவதை) அதிகரிப்பதால் அலுப்பு உண்டாகுமென்று வருணிக்கவும் முடியா.

ஏனைய புத்தகங்கள், புராணங்கள், நாவல்கள் ஆகிய வற்றை ஒருமுறைக்கு மறுமுறை படித்தால் சலிப்பு ஏற்பட்டு விடுகிறது. ஆனால் திருகுர்ஆனை எத்தனைமுறை வேண்டு மானாலும் திரும்பத்திரும்ப ஓதுவதில் எத்தகைய சலிப்பும், அலுப்பும் தட்டுவதில்லை. ஓத, ஓத தெவிட்டா இன்பமும், ஆசையும் உண்டாகிக்கொண்டேயிருக்கும்.



قَرَّتْ بِهَا عَيْنُ قَارِيهَا فَقُلْتُ لَهُ
لَقَدْ ظَفِرْتَ بِحَبْلِ اللّٰهِ فَاعْتَصِمِ



## 99-வது பாட்டு.

அவற்றை ஓதுபவனின் நேத்திரங்கள் குளிர்ந்து விட்டன. நான் அவனுக்குக் கூறுகின்றேன்; "நிச்சயமாக நீ அல்லாஹ்வின் கயிற்றை(ப் பலமாகப் பிடித்து)க் கொண்டு ஜெயமடைந்தாய். எனவே (திருகுர்ஆனைக்) கெட்டியாகப் பிடித்துக் கொள்!" (என்று.)

### دعَاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ اِلٰهَنَا اَنْتَ اَصْلَحُ الصَّالِحِيْنَ
فَاَصْلِحْنَا وَاَنْتَ عِصْمَةُ الْمُتَّقِيْنَ فَاعْصِمْنَا وَاَنْتَ وِفْقَةُ
الْمُسْلِمِيْنَ فَوَفِّقْنَا وَاَنْتَ اَلْهَمُ الْمُخْلِصِيْنَ فَاَلْهِمْنَا وَاَنْتَ هِدَايَةُ
الْمُهْتَدِيْنَ اِلٰى مَرَاشِدِ اُمُوْرِ دِيْنِهِمْ وَدُنْيَاهُمْ فَاهْدِنَا كَمَا هَدَيْتَهُمْ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ



اِنْ تَتْلُهَا خِيْفَةً مِّنْ حَرِّ نَارِ لَظٰى
اَطْفَأْتَ حَرَّ لَظٰى مِنْ وِّرْدِهَا الشَّبِمِ



## 100-வது பாட்டு.

துளிர்விட்டெரியும் (நரக) நெருப்பின் உஷ்ணத்தை பயந்த நிலையில் நீ அவற்றை ஓதுவாயாயின் அவை வெளிக்கிளம்பும் இடத்திலுள்ள (-உதடுகளிலுள்ள) குளிர்ச்சியால் துளிர்விட்டெரியும் உஷ்ணத்தை நீ நூர்த்தணைத்துவிடுகிறாய்.

كَأَنَّهَا الْحَوْضُ تَبْيَضُّ الْوُجُوهُ بِهِ
مِنَ الْعُصَاةِ وَقَدْ جَاءُوهُ كَالْحُمَمِ

## 101-வது பாட்டு.

அவை ("ஹௌலுல் கௌதர்" என்ற) தடாகத்தைப் போன்று! பாபிகளின் முகங்கள் அத் தடாகத்தில் கழுவப்படுவதினால் வெண்மையடைகின்றன. ஆனால் அவர்களோ அதன்பால் (வரும்பொழுது) அடுப்புக்கரிகள் போன்று வந்தனர்.

وَكَالصِّرَاطِ وَكَالْمِيزَانِ مَعْدِلَةً
فَالْقِسْطُ مِنْ غَيْرِهَا فِي النَّاسِ لَمْ يَقُمِ

## 102-வது பாட்டு.

(அவை) நீதியில் தராசு போன்றும், பாலத்தைப் போன்றும் (இருக்கின்றன.) அவையல்லாதவற்றினுல் ஏற்படும் நீதியானது மக்களிடையே நிலைக்காது.



لَا تَعْجَبَنْ لِحَسُودٍ رَاحَ يُنْكِرُهَا
تَجَاهُلًا وَهُوَ عَيْنُ الْحَاذِقِ الْفَهِمِ



## 103-வது பாட்டு.

அறியாதவன்போன்று அவற்றை மறுத்துக்கொண்டிருக்கும் பொருமைக்காரனைக்குறித்து நீ ஆச்சரியமுருதே! ஆனல் அவனே விளக்கமுடைய நிபுணன்தான் (எனினும் பொருமையுள்ளம் படைத்தவன்.)

## دعاء

يَمَّمْتُ بِكَ يَا رَسُولَ اللهِ فِي سَاحَةِ شَفَاعَتِكَ ٣ اَللّٰهُمَّ
صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى اٰلِ مُحَمَّدٍ وَبَارِكْ وَسَلِّمْ عَلَيْهِ اَللّٰهُمَّ اِنَّا
نَعْلَمُ اَنَّ اَفْضَلَ الْخَلْقِ وَاَجَلَّهُمْ لَدَيْكَ مُحَمَّدٌ رَسُولُ اللهِ
صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ اِنَّا نَتَوَسَّلُ اِلَيْكَ بِرُوحِهِ
الطَّيِّبِ الطَّاهِرِ اَنْ تَجْعَلَنَا مِنْ اَمْرِنَا فَرَجًا وَمَخْرَجًا اِنَّكَ عَلَى
كُلِّ شَيْءٍ قَدِيرٌ رَبَّنَا لَا تُؤَاخِذْنَا اِنْ نَسِينَا اَوْ اَخْطَاْنَا
رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَا اِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا
رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهِ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا
وَارْحَمْنَا اَنْتَ مَوْلَانَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ،



قَدْ تُنْكِرُ الْعَيْنُ ضَوْءَ الشَّمْسِ مِنْ رَمَدٍ
وَيُنْكِرُ الْفَمُ طَعْمَ الْمَاءِ مِنْ سَقَمِ



## 104-வது பாட்டு.

நிச்சயமாக நோயுள்ள கண் சூரியனின் பிரகாசத்தை (இல்லையென்று) மறுக்கிறது; வியாதியினால் வாயானது நீரின் சுவையை மறுக்கிறது; (இத்தன்மைபோன்றே பொறாமை உள்ளம் படைத்தவன் திருகுர் ஆனை மறுப்பதும் இருந்துவருகிறது.)

---

## ஏழாவது பிரிவு.

### பெருமானார் (ஸல்) அவர்களது மிஃறாஜ்.

يَا خَيْرَ مَنْ يَمَّمَ الْعَافُونَ سَاحَتَهُ
سَعْيًا وَفَوْقَ مُتُونِ الْأَيْنُقِ الرُّسُمِ

## 105-வது பாட்டு.

துரிதமாய் நடந்தும் பூமியில் அழுத்தமாக பாதங்களைப் பதித்துச்செல்லும் ஒட்டகைகளது முதுகின் மீதும் நலவைக்கருதி எவரின் ஸ்தலத்தை (மக்கள்) நாடிச்செல்கின்றனரோ அவரில் மிக்க மேலானவரே !

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ اَللّٰهُمَّ يَا لَطِيفُ
اَغِثْنَا وَاَدْرِكْنَا بِحَقِّ لُطْفِكَ الْخَفِيِّ اِلٰهِيْ كَفٰى عِلْمُكَ عَنِ الْمَقَالِ
وَكَفٰى كَرَمُكَ عَنِ السُّؤَالِ اَللّٰهُمَّ تَفَضَّلْ عَلَيْنَا وَاَحْسِنْ اِلَيْنَا
كُنْ لَنَا وَلَا تَكُنْ عَلَيْنَا اَللّٰهُمَّ اِنَّكَ قُلْتَ اُدْعُوْنِيْ اَسْتَجِبْ
لَكُمْ فَهَا اِنَّا نَدْعُوْكَ فَاسْتَجِبْ لَنَا فَاِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ



وَمَنْ هُوَ الْاٰيَةُ الْكُبْرٰى لِمُعْتَبِرٍ
وَمَنْ هُوَ النِّعْمَةُ الْعُظْمٰى لِمُغْتَنِمٍ



## 106-வது பாட்டு.

ஆழ்ந்து கவனிப்போருக்கு மிகப்பெரிய ஆதாரமாயும், கொள்ளை கொள்பவருக்கு மகத்தான பாக்கியமாயும் இருப்பவரே.

سَرَيْتَ مِنْ حَرَمٍ لَيْلًا إِلَى حَرَمٍ
كَمَا سَرَى الْبَدْرُ فِي دَاجٍ مِنَ الظُّلَمِ

## 107-வது பாட்டு

காரிருள் கவிந்த இரவில் பூரணமதி நடந்து செல்வது போன்று ஒரு புனித ஸ்தல(மான மக்க)த்திலிருந்து (வேறு) ஒரு புனித ஸ்தலத்திற்கு (பைதுல் முகத்தஸுக்கு) இரவிற் சென்றீர்கள்.

وَبِتَّ تَرْقَى إِلَى أَنْ نِلْتَ مَنْزِلَةً
مِنْ قَابَ قَوْسَيْنِ لَمْ تُدْرَكْ وَلَمْ تُرَمِ

## 108-வது பாட்டு.

இன்னம் எவரும் நாடமுடியாத, அடையமுடியாத இரு வில் (போன்ற புருவ) மத்தியின் இடைவெளியளவு (இறைவனை) நெருங்கும் அந்தஸ்தைப் பெறும்வரை நீங்கள் (வானுலகம்) ஏறிக்கொண்டே போனீர்கள்.



وَقَدَّمَتْكَ جَمِيعُ الْأَنْبِيَاءِ بِهَا
وَالرُّسُلِ تَقْدِيمَ مَخْدُومٍ عَلَى خَدَمِ



## 109-வது பாட்டு.

சர்வ நபிமார்களும், ரசூல்மார்களும், பணியாட்கள் (தங்களது) எஜமானனை முற்படுத்துவதுபோன்ற அ(வ் விஸ்தானத்தை அடைவ)தற்காகத் தங்களை முற்படுத்தினர்.

## دعاء

اللَّهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ حَاءِ الرَّحْمَةِ وَمِيمِ الْمُلْكِ وَدَالِ
الدَّوَامِ السَّيِّدِ الْكَامِلِ الْفَاتِحِ الْخَاتِمِ وَعَلَى آلِهِ وَصَحْبِهِ وَسَلِّمْ
صَلَاةً دَائِمَةً بِدَوَامِكَ وَبَاقِيَةً بِبَقَائِكَ لَا مُنْتَهَى لَهَا
دُونَ عِلْمِكَ إِنَّكَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ اللَّهُمَّ إِنَّا تَبَرَّأْنَا
مِنْ حَوْلِنَا وَقُوَّتِنَا وَاسْتَوْثَقْنَا بِحَوْلِكَ وَقُوَّتِكَ أَرِنَا عَجَائِبَ
صُنْعِكَ وَغَرَائِبَ حِكْمَتِكَ وَفَرِّجْ عَنَّا كَمَا فَرَّجْتَ عَنْ نَبِيِّكَ
يُوسُفَ الصِّدِّيقِ عَلَيْهِ السَّلَامُ بِرَحْمَتِكَ يَا أَرْحَمَ الرَّاحِمِينَ

وَأَنْتَ تَخْتَرِقُ السَّبْعَ الطِّبَاقَ بِهِمْ
فِي مَوْكِبٍ كُنْتَ فِيهِ صَاحِبَ الْعَلَمِ

## 110-வது பாட்டு.

(அல்லாஹ்வின் தூதரே!) தாங்களோ அவர்களின் (-நபிமார்களின்) அருகே நடந்தவர்களாக (மலக்குகளின்) மாபெரும் கூட்டத்தினருடன் ஏழு அடுக்குகளையும் (ஏழுவானங்களையும்) கடந்து சென்றீர்கள். அ(க்கூட்டத்)தில் நீங்கள் கொடியுடையவர்களாக இருந்தீர்கள்.

حَتَّى إِذَا لَمْ تَدَعْ شَأْوًا لِمُسْتَبِقٍ
مِنَ الدُّنُوِّ وَلَا مَرْقًى لِمُسْتَنِمِ

## 111-வது பாட்டு.

முடிவில் (இறை சமுகம்) அணுக முன்னேறுபவனுக்கு ஒரு எல்லையையும், கீர்த்தியை விரும்புபவனுக்கு ஒரு பதவியையும் நீங்கள் விட்டுவைக்கவில்லை. (அந்த அளவு நீங்கள் அல்லாஹ்வின் சமுகம் நெருங்கிவிட்டீர்கள்.)

خَفَضْتَ كُلَّ مَقَامٍ بِالْإِضَافَةِ إِذْ
نُودِيتَ بِالرَّفْعِ مِثْلَ الْمُفْرَدِ الْعَلَمِ

## 112-வது பாட்டு.

உயர்வைக்கொண்டு நீங்கள் அழைக்கப்பட்ட பொழுது (தங்கள்) அந்தஸ்திற்குத் தக்கவாறு, கீர்த்திமிக்க தனிப்பெரும் தலைவர்போன்று ஒவ்வொரு ஸ்தானத்தையும் தாழ்த்திக்கொண்டே (உயரச்) சென்றீர்கள்.

كَيْمَا تَفُوزَ بِوَصْلٍ أَيِّ مُسْتَتِرٍ
عَنِ الْعُيُونِ وَسِرٍّ أَيِّ مُكْتَتِمٍ

## 113-வது பாட்டு.

கண்களைவிட்டு மறைந்தவையான சாயுட்சியத்தையும் (ஞான) இரகசியத்தையும் நீங்கள் வெற்றிகொள்வதற்காகவே (நீங்கள் உயரச்சென்றீர்கள்.) அந்த இரகசியம் மறைவுமிக்கதாகும்.

فَحُزْتَ كُلَّ فَخَارٍ غَيْرَ مُشْتَرَكٍ
وَجُزْتَ كُلَّ مَقَامٍ غَيْرَ مُزْدَحَمِ

## 114-வது பாட்டு.

எனவே கூட்டாக்கப்படாத சர்வ மகத்துவங்களையும் சேகரம் செய்துகொண்டீர்கள்; நெருக்கடியில்லாமல் சகல ஸ்தானங்களையும் கடந்தீர்கள்.

وَجَلَّ مِقْدَارُ مَا وُلِّيتَ مِنْ رُتَبٍ
وَعَزَّ إِدْرَاكُ مَا أُولِيتَ مِنْ نِعَمِ

## 115-வது பாட்டு.

தங்களுக்களிவிக்கப்பட்ட கீர்த்திகளின் அளவு மகத்தானது; தங்களுக்களிக்கப்பெற்ற பாக்கியங்கள் முற்றையும் (பிறர்) பெறுவது மிக்க அரிதானது.

بُشْرٰى لَنَا مَعْشَرَ الْإِسْلَامِ إِنَّ لَنَا
مِنَ الْعِنَايَةِ رُكْنًا غَيْرَ مُنْهَدِمِ

## 116-வது பாட்டு.

இஸ்லாமியக் குழுவினர்காள்! நமக்கே நல்லாசி! (ஏனெனில்) திண்ணமாக இடிந்துபோகாத் தூணாகிய (இஸ்லாம் எனும்) அருள் நமக்கேயுண்டு.

١٩

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَبَارِكْ وَسَلِّمْ
عَلَيْهِ نَسْتَنْصِرُبِكَ يَا رَسُوْلَ اللّٰهِ اَللّٰهُمَّ اِنَّا نَسْتَنْصِرُبِكَ
وَنَبِيِّكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فِيْ جَمِيْعِ اَمْرِنَا
فَانْصُرْنَا عَلٰى مَنْ عَادَانَا وَاقْضِ حَاجَاتِنَا يَا قَاضِيَ الْحَاجَاتِ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ رَبَّنَا اغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَاِسْرَافَنَا
فِيْ اَمْرِنَا وَثَبِّتْ اَقْدَامَنَا وَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِيْنَ رَبَّنَا
اغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّئَاتِنَا وَتَوَفَّنَا مَعَ الْاَبْرَارِ
رَبَّنَا وَاٰتِنَا مَا وَعَدْتَّنَا عَلٰى رُسُلِكَ وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيٰمَةِ
اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

لَمَّا دَعَى اللّٰهُ دَاعِيْنَا لِطَاعَتِهٖ
بِاَكْرَمِ الرُّسُلِ كُنَّا اَكْرَمَ الْاُمَمِ

# 117-வது பாட்டு.

**அல்லாஹ்வானவன் தன்னை வழிபடுவான்வேண்டி நம்மையழைத்தவரை தூதர்களில் சிறப்புமிக்கவ ரெனக் கூப்பிட்டபொழுது நாம் உம்மத்துக்களில் சிறப்புமிக்கவர்களாக ஆகிவிட்டோம்.**

இதுவரை நமதாசிரியப்பெரியார் நபி பெருமானார் (ஸல்) அவர்களைக் குறித்து அடுத்தவரிடம் புகழ்ந்து கூறுவது போன்று படர்க்கையாகக் கூறிவந்தார். 107-வது பாட்டி லிருந்து நபி பெருமான் (ஸல்) அவர்களை நேரிடையாகத் தரிசித்து அவர்களிடமே அவர்களது அருமைபெருமைகளைக் கூறுவதுபோல் முன்னிலைப்பாலில் தமது செய்யுட்களை இயற்றிக் கூறுகிறார். இவ்வாறு மாற்றிக்கூறுவது இலக்கியச் சட்டத்தில் இனிமைபயக்கும் முறையாகும். இம்முறையை முக்கியமாகக் காவியங்களில்தான் காணமுடியும்.

நமது ஆசிரியர் 107-வது பாட்டு முதல் 117-வது பாட்டு வரை நபி பெருமானார் (ஸல்) அவர்கள் மிஃறாஜ் சென்ற வைபவத்தையும் அங்கு அவர்கள் அடைந்த இணையற்ற பேறுகளையும் அந்தஸ்துக்களையும் மகத்துவங்களையும் வர்ணிக்கிறார்.

சகல நபிமார்களுக்கும் மிஃறுஜ் ஏற்பட்டிருக்கிறது அதேபோன்று நபி பெருமானார் (ஸல்) அவர்களுக்கும் மிஃறுஜ் ஏற்பட்டுள்ளது. ஆனால் இவற்றிற்கிடையேயுள்ள தாரதம்மியம் என்னவெனில் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் விழிப்பில் பூதஉடலுடன் சென்றார்கள். மற்றைய நபிமார்களுக்கேற்பட்ட மிஃறுஜானது ஆத்மார்த்தீகமானது; பூதஉடலோடு அல்ல. பொதுவாகக்கூறினால் நபிபெருமான் (ஸல்) அவர்களைத்தவிர வேறு எவருக்கும் பூதஉடலுடன் மிஃறுஜ் ஏற்படவில்லை. ஆகவே இவ்விஷயத்தில் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் மேம்பட்டுவிட்டார்கள்.

## "லாமகான்"
## சென்று இறைவனைத் தரிசித்த நபி.

தவிர எழுவான்களையும் அர்ஷை, குர்ஸீ முதலான யாவற்றையுங் கடந்து திசைக்கப்பால் திசை இடமற்ற "லாமகான்" சென்று இறைவனைத் தரிசித்து நேர்முகமாக உரையாடி அநேக ஞான நுட்பங்களையும் மற்றையவைகளையுந் தெரிந்துகொண்டார்கள். நபி பெருமானார் (ஸல்) அவர்கள் மற்றெவரையும்விட இறைவன் சமுகத்தில் மிகவும் நெருங்கி இருந்தார்கள். இரு புருவ வில்லின் இடைவெளி ஒன்றையொன்று தொடுவதுபோன்றும் அதனைவிடவும் இன்னுமதிகம் நெருங்கி நபி பெருமானார் (ஸல்) அவர்கள் ஆத்மார்த்தத்தில் இறைவனை அண்மியிருந்தார்கள். விண்ணில் ஏறின மட்டுக்கு உயரச்சென்றதுபோன்று ஆத்மார்த்தீகத்தில் சர்வ வகையான அந்தஸ்துக்களையும் கடந்து "ஹபீப்" எனும் கடைசித் தனிப்பெரும் அந்தஸ்தையும் பெற்றுவிட்டார்கள். என்பனபோன்ற கருத்துக்களை இச்செய்யுட்கள்மூலம் ஆசிரியப்பெரியார் சுட்டிக்காண்பிக்கிறார்.

நபி பெருமான் (ஸல்) அவர்களது மிஃறுஜ் வைபவங் குறித்து சரித்திர நூல்களில் விரிவாக எழுதப்பட்டிருப்ப

தாலும் இதனைக்குறித்து வாதப்பிரதிவாதங்கள் பிறந்து பெரும் சர்ச்சைகள் நிகழ்ந்திருப்பதாலும் பொதுவாக முஸ்லிம் உலகில் இவ்விஷயம் தெரிந்தேயிருப்பதாலும் இதனைக் குறித்து அதிக விளக்கம் தேவையில்லையென்று விடப்படுகிறது.

---

## எட்டாவது பிரிவு.

### ''ஜிஹாத்'' எனும் சன்மார்க்கப்போர்.



رَاعَتْ قُلُوْبَ الْعِدٰى اَنْبَاۤءُ بِعْثَتِهٖ
كَنَبْاَةٍ اَجْفَلَتْ غُفْلًا مِّنَ الْغَنَمِ



## 118-வது பாட்டு.

மட்டித்தனத்தால் மறதியாக நிற்கும் ஆடுகளை(த் துஷ்டமிருகங்களின்) கர்ஜனையானது திடுக்கிடச் செய்ததுபோன்று, நபி (பெருமான்) அவர்கள் (நபியாக) அனுப்பப்பெற்ற சமாச்சாரங்கள் எதிரிகளின் இதயங்களை நடுங்கச்செய்துவிட்டன.

இங்கிருந்து 140-வது செய்யுள்வரை நபி பெருமானார் (ஸல்) அவர்கள் புரிந்த தற்காப்பு யுத்தங்களைக் குறித்துக் கூறப்படுகிறது.

## ஜிஹாதும், முஸ்லிமல்லாதாரும்.

"ஜிஹாத்" என்று கூறிய உடனேயே முஸ்லிமல்லாதார் தூர்எண்ணங்கொள்ளத் தலைப்படுகின்றனர். முஸ்லிம்களில் சிலர்கூட அறியாமையால், நபி பெருமானார் (ஸல்) அவர்களும், அவர்களது சிஷ்யர்களும் முஸ்லிமல்லாதாரை வெட்டித் துவம்சம் செய்ததாகவே நினைக்கத் தொடங்குகின்றனர். இஸ்லாமியச் சரித்திரத்தை இன்னோர் புரட்டிப் பார்க்கும் பட்சம் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் புரிந்த யுத்தங்கள் அனைத்தும் முஸ்லிம்களில் ஒரு சிலரும் முஸ்லிமல்லாதாரும் நினைப்பது போன்றுள்ள "ஜிஹாத்" இல்லை என்பதை உணருவர்.

### தவிர்க்க முடியாத சந்தர்ப்பத்திலேயே தற்காப்புக்காக யுத்தம்.

"ஜிஹாத்" எனும் மார்க்கப் புனிதப்போர், தர்மப்போர். தர்மத்தை நிலைநிறுத்துவான்வேண்டி புரியப்படும் யுத்தமாகும். இதில் அதர்மமோ அநியாயமோ எதுவும் நிகழ்வதற்கில்லை. மேலும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் திருமக்காவில் வாழ்ந்துகொண்டு வந்தகாலத்தில் அங்கிருந்தவர்களில் நூற்றுக்கணக்கானவர் இஸ்லாத்தைத் தழுவிவிட்டனர். அவ்வாறிருந்தும் 13 வருட காலம்வரை சன்மார்க்கத்தை எதிர்த்து எதிரிகள் செய்த அநியாய அட்டூழியங்களையும், படுகொலைகளையும் கவனித்தால் எத்தனை பரம ஏழையாக இருப்பினும், சிறுபான்மையினராக இருப்பினும் சகித்துக் கொண்டு இருக்க இயலாது; எனினும் நபி பெருமானவர்களின் அனுமதியை எதிர்பார்த்து முஸ்லிம்கள் பொறுமையாகவே இருந்தனர். திருமக்காவில் நபியென்ற முறையில் இஸ்லாமியப் பிரசாரம் புரிந்த பதின்மூன்று வருடகால சரித்திரத்தை புரட்டிப்பார்த்தால் எதிரிகள் செய்த அக்கிரமங்கள்தான் காணப்படுகின்றனவேயன்றி முஸ்லிம்களில் எவரேனும் ஒருமுறையாவது எதிரிகளை எதிர்த்துப் போரிட்ட

தாகக் காணப்படவில்லை. இந்த 13 வருட காலத்திலுங்கூட எதிரிகளின் இம்சைகள் எல்லைமீறியபோது அவற்றைச் சகிக்கவியலாதவர்கள் அபீசீனிய நாட்டிற்குச் செல்லலாம்; அங்கு குடியேறி தங்களின் இஸ்லாமியத் தருமத்தைக் கடைபிடித்து அமைதியான வாழ்க்கையை நடத்தலாம் என நபி பெருமானார் (ஸல்) அனுமதி கொடுத்தார்களேயன்றி தங்கள் சொந்த ஹோதாவில் தற்காப்புச் செய்ய எதிர்நடவடிக்கை ஏதாவது எடுத்துக்கொள்ளுங்களென அநுமதியளிக்கவில்லை.

## இஸ்லாத்திற்காக சுகத்தையும், நாட்டையும், உறவினரையும் துறந்த தியாகிகள்.

நூற்றுக்கணக்கான தியாகிகள் அபீசீனிய நாட்டிற்கு குடிபெயர்ந்து போனார்கள். பின்னருங்கூட எதிரிகள் தங்கள் செய்கையைச் சிந்தித்துப் பார்த்தனரில்லை. முஸ்லிம்களை ஒழித்துக்கட்டும் முயற்சியிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தனர். இவர்களது கொடுமைகள் சகிக்கவியலா அளவிற்கு அதிகரித்தன. எஞ்சிய முஸ்லிம்கள் இரண்டாம் முறையாக திருமதீனாவுக்குக் குடிபெயர்ந்து போயினர். கிட்டத்தட்ட எல்லா முஸ்லிம்களும் சென்றுவிட்டனர் என்றே சொல்லவேண்டும். சில ஸ்திரீகளும், வயோதிகர்களும்தான் மக்காவில் தங்கினர். நபி பெருமானார் (ஸல்) அவர்கள் திருமக்காவில்தான் இருந்துவந்தார்கள். திருமக்காவை விட்டு வேறிடம் செல்லுமாறு தமக்கு அல்லாஹ்விடமிருந்து உத்திரவு வராதவரை அதைவிட்டு வெளியேறுவதில்லை என்பது நபி பெருமானார் (ஸல்) அவர்களது கொள்கை. இறுதியில் அனுமதியும் வந்தது, வெளியேறினார்கள்.

இவ்வெளியேற்றத்தின்மூலம் முஸ்லிம்கள் காட்டிய சகிப்புத்தன்மை ஐயகோ! என்னென்றுரைப்பது? தங்களது வீடு வாசல்கள், சொத்து சுகங்கள் முதலான யாவற்றையும் திருமக்காவாசிகள்பால் ஒப்படைத்தனர். சிலரோ அணிந்

திருந்த ஆடையுடன் சென்றனர். கணவன் மனைவியையும், மனைவி தனது கணவனையும், தந்தை தனயனையும், தனயன் தந்தையையும், தம்பி அண்ணனையும், அண்ணன் தம்பியையும், தாய் மகனையும், மகள் தாயையும், தமக்கை தம்பியையும், தம்பி தமக்கையையும் விட்டு அகதிகளாக கண்ணீருங்கம்பலையுமாகப் பிரிந்து சென்ற காட்சி மிகவும் பரிதாபகரமாகவிருந்தது.

திருமதீனு ஏறத்தாழ 300 மைல் தொலைவிலுள்ளது. மிகுந்த சிரமத்துடன் அங்கு குடியேறிய முஸ்லிம்கள் இஸ்லாமிய மதக்கடமைகளை அமைதியாக அங்கிருந்துகொண்டு நிறைவேற்ற எண்ணினர். ஆனால் திருமக்காவாசிகளோ இன்னுமதிக தொந்தரவே கொடுக்கத் தொடங்கினார்கள். "முஸ்லிம்களுக்கு மதீனுவில் இடங்கொடுக்காமல் வெருட்டி வெளியேற்ற வேண்டுமென்றும் இன்றேல் திருமக்காவாசிகளின் படையெடுப்புக்கு திருமதீனுவாசிகள் இரையாக வேண்டுமென்றும்" அங்குள்ள தலைவர்களுக்கு பயமுறுத்தல் கடிதங்களை எழுதினர். அம்மட்டுமின்றி திருட்டுத்தனமாக மதீனுவிற்கு வந்து தோட்டங்களுக்கு தீவைத்தல், முஸ்லிம்களது கால்நடைகளைக் களவாடல், தனித்து இருப்பவர்களைக் கொன்றுதீர்த்தல் போன்ற அநியாயங்களையெல்லாம் செய்தனர். என்றாலுங்கூட அங்கு முஸ்லிம்களது கூட்டம் பெருகிற்று; பலமும் பெற்றது. அவ்வாறிருந்தும் முஸ்லிம்கள் சகிப்புத் தன்மையுடனேயே இருந்துவந்தனர்.

எம் முயற்சியிலும் முஸ்லிம்களைக் கிளப்ப முடியாததையுணர்ந்த எதிரிகள் போலிக்காரணங்களைக் கூறிக்கொண்டு படையெடுத்து முன்னேறி வந்தனர். இவர்கள் முன்னேறுவதைக் கண்ணுற்ற நபி பெருமானார் (ஸல்) அவர்களும் தற்காப்புக்காக ஏற்பாடு செய்தார்கள். திருமதீனுவுக்குச் சுமார் 30 மைல் வரை எதிரிகள் வந்தபின்னர்தான் முஸ்லிம்கள் யுத்தத்திற்குச் சென்றனர். இந்த யுத்தம் ஹிஜ்ரி 2-ம் வருடத்தில் பத்று என்ற இடத்தில் முதன்முதலாக நடைபெற்

றது. (இதன் முழு விபரம் 128, 129-வது பாட்டுக்களின் குறிப்பில் வருகிறது.)

அன்று தொடங்கிய யுத்தம் பெருமானூர் (ஸல்) அவர்கள் திருமக்காவைக் கைப்பற்றும்வரை, அதாவது ஹிஜ்ரி 8-ம் வருடம்வரை நிகழ்ந்தது. இந்த ஏழு வருடகாலத்தில் நிகழ்வுற்ற சண்டைகள் பல. இவை யாவும் திருமதீனுவின் பக்கத்திலும், திரு மதீனுவிலுமேயன்றி திரு மக்காவிலோ, அல்லது அதற்குப் பக்கத்திலோ நிகழ்ந்தவையல்ல. இத்தகைய யுத்தங்களில் குறிப்பிடத்தக்கவை பத்று, உஹது, கந்தக் (அகழ்) சண்டைகள்தாம். பத்று, உஹத் சண்டைகளைத் தவிர்த்து நடந்த யுத்தங்களில் முக்கியத்துவம் பெற்றது அகழ் யுத்தமாகும். இது மதீனுவை எதிரிகள் முற்றுகையிட்டபோது நிகழ்ந்தது. முஸ்லிம்கள் நகருக்குள் இருந்துகொண்டு அகழ் வெட்டி எதிரிகளை உள்ளே பிரவேசிக்கவிடாமல் தடுத்து நிறுத்திக்கொண்டிருந்த சண்டையாகும்.

## வலுச்சண்டைக்கிழுக்கும் சுபாவம் முஸ்லிம்களிடம் கிடையா.

நபி பெருமானூர் (ஸல்) அவர்கள் செய்துள்ள போர்களெல்லாம் தடுப்பு யுத்தங்களே-தற்காப்பு யுத்தங்களேயன்றி வேறன்று. இச்சண்டைகளில் இரு கட்சியினரும் போர்க்களத்தில் அணிவகுத்து நிற்கும்போதுகூட முஸ்லிம்கள் முதலாவதாகப் போரைத் தொடங்கவில்லை. எதிரிகளேதான் சண்டையை ஆரம்பித்தனர். பின்னர் தற்காப்புக்காக முஸ்லிம்கள் எதிர்த்துப் போரிட்டனர். முஸ்லிம்கள் எந்த இடத்திலும் முன்னேறித் தாக்கும் போர் முறையையோ, வலிய சண்டைக்கிழுக்கும் கொள்கையையோ கடைப்பிடிக்கவில்லை; இச் சண்டைகளுக்குப் பின்னர் ஏற்பட்ட உடன்படிக்கையை மக்காவாசிகள் மீறி முஸ்லிம்களின் கட்சியைச்சேர்ந்தவர்களை திருமக்காவில் தாக்கிப் படுகொலை செய்தனர். உடன்படிக்கையை மீறியவர்களைத் தண்டிக்கவேண்டுமென்ற முறையி

யிலேயே ஹிஜ்ரி 8-ம் ஆண்டில் திருமக்காவின்மீது படை யெடுத்தனர். இதில் பெரும் போர் நிகழ்ந்துவிடாமல் ஒரு சிறிய கைகலப்பு மட்டும் நிகழ்ந்தது. ஒன்றிரண்டுபேர்தான் கொல்லப்பட்டனர். இதன் பின்னர் மக்காவைப் பொறுத்த வரை வேறு சண்டை எதுவும் நிகழவில்லை. அதன்பின்னர் தான் "ஹுனைன்" சண்டை ஏற்பட்டது. இப்போரையுங் கூட "ஹவாஜின்" "தகீப்" கோத்திரத்தவர் போர்முரச கொட்டி அணிவகுத்து நின்று வம்புச்சண்டைக்கிழுத்தபிறகு தான் நிகழ்ந்தது. திருமக்காவிலிருந்து நபி பெருமானார் (ஸல்) அவர்கள் நேராக திருமதீனாவுக்குச் சென்றிருக்கலாம். அவ்வாறு சென்றால் மறுதினத்தில் மக்காவிற்கு மேற்கண்ட கோத்திரத்தவரால் ஆபத்து நேர இருந்தது. இவ்வாபத்தை தவிர்த்துக் கொள்வதற்காகவே நபி பெருமானார் (ஸல்) ஹுனைன் செல்லவேண்டியதேற்பட்டது. நாடு பிடிக்க வேண்டுமென்ற ஆசையோ, பலவந்தமாக இஸ்லாம் மதத்தில் மற்றவர்களை சேர்க்கவேண்டுமென்ற ஆசையோ இல்லை; வலியச் சண்டைக்குப் போவதுமில்லை; வந்த சண்டையை விடுவதுமில்லை என்ற கொள்கையையே நபி பெருமானார் (ஸல்) அவர்கள் போரில் அனுசரித்தார்கள்.

சண்டையிட்டுப் பலாத்காரமாக எதிரிகளை இஸ்லாத்தில் சேர்க்கும் கொள்கையைக் கடைப்பிடித்திருப்பின், ஹிஜ்ரி 6-வது ஆண்டில் "ஹுதைபியா" எனுமிடத்தில் திருமக்கா வாசிகளுக்கும் நபிபெருமானார் (ஸல்) அவர்களுக்கும் ஒப்பந்தம் ஏற்படவும் காரணமில்லை. அவ்வொப்பந்தத்தின்மூலம் பல கடுமையான நிபந்தனைகளுக்குக் கட்டுப்படவும் காரணமில்லை. இப்போர்கள் யாவற்றிலும் அதாவது, நபி பெருமானார் (ஸல்) அவர்கள் திருமதீனாவில் வாழ்ந்த பதினொரு வருட காலத்தில் நிகழ்ந்துள்ள சகல யுத்தங்களிலும் எதிரிகளில் கொல்லப்பட்டவர்கள் மொத்தம் பல நூறுபேர்கள்தான். கைது செய்யப்பட்டவர்கள் ஆயிரக்கணக்கிலிருந்தனர். ஆயினும், அவர்கள் யாவரும் விடுதலை செய்யப்பட்டனரேயன்றி அக்கால வழக்கத்தை அனுசரித்து யாரும் அடிமைப்படுத்தப்

படவுமில்லே; கொல்லப்படவுமில்லே. அன்றியும், இக்காலத்திலுள்ள பிற மதத்தவரில் சிலர் பிரசாரம் செய்வதுபோன்று பலவந்தமாக இஸ்லாம் மதத்தில் சேர்க்கப்படவுமில்லே. ஆனால் ஸஹாபிகள் போர்க்களங்களில் எதிரிகளேத் தாக்கும்பொழுது அவ்வெதிரி தந்தையா? தனேயனு? பந்துவா? என்பதைக் கொஞ்சமும் கவனியாமல் சன்மார்க்கத்துக்காகக் கடுமையாகப் போரிட்டனர். அச்சமயம் அவர்கள் தாக்கிய முறையானது இச்செய்யுளில் கூறப்பட்டதற்கொப்ப வீரம் செறிந்ததாக இருந்ததேயன்றி வேறன்று. நபிபெருமானர் (ஸல்) அவர்களும் போர்க்களங்கள் சென்ருர்கள். எனினும் எவரையும் வெட்டி வீழ்த்தியதாகவோ, கொன்றதாகவோ சரித்திரத்தில் கூறப்பட்டில்லே. எனவே "ஜிஹாத்" என்பதற்கு "தர்மயுத்தம்" என்று கூறுவதுதான் பொருந்தும்.

மேய்ச்சலில் கவனமாக ஈடுபட்டு முன்பின் நிற்கும் மிருகங்களேயோ சம்பவிக்கப்போகும் ஆபத்துக்களேயோ எதிர்பாராமல் அஜாக்கிரதையாக இருக்கும் ஆடுகள் திடீரென பெருங் கர்ஜனேயை - சப்தத்தைச் செவியேற்றதும் பீதியடைந்து எம்முகமாக அவை நின்றனவோ அம்முகத்தில் சிதறியோடிப் பதறுவதைப்போன்று நபி பெருமானர் (ஸல்) அவர்கள் நபித்துவத்தையடைந்து சன்மார்க்கப் பிரச்சாரம் செய்யத் தொடங்கிய செய்தியானது துன்மார்க்கர்களது இதயங்களே நடுக்கமுறச் செய்துவிட்டது. இனி தங்களது சுயநலப் போக்குகள் செல்லாவென அவர்கள் அஞ்சினர்.





مَازَالَ يَلْقَاهُمُ فِي كُلِّ مُعْتَرَكٍ
حَتّٰى حَكَوْا بِالْقَنَا لَحْمًا عَلٰى وَضَمِ



## 119-வது பாட்டு.

நபி [பெருமானார்-ஸல்] அவர்கள் அ[ப்பகை]வர்களை ஒவ்வொரு போர்முனையிலும் சந்தித்துக்கொண்டே வந்தார்கள். முடிவில் ஈட்டியினால் [குத்தப்பட்ட] அ(ப் பகை)வர்கள் மாமிசக்கட்டைகளில் [வைக்கப்பட்டு] உள்ள இறைச்சிக்கு ஒப்பாயினர்.

நபி பெருமானார் (ஸல்) அவர்கள் எதிரிகளை எதிர்த்துப் போரிட்ட பிரதி போர்முனைக்கும் சென்றேவந்தார்கள். அந்தப் போர்களில் காபிர்களை ஸஹாபாக்கள் வெட்டி வீழ்த்திக் கொன்றதற்கு இச்செய்யுளில் ஒரு உவமை கூறப்படுகிறது. இறைச்சி வியாபாரி மாமிசத்தைத் தனது வெட்டுக்கத்தியால் தன்னிஷ்டம்போல் துண்டாடி இறைச்சி வெட்டும் கட்டையின்மீது வைப்பதுபோன்று இஸ்லாமியப் போர்வீரர்கள் தங்களது ஈட்டிகளால் தங்களது விரோதிகளைத் தங்களிஷ்டம் போல் குத்தியும், வெட்டியும் காயப்படுத்தினர்; துண்டாடினர். அவ்வெதிரிகளின் சடலங்கள் மரக்கட்டையின் மீதிருக்கும் மாமிசத்துக்கு ஒப்பாக இருந்தன.



وَدَّ الْفِرَارَ فَكَادُوا يَغْبِطُونَ بِهِ
أَشْلَاءَ شَالَتْ مَعَ الْعِقْبَانِ وَالرَّخَمِ



## 120-வது பாட்டு.

**அ[ப் பகை]வர்கள் [புறமுதுக காட்டி] ஓடவே விரும்பினர். எனவே அ[வ்வாறு ஓடுவ]தினல் பிணந்தின்னும் காக்கைகளுடனும், கழுகுகளுடனும் உயர்ந்துள்ள மாமிசத்துண்டங்கள் போன்று [தாங்களும்] ஆகிவிடவே ஆதரவு வைத்துக் கொண்டிருந்தனர்.**

இஸ்லாமிய வீரர்களின் மூர்க்கத் தாக்குதல்களைத் தாங்க முடியாத எதிரிகள் போர்முனைகளைவிட்டுப் புறமுதுகுகாட்டி ஓடிவிடவே விரும்பினர். கொல்லப்பட்டுப்போன பிணங்களின் அவையவங்களைத் தங்கள் கால்களால் உயரத்தூக்கிக் கொண்டு பறக்கிற கழுகு பிணந்தின்னிக் காக்கைகளைப் பார்க்கும் அவ்வெதிரிகள் முஸ்லிம்களின் தாக்குதலால் ஏற்படும் கஷ்டங்களைப் பொறுக்கமாட்டாமல் இக் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு சித்திரவதை அடைவதைப்பார்க்கிலும் செத்துப்போன இவ்வங்கங்களைப் போன்று நாமும் ஆகிவிட்டால் நலமே என அவர்கள் நினைத்துக்கொண்டிருந்தனர்.




## 121-வது பாட்டு.

இரவுகள் சென்றுகொண்டேயிருக்கும். ஆனால் சங்கைமிக்க மாதங்களது இரவுகள் தோன்றாத வரை அவற்றின் எண்ணிக்கைகளை அவர்கள் அறியார்.

### சங்கைமிக்க மாதங்களில் யுத்தம் செய்தல்கூடாது.

அறப் நாட்டில் ரஜப், துல்கஃதா, துல்ஹஜ், முஹர்ரம் ஆகிய நான்கு மாதங்களில் யுத்தம் செய்யமாட்டார்கள். போர் நடந்துகொண்டிருந்தபோதிலும் இம்மாதங்கள் தோன்றிவிட்டால் இருதரப்பாரும் யுத்தங்களை நிறுத்தி விடுவர். அறப் நாட்டில் இஸ்லாமியப் பிரசாரம் செய்யப்பட்டு அதன்மூலம் முஸ்லிம்கள் வலுச்சண்டைக்கிழுக்கப்பட்டு போர் புரிய இறைவனால் அனுமதியளிக்கப்பட்ட பின்புங்கூட முஸ்லிம்கள் பண்டைய காலந்தொட்டு இருந்துவரும் இவ்வழக்கத்தை மதித்தே நடந்துவந்தார்கள். இந்நான்கு மாதங்களிலும் முஸ்லிம்கள் எவர்மீதும் போர் தொடுக்கமாட்டார்கள். ஆனால் தங்களை எவரேனும் பலவந்தமாகத் தாக்கினால் இம்மாதங்களைக் கவனிக்காமல் எதிரியைப் பதிலுக்குத் திருப்பித் தாக்குவார்கள்.

பலவந்தமாகப் போருக்கிழுத்த எதிரிகளைப் பதிலுக்குத் தாக்கும் முஸ்லிம்களின் தாக்குதலைச் சகிக்கவியலாத எதிரி

கள் ஓயாத சஞ்சலத்துடனிருப்பர். நாட்களும், இரவுகளும் சென்றுகொண்டேபோகும். எத்தனை நாட்கள் சென்றிருக்கின்றன என்ற எண்ணிக்கையை அவர்கள் அறியமாட்டார்கள். ஆனால் கௌரவமிக்க இந்நான்கு மாதங்கள் பிறந்தால் தான் யுத்த நிறுத்தம் ஏற்படும். அப்பொழுதுதான் இத்தனை மாதங்கள் கழிந்துள்ளனவென்று அவர்கள் உணர்வார்கள்.



كَأَنَّمَا الدِّيْنُ ضَيْفٌ حَلَّ سَاحَتَهُمْ
بِكُلِّ قَرْمٍ إِلَى لَحْمِ الْعِدَى قَرِمِ



## 122-வது பாட்டு.

எதிரிகளின் மாமிசத்[தைக் கிழித்தெறிவ]தின்மீது பேரவாக்கொண்ட ஒவ்வொரு [முஸ்லிம்] தலைவனுடன் [இஸ்லாமிய] மார்க்கமானது விருந்தாளி போன்று அ[ப்பகை]வர்களது முற்ற வெளியில் இறங்கினது.



يَجُرُّ بَحْرَ خَمِيْسٍ فَوْقَ سَابِحَةٍ
تَرْمِي بِمَوْجٍ مِنَ الْأَبْطَالِ مُلْتَطِمِ



## 123-வது பாட்டு.

வேகமாய் நீந்திச்செல்லும் குதிரையின்மீது ஒன்றுடனொன்று மோதக்கூடிய அலைகள்போன்று ஐந்தணிப்படைகளாகிய சமுத்திரத்தை அம்மார்க்கமானது இழுத்துச்செல்கிறது.



مِنْ كُلِّ مُنْتَدِبٍ لِلّٰهِ مُحْتَسِبٍ
يَسْطُو بِمُسْتَأْصِلٍ لِلْكُفْرِ مُصْطَلِمِ



## 124-வது பாட்டு.

(முஸ்லிம் வீரர்கள்) அல்லாஹ்வின் அழைப்புக்குத் தலைசாய்ப்பவர்கள்; நற்கூலியை ஆதரவு வைப்பவர்கள்; 'குப்ரை' வேரறக் களைந்தெறியும் ஆயுதங்கொண்டு தாக்குகின்றனர்.



حَتّٰى غَدَتْ مِلَّةُ الْإِسْلَامِ وَهْيَ بِهِمْ
مِنْ بَعْدِ غُرْبَتِهَا مَوْصُولَةَ الرَّحِمِ



## 125-வது பாட்டு.

முடிவில் உறுதுணையற்றிருந்த இஸ்லாம் மார்க்க மானது அவர்களால் (ஸஹாபாக்களால்) (உறவி னர்களின் அணைப்பு போன்று) பலம் வாய்ந்ததாக ஆகிவிட்டது.



مَكْفُولَةً أَبَدًا مِنْهُمْ بِخَيْرِ أَبٍ
وَخَيْرِ بَعْلٍ فَلَمْ تَيْتَمْ وَلَمْ تَئِمِ



## 126-வது பாட்டு.

சிறப்புற்றபிதாவைக்கொண்டும், உயரிய கணவனைக் கொண்டும் அ(ம்மார்க்கமான)து பாதுகாக்கப்படும் பொறுப்பிற்குட்பட்டுவிட்டது. எனவே அது அநா தையாகவோ விதவையாகவோ ஆகிவிடவில்லை.



هُمُ الْجِبَالُ فَسَلْ عَنْهُمْ مُصَادِمَهُمْ
مَاذَا رَأَى مِنْهُمْ فِي كُلِّ مُصْطَدَمِ



# 127-வது பாட்டு.

**அவர்கள் மலை(களைப் போன்றவர்)கள். அவர்களைப் பற்றி அவர்களுடன் போரிட்ட (பகை)வர்களை வினவிப்பார்! "ஒவ்வொரு போர்முனைகளிலும் அ(ப்பகை)வர்கள் இவர்களால் என்ன கண்ணுற்றனர்?" என்று.**

## ஐந்தணிப் படைகள்.

தற்காலத்தில் விமானப்படை, கடற்படை முதலான போர்ச்சாதனங்கள் பெருகிவிட்டன. முற்காலத்திலோ வெறும் தரைப்படை மட்டுமேதான் இருந்தது. இப்படையை முன்னணி, நடுவணி, வலதுசாரி, இடதுசாரி, பின்னணி என ஐவகையாகப் பிரித்து அணிவகுப்பர். ஆதலின், இம்முறையில் பூர்த்தியான படைகளுக்கு அக்காலத்தில் ஐந்தணிகள் என்பதாகக் கூறுவதுண்டு. நபி பெருமானார் (ஸல்) அவர்களிடம் சம்பூரணமான படைகள் இருந்தன என்பதற்கு அறிகுறியாக இங்கு ஆசிரியப் பெரியார் ஐந்தணிப்படை எனக் கூறியுள்ளார்.

தவிர, ரத கஜ துரக பதாதி என நால்வகைப் படைகள் முற்காலத்தில் இருந்தன. இப்படை ஒவ்வொன்றிலும் மேற்குறித்த ஐவகை அணிகள் இருந்துவந்திருக்கின்றன. எதிரிகளது நாட்டுக்குத் திருட்டுத்தனமாகச் சென்று துப்பறிந்து தகவல் தெரிவிக்கும் படைக்கு ஐந்தாம்படை என்பதாக இக்காலத்தில் பெயர் கூறப்படுகிறது. இப்படையைக் குறித்து ஆசிரியப்பெரியார் இங்கு குறிப்பிடவில்லை.



وَسَلْ حُنَيْنًا وَسَلْ بَدْرًا وَسَلْ أُحُدًا
فُصُولَ حَتْفٍ لَهُمْ أَدْهَى مِنَ الْوَخَمِ

## 128-வது பாட்டு.

அ(ப்பகை)வர்களுக்கு படுநாசத்தை விளைவித்த பிரிவுகளான 'ஹுனைனை'க் கேள்; 'பத்றை'யும் கேள்; 'உஹுதை'யும் கேள்! (அவை அவர்களுக்கு) வாந்தி பேதி நோயைவிட மிகக்கொடிதாக இருந்தன.

اَلْمُصْدِرِي الْبِيضِ حُمْرًا بَعْدَ مَا وَرَدَتْ
مِنَ الْعِدَى كُلَّ مُسْوَدٍّ مِنَ اللِّمَمِ

## 129-வது பாட்டு.

(இஸ்லாமிய வீரர்கள்) வெண்ணிறமான வாட்களை செந்நிறமாக மீட்பவர்கள்; கருநிற மயிர் பிடரி வரை நீண்டுள்ள எதிரிகள்மீது அவை (-வாட்

கள்) பாய்ந்தபின்னர் (அதாவது: வெண்ணிற மான் வாட்களை ஏந்தி போரிட்டால், எதிரிகளின் இரத்தத்தால், அவை செந்நிறமாக மாறிவிடுகின்றன. கருத்த மயிருள்ள வாலிப எதிரிகள் இவர்களின் வாளுக்கு தப்புவது கிடையாது.)

ஹுனைன் யுத்தம்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 8-ம் வருஷம் ரமலான் மாதத்தில் பதினாயிரம் வீரர்களுடன் திருமக்காவின்மீது படையெடுத்து வந்து ஒரு சிறு கைகலப்பைத் தவிர்த்து, பெரும்போர் எதுவும் இல்லாமல், வெகு சுலபமாக அதனைக் கைப்பற்றிக்கொண்டார்கள். திருமக்காவாசிகள் எதிர்க்க சக்தி இல்லாமல் பணிந்துவிட்டனர். அதுமட்டுமின்றி இனிமேல் இஸ்லாத்தை எதிர்க்க இயலாது என்று உணர்ந்து மனப்பூர்வமாக இஸ்லாம் மதத்தைத் தழுவவும் தொடங்கிவிட்டனர். ஆகவே நபி பெருமானார் (ஸல்) அவர்கள் திருமக்காவை ஜெயித்து "கஃபா" என்ற தேவாலயத்தைச் சுத்தப்படுத்தியது மக்காவாசிகளது மனமாற்றத்துக்கு காரணமாயிற்று. தெய்வ சகாயத்தைப் பெறாத எவனும் அவனது ஆலயத்தைக் கைப்பற்றமுடியாது என்பது அவர்களது கொள்கை. திரு கஃபாவின்மீது குரோதமுள்ள எவரும் அந்நகரை இதுபரியந்தம் ஜெயித்ததில்லை. இப்பொழுது நபி பெருமானார் (ஸல்) அவர்கள் ஜெயித்ததானது அவர்களது கட்சி சத்தியமானது; அதனை எதிர்த்தது அசத்தியம், என்ற எண்ணத்தை உண்டாக்கிவிட்டது. யானைப் படையுடன் வந்த படைகளைச் சிறு குருவிகளைக் கொண்டு மடியச்செய்த இறைவன் இச்சந்தர்ப்பத்தில் முஸ்லிம்களுக்கு எவ்விதத் தடையும் செய்யாததால் அவர்கள்தான் அவனது அன்புக்குரியவர்கள் என்ற முடிவுக்கு வந்து கூட்டங்கூட்டமாக இஸ்லாத்தைத் தழுவினர். இதன்மூலம் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் மக்காவாசிகளது மனத்தைக்கவர்ந்து

அவர்களது உணர்ச்சியை ஜெயித்து. அவர்களுள்ளங்களில் இஸ்லாமிய பக்தியையூட்டி அவர்களது இதயங்களையும் வெற்றிகொண்டு விட்டார்கள். ஆதலின் இங்கு இரட்டை ஜெயமடைந்தார்கள் எனலாம்.

இஃதிவ்வாறிருக்க நபிநாயகம் (ஸல்) அவர்கள் திருமக்காவைக் கைப்பற்றி அங்குள்ளவர்களைப் பணியச் செய்த விபரம் அதற்குக் கிழக்கிலுள்ள ஹுனைன் வாசிகளுக்கு எட்டிற்று. இப்பிராந்தியத்தில் ஹவாஜின், தகீப் ஆகிய கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் வசிக்கின்றனர். இவர்கள் ஜனத்தொகையிலும் புஜபல பராக்கிரமங்களிலும் மிக்கவர்கள். குறைஷியரும், முஸ்லிம்களும், போரிட்டுக்கொண்டிருப்பதைக் கவனித்துக்கொண்டே இருந்தனர். முஸ்லிம்களைக் குறைஷியர் ஒடுக்கிவிடுவர் என்று இவர்களும், ஏனைய வர்க்கத்தாரும் நம்பிக்கொண்டிருந்தனர். குறைஷியர்கள் ஒடுக்குவதற்குப் பதிலாக ஒடுங்கிவிட்டதுமன்றி, முஸ்லிம்களுடன் ஐக்கியமாகி இரண்டறக் கலந்துவிட்ட சம்பவம் இவர்களை எல்லாம் தூக்கிவாரிப்போட்டது போலாயிற்று.

குறைஷியருக்கு அடுத்தபடியாக செல்வாக்கும் பலமும் பொருந்திய கோத்திரம் தாமே; அல்லாமலும் திருமக்காவுக்குப் பக்கத்தில் நாம் வசிக்கிறோம். இனி முஸ்லிம்களது பாய்ச்சல் நம் பக்கந்தானே திரும்பும்; ஆதலால் வெள்ளம் வருமுன் அணைபோட வேண்டும் என்று எண்ணினர். ஹவாஜின் கோத்திரத்தவர்கள் தங்கள் தலைவரான மாலிக்குப்னு அவ்ப் என்பவரிடமும், தகீப் கோத்திரத்தவர்கள் தங்கள் தலைவர் கினானத்துப்னு அப்து யலீல் என்பவரிடமும் கலந்தாலோசனை செய்து இருவரும் கூடி ஐக்கியப் போர்முனையைச் சிருஷ்டித்தனர். இவ்விரு கோத்திரங்களுடன் அக்கம் பக்கங்களிலுள்ள இதர கோத்திரங்களும் சேர்ந்துகொண்டன. தங்களது வீடு வாசல்களில் சொத்துக்களையும், பிராணிகளையும், பெண்டு பிள்ளைகளையும் விட்டுவிட்டு ஆடவர் மட்டிலும் போர்முனைக்கு வந்தால் ஸ்திரமாக நின்று போர் செய்ய

மாட்டார்கள்; ஆதலால் அவையனைத்தையும் போர்க்களத்தில் கொண்டுவந்து சேர்த்துவிட்டால், அவைகளைக் காப்பதற்காகவேணும் ஸ்திரமாக நின்று போர் செய்வார்கள் எனத் தலைவர்கள் முடிவு செய்து, ஆடு, மாடு, ஒட்டகைகள், குதிரைகள் முதலிய கால்நடைகளையும் இதர ஜங்கமச் சொத்துக்களையும், ரொக்கங்களையும், பெண்டு பிள்ளைகளையும் போர்க்களத்துக்குக் கொண்டுவந்தனர்.

இவ்வாறு பலத்த போராட்டத்தை நிகழ்த்த இவர்கள் முஸ்தீப்பு செய்து போர்க்களத்தையும் தெரிந்தெடுத்த விபரம் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு எட்டிற்று. இவர்கள்மீது போர் தொடுக்கவேண்டுமென்ற எண்ணம் முஸ்லிம்களுக்குமில்லை; நபி பெருமானார் (ஸல்) அவர்களுக்குமில்லை. என்றாலும் இவர்கள் செய்த ஏற்பாடுகள் இவர்கள் பால் படையெடுக்குமாறு நபி பெருமானார் (ஸல்) அவர்களை நிர்ப்பந்தப்படுத்திற்று. ஏற்கனவே திருமதீனாவில் இருந்து வந்த முஸ்லிம் படைகளிலுள்ள பதினாயிரம் பேர்களுடன் திருமக்காவில் இஸ்லாத்தைத் தழுவிய புதிய முஸ்லிம்களில் இரண்டாயிரம் பேர்கள் சேர்ந்துகொண்டனர். ஆகவே பன்னீராயிரம் பேர்களைக்கொண்ட படையுடன் நபி நாயகம் (ஸல்) அவர்கள் ஹுனைன் பட்டணத்தை நோக்கிச் சென்றார்கள்.

பகைவர்கள் ஏற்கனவே தயாராக இருந்தார்கள். இந் நகருக்குச்செல்லும் ரஸ்தாவில் நகருக்குப் பக்கத்தில் ஒரு கணவாயைக் கடக்க வேண்டியதிருந்தது. ரஸ்தாவின் இரு மருங்கிலும் உயரமான மலைகள் வானளாவி நின்றன. அவைகளில் நல்ல பதுங்குமிடங்கள் இருந்தன. முஸ்லிம் வீரர்கள் இக் கணவாயினுள் வரும்போது அவர்களை வளைத்துக் கொண்டு தாக்கவேண்டுமென அவர்கள் திட்டம் போட்டு, முன்னதாகவே தயாராகப் பதுங்கியிருந்தனர். பூப்பிளக்கும் நேரத்தில் முஸ்லிம் வீரர்கள் அதனுள் பிரவேசித்தனர். சரியாக குறித்த இடத்தில் இவர்கள் வந்தவுடன் பகைவர்கள்

வெளியிற்கிளம்பி சரமாரியாக அம்புகளைப் பொழிந்தனர். முஸ்லிம் வீரர்கள் இவ் வம்புத் தாக்குதலுக்கு அஞ்சிப் புற முதுகு காட்டி சிதறி ஓடினார்கள்.

இவர்கள் ஓடுவதைக் கண்ணுற்ற நபி பெருமானார் (ஸல்) அவர்கள், ஜனங்களே இங்கு வாருங்கள் நான் அல்லாஹ் வின் ரஸூல்; நான் அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மது, என்பதாக மூன்று முறை கூவி ஸஹாபாக்களை அழைத்தார்கள். இவ்வாறு கூறி அழைக்கும்போது நபி பெருமானார் (ஸல்) அவர்களுடன் அப்போர்க்களத்தில் ஹஜரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) உமர்பாறூக் (ரலி) அபூ ஸுஃப்யானிப்னுல் ஹாரித் (ரலி) றபீஅத்னுப்னுல் ஹாரித் (ரலி) உஸாமத்துப்னு ஜைத் (ரலி) முதலியவர்கள் மட்டுந் தான் இருந்தனர்; மற்றவர்கள் ஓடிவிட்டனர்.

அச்சமயம் ஹவாஜின் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு வீரன் கையில் கருங்கொடி ஏந்தியவண்ணம் முன்னேறிவந்து எதிர்த்தவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்திக்கொண்டிருந் தான். இவனைப் பார்த்தவுடன் ஹஜ்ரத்அலி (ரலி) அவர்கள் முன்னேறிச் சென்று அவனை வெட்டி வீழ்த்தினார்கள். முஸ்லிம் வீரர்கள் சிதறுண்டு பின்வாங்கியதைப் பார்த்த நௌ முஸ்லிம்களான திருமக்காவாசிகள் தங்களது இதயங் களுக்குள்ளிருந்த பழைய புழுக்கங்களை வெளியிடத்தொடங் கினார்கள். இனி முஸ்லிம்கள் சமுத்திரக்கரையிலன்றி வேறு எங்கு நிற்பார்கள் என்று தோன்றவில்லை என்பதாக அபூஸுஃப்யானிப்னு ஹர்ப் கூறினர். சுருங்கக் கூறுமிடத்து அன்று முஸ்லிம்களின் நிலைமை வெகு சங்கடத்திற்குள்ளா யிருந்தது.

அவ்வமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களது "துல்துல்" என்னும் குதிரையின்மீது சவாரியாயிருந்தார்கள். பக்கத்தில் ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் அதன் கடிவா ளத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள். அவர் உரத்த குர

லுடையவர். ஆதலால் அவரிடம் 'இலந்தை மரத்தினடியில் என்னிடம் போர் விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்த என் ஸஹாபிகளை அழையும்!" என்பதாகக் கட்டளையிட்டார்கள். உடனே அவர் உரத்த குரலில் நாயகம் (ஸல்) அவர்களது கட்டளையைத் தெரிவித்தார்.

இவ்வழைப்பை செவியேற்ற அப்புண்ணியவான்கள் உடனே திரும்பினர். நபி பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து குழுமினர். எவருடைய சவாரிகள் உடனே வேலை செய்யாமல் இடக்குச் செய்தனவோ அவர்களெல்லோரும் கையில் வாளை மட்டும் எடுத்துக்கொண்டு சவாரியை விட்டுக் குதித்து ஓடோடியும் வந்து சேர்ந்தனர். இவ்வாறு அங்கு நூறுபேர் வந்து சேர்ந்தனர். இவர்களை அழைத்துக்கொண்டு நபி பெருமானார் (ஸல்) அவர்கள் நான் நபி; பொய்யல்ல; நான் அப்துல் முத்தலிபின் புதல்வன் என்று சொல்லிக் கொண்டு முன்னேறினார்கள். மூர்க்கமான போராட்டம் நிகழ்ந்தது. நபி நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் குதிரையிலிருந்த வண்ணமே தரையிலிருந்து பொடிக் கற்களை வாரி எடுத்து பகைவர்களை நோக்கி எறிந்தார்கள். இதற்குப்பின் படைகளத்திலேயே எதிரிகள் சிதறத்தொடங்கினர்.

மற்றைய ஸஹாபிகளும் திரும்பிவரத் தொடங்கினார்கள். அதற்குள்ளாக பகைவர்கள் கூட்டங்கூட்டமாக கைது செய்யப்பட்டு, கயிறுகளால் பிணைக்கப்பட்டு, பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார்கள். இப் படுதோல்வி வெள்ளிக்கிழமையன்று பகைவர்களுக்கு ஏற்பட்டது. கைதியானவர்களையும், கொல்லப்பட்டவர்களையும், தவிர்த்து மற்றவர்கள் ஓடிப்போய்விட்டனர். ஹவாஜின் கோத்திரத் தலைவரான மாலிக் ஒரு பெரும் கூட்டத்துடன் தாயிப் நகரக் கோட்டையில் அடைக்கலம் புகுந்தான். அதன்பின் அவன் பெருமானார் (ஸல்) அவர்களிடம் சரணடைந்துவிட்டான். அன்று கைதிகளில் 6000,

ஒட்டகைகளில் 24 ஆயிரம், வெள்ளிக்கட்டி 40 ஆயிரம் அவ்க்கியா எடை, ஆடு முதலியவைகளில் நாற்பதாயிரத்துக் கதிகம் முஸ்லிம்களிடம் அகப்பட்டன.

(ஸீரத்துன்னபி, புகாரீ, முஸ்லிம்)

பத்று யுத்தம்.

நபிகள் பெருமானுர் (ஸல்) அவர்கள் திரு மக்காவில் நபித்துவத்தை அடைந்ததிலிருந்து பதின்மூன்று வருட காலம்வரை சன்மார்க்கப் பிரசாரம் புரிந்து, துன்மார்க்கர் களின் கடுமையான எதிர்ப்புகளைச் சகித்தேவந்தார்கள். பிறகு இறைவனது அனுமதிப்படி தங்களது வீடு வாசல்களை யும், சொத்து சுகங்களையும் துறந்து ஏறக்குறைய முன்னூறு மைல்களுக்கப்பாலுள்ள திருமதீனுவில் தாங்களும் குடியேறி மற்ற முஸ்லிம்களையும் குடியேற்றினர்கள் என்று முன்னர் கூறியுள்ளோம்.

அமைதியாக இருந்து இறைவனது சன்மார்க்கத்தின் கட்டளைகளைக் கடைப்பிடித்தொழுக வேண்டுமென்பதுதான் அவர்களது எண்ணம். ஆனுல் துன்மார்க்கர்கள் வாளாயிருக் காமல் மறுபடியும் தொல்லை கொடுத்தனர். இரண்டு வருஷ காலம் இதில் கழிந்தது. புஜ பல பராக்கிரமத்தால் ஆயுதந் தாங்கி முஸ்லிம்களை ஒழித்துவிட வேண்டுமென்பது விரோதி களின் தலைவர்களது எண்ணம். இதற்கான சமயத்தையும் எதிர்பார்த்திருந்தனர்.

திரு மக்காவாசிகளின் வர்த்தகக் கோஷ்டிக்கு அபூஸுப் யானிப்னு ஹர்ப் என்பவர் தலைமைதாங்கி ஷாம் தேசம் சென்றிருந்தார். அங்கு சரக்குகளை விற்றுவிட்டு, திருமக்கா வுக்கு வேண்டிய சாமான்களைக் கொள்முதல் செய்து திரும்ப வந்துகொண்டிருந்தார். அவரது வர்த்தகக் கோஷ்டியை முஸ்லிம்கள் கொள்ளையடிக்கப்போவதாக உலவிய வதந் தியை அவர் தெரிந்து முன்னெச்சரிக்கையாக திருமக்காவுக்கு

பிரத்தியேகமாக ஒருவரை அனுப்பி பாதுகாப்புக்கு ஆள் தேவை என்று தகவல் அறிவித்தார். இக்கோஷ்டி திரு மதீனாவினண்டை வழியாகத்தான் திருமக்கா செல்ல வேண் டும். என்றாலும் வேறொரு தூரமான வழியாக தமது கோஷ் டியை அழைத்துக்கொண்டு அவர் திருமக்காவை நோக்கி வந்துகொண்டிருந்தார்.

முஸ்லிம்களை ஆயுதங்கொண்டு தாக்கவேண்டும் என்ற துர் எண்ணமுள்ளவர்களுக்கு இந்தத் தகவல் ஒரு அரிய சந்தர்ப்பமாக இருந்தது. திருமக்காவிலுள்ள யாவரிலும் ஏறக்குறைய ஆயிரம் பேர்களை யுத்த சன்னத்தர்களாக்கி பூர்ண ஆயுத பலத்துடன் வர்த்தகக் கோஷ்டிக்கு பாதுகாப் புக்கென்று பெயர்வைத்துப் புறப்பட்டனர். இக்கோஷ்டியில் திருமக்காவாசிகளது செல்வங்களிருந்ததால் யாவரும் இதில் பங்கெடுத்துக்கொண்டனர். இப்படை திருமக்காவைவிட்டுப் புறப்பட்டு வந்த பின்னர் அவர்களது கோஷ்டி எவ்வித கலவரத்துக்கும் உள்ளாகாமல் திருமக்காவை அடைந்த விபரமும் தெரிந்தது. என்றாலும் படைக்கோலத்துடன் புறப் பட்டுவிட்டதால் பத்று வரை சென்று அங்கு கூடுகிற சந்தைக்கூட்டத்தில் தங்களைக்குறித்து விளம்பரம் செய்து எதிரிகளிடம் தங்களைப்பற்றிய பீதியைஏற்படுத்தாமல் திரும்ப வரக்கூடாது என்று தலைவர்கள் வெளியிற் சொல்லிக் கொண்டு அப்படையை அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

இவர்கள் போர் செய்ய வருகிற நோக்கம் நபி பெருமா னார் (ஸல்) அவர்களுக்குத் தெரிந்தது. பொறுமைக்கும் எல்லையுண்டு. ஒரு பெரும் படை பூரண ஆயுத பலத்துடன் யுத்த சன்னத்தமாகி வரும்போது, தற்காப்புக்கு ஏற்பாடு செய்யாவிடில் நாசம் வரும் என்பதையுணர்ந்த பெருமானார் (ஸல்) அவர்கள் ஸஹாபிகளை அழைத்து, கலந்தாலோசனை செய்து பாதுகாப்புநடவடிக்கையை எடுத்துக்கொண்டார்கள். சுமார் 313 பேர்கள்தான் போருக்குத்தகுதியாக இருந்தனர்.

இவர்களிலும் சிலரைத் தவிர மற்றவர்களுக்கு பெருமானார் (ஸல்) அவர்கள் போருக்குச் செல்கிறார்களா அல்லது வேறு காரியமாகச் செல்கிறார்களா என்று திட்டமாகத் தெரியாது. ஆகவே, நபர்கள் எண்ணிக்கையில் எதிரிகளைப் பார்க்கினும் மூன்றில் ஒரு பாகத்துக்கும் குறைவு. ஆயுத பலத்திலும், இதர முஸ்தீப்புகளிலும் எதிரிகளின் முன்னிலையில் பூஜ்யம் என்றே சொல்லவேண்டும். இந்நிலையில் முஸ்லிம்களும் நகரைவிட்டு வெளியேறி சொற்ப தூரத்திலிருக்கப்பாலுள்ள பத்று என்ற ஸ்தலத்துக்கு வந்தார்கள். ஏற்கனவே, அங்கு திருமக்காவாசிகளது படைகள் தயாராக இருந்துகொண்டிருந்தன. இரு கட்சியினரும் பாளையம் இறங்கிப் போரைத் தொடங்குமுன் சண்டையைத் தவிர்க்க பகீரதப் பிரயத்தனம் முஸ்லிம்களால் செய்யப்பட்டது. என்றாலும், சன்மார்க்க விரோதிகளது தலைவர்கள் இதனைப் பொருட்படுத்தாமல் போர் செய்யத் துணிந்தனர். இரு கட்சியினரும் மூர்க்கமாகப் போரிட்டனர். இறுதியாக திருமதீனாவாசிகள் ஜெயித்தார்கள். மக்கத்துத் துன்மார்க்கர்கள் தோல்வியடைந்தனர். அவர்களிலுள்ள பெருந் தலைவர்களில் எழுபது பேர்கள் மாண்டனர். மற்றும் எழுபது பேர்கள் கைதியாயினர். மீதி உள்ளவர்கள் புறமுதுகுகாட்டி உயிர்தப்பியோடினர். இச் சண்டையில் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் தனியே அமர்ந்து தமக்கு வெற்றியளிக்கவேண்டுமென இறைவனிடம் துஆ கேட்டுக்கொண்டேயிருந்தனர்.

தரையிலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து பகைவர்களின் அணிவகுப்பை நோக்கி எறிந்தார்கள். இந்த மண் பகைவர்கள் ஒவ்வொருவர்மீதும் தைத்தது என்பதாகச் சரித்திரம் கூறுகிறது.

இச்சண்டையில் இறந்த பகைவர்களில் அபூஜஹ்ல் குறிப்பிடத்தக்கவன். அவன்தான் எதிரிப்படைக்கு பிரதம தளகர்த்தனுங்கூட. இவனைக் கொன்றுவிடவேண்டுமென இரு முஸ்லிம் இளைஞர்கள் முன்னதாகவே கூடிப்பேசி இதற்

கொன்றே சண்டையில் கலந்துகொண்டனர். இவனுக்கு ஊறு வராமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென பகைவர்கள் மிக ஜாக்கிரதையாகக் காத்துக்கொண்டிருந்தனர்.

மஆத், முஅவ்வித் என்ற இருவரும் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டு அவனைத் தாக்கினார்கள். அவ்விருவருள் முஅவ்வித் என்பவர் பகைவர்களால் ஷஹீதாக்கப்பட்டார். ஆனால் மஆத் என்பவர் அபூஜஹ்லை வெட்டி வீழ்த்தினார். அவனது கால் துண்டாகிவிட்டது. மஆது என்பவரை அபூஜஹ்லின் மகன் தாக்கினார். அத்தாக்குதலால் அவரது கை, தோள் புஜத்தினண்டையில் வெட்டுப்பட்டுத் தொங்கிக்கொண்டிருந்தது. இந்நிலையிலேயே அவர் மற்றைய எதிரிகளுடன் போர் செய்துகொண்டிருந்தார். தொங்குகிற கையால் போர் செய்ய இயலவில்லை என்பதை உத்தேசித்து அதனைக் காலால் மிதுத்துத் தன்னைவிட்டுத் துண்டாக்கித் தூர எறிந்துவிட்டுப் போர்செய்தார். இவர் ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் கலீபா பதவிக்கு வரும்வரை ஜீவித்துக்கொண்டிருந்தார்.



## மடியும் தருவாயிலும் மமதைகள்கொண்ட அபூஜஹ்ல்.

அடிபட்ட அபூஜஹ்ல் மற்ருெரு ஸஹாபியால் தாக்கப் பட்டு நடக்க, இருக்க இயலாமல் கீழே விழுந்துவிட்டான். யுத்தம் முடிந்தபின்னர் இறந்துகிடப்பவர்களை அடையாளம் பார்க்க நபி பெருமானுர் (ஸல்) அவர்களால் அப்துல்லா ஹிப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். அவர் அடையாளம் பார்த்துக்கொண்டு வருகையில் அபூ ஜஹ்ல் குற்றுயிராகக் கிடப்பதைப்பார்த்து அவனது மார் பின்மீது காலை வைத்து, அல்லாஹ்வின் விரோதியே! உன்னை அவன் கேவலப்படுத்திவிட்டான் என்று கூறினுர். இதனைக்கேட்ட அவன் இதில் என்ன கேவலம்? ஒரு மனிதனை அவன் இனத்தைச்சேர்ந்தவர்கள் வெட்டிப் போட்டனர். இவ்வளவுதான். இது கேவலமல்ல. ஆனுல் வெற்றி எந்தக் கட்சிக்கு கிடைத்தது என்பதை மட்டிலும் எனக்குச் சொல் என்றுன். "வெற்றி அல்லாஹ்வுக்கும் அவனது றஸூலுக்கும்தான் கிடைத்தது." என்று பதில ளித்தார். அப்பொழுதவன் "ஏ அற்ப இடையனே! நீ மிக உயரத்தில் நிற்கின்றனே" என்றுன். அதற்கவர், "நான் உன்னைக் கொல்வேன்" என்ருர். அதற்கவன், "எத்தனையோ அடிமைகள் தங்கள் எஜமானனைக் கொலை செய்திருக்கிருர் கள். ஆதலால், என்னை நீ கொலை செய்வதைப்பற்றிக் கவலை யில்லை. ஆனுல், உன்னைப்போன்ற அற்பன் என்னைக் கொல் பவனுகிவிட்டானே என்பதுதான் எனக்கு இப்பொழுதுள்ள பெரிய வருத்தம். என்னைக் கொலைசெய்பவன் உயர் குடும்பத் தைச் சேர்ந்த குறைஷியனுக இருப்பானென்றெண்ணிக் கொண்டிருந்தேன்" என்றுன். பின்னர் அவனை வெட்டுவ தற்கு அவர் அவனது நெஞ்சின்மீது ஏறி உட்கார்ந்து கழுத்தி னண்டையில் கத்தியைக் கொண்டுபோனபோது அவன் "என்னைக்கொல்வதுதான் கொல்கிருய். ஆனுல், என் தலை டயுள் என் கழுத்தையும் நீளமாக இருக்குமாறு விட்டு வெட்டு; எல்லோருடைய தலையையும் கொண்டுபோய்

வைக்கும்போது என் தலை மற்றைய தலைகளைப்பார்க்கினும் சற்று உயரமாக இருக்கட்டும்" என்றான். அப்புறம் இவன் தலை கொய்யப்பட்டு நபி பெருமானார் (ஸல்) அவர்கள் முன் கொண்டுபோகப்பட்டது. இச்சம்பாஷணையின் விபரமும் தெரிவிக்கப்பட்டது. இவன் மடிந்ததைக்குறித்து நாயகம் (ஸல்) அவர்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தி இரண்டு ரக் அத்துகளைத் தொழுதார்கள்.

## ஒவ்வொரு நபிக்கும் ஒரு பிர்ஔன்.

இவனைக்குறித்து ஒரு சந்தர்ப்பத்தில் நாயகம் (ஸல்) அவர்கள் "ஒவ்வொரு நபிக்கும் ஒரு 'பிர்ஔன்' உண்டு. எனக்கு வாய்த்த 'பிர்ஔன்' சாகும்போதுகூட தற்பெருமையை விடவில்லை" என்று கூறித் தனது சிரசு மற்றைய சிரசுகளைப் பார்க்கினும் சற்று உயரமாக இருக்கட்டும் என்று அவன் கூறியதை ஞாபகமூட்டினார்கள். திருமதீனாவை விட்டு நபி பெருமானார் (ஸல்) அவர்கள் புறப்பட்டுவந்து, போருக்கு தகுதியானவர்களைப் பொறுக்கி எடுத்துவிட்டு அவர்களிடம் போரைக்குறித்து யோசனை கேட்டார்கள். ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) உமர்பாறூக் (ரலி) ஆகியவர்கள் நாயகம் (ஸல்) அவர்கள் இவர்களது ஆதரவைத் தெரிந்துகொள்வதற்காக ஆலோசனை செய்யவில்லை. மற்றவர்களது கருத்து எப்படி இருக்கிறது என்பதுதான் முக்கிய எண்ணம். இதனையுணர்ந்த மிக்தாதுப்னுஅம்று (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் றஸூலே தங்களுக்கு இறைவனனுப்பிய கட்டளையை நிறைவேற்றுங்கள். நாங்கள் தங்களுடன் இருப்போம். ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களிடம் "நீரும் உமது றப்பும் சென்று சண்டை போடுங்கள். நாங்கள் இங்கு உட்கார்ந்திருக்கிறோம்." என்று பனூ இஸ்ருயீல்கள் கூறியதுபோல் நாங்கள் சொல்லமாட்டோம். தாங்கள் சண்டைக்குச் சென்றால் நாங்களும் உங்களுடன் சேர்ந்துவந்து பகைவர்களை எதிர்த்துச் சண்டை செய்வோம். தங்களை நபியாக அனுப்பிய

அப் பரிசுத்த இறைவன்மீது ஆணையிட்டுக் கூறுகிறோம். அபிசீனிய நாட்டுக்கு எங்களை சண்டை செய்ய அனுப்பினாலும் நாங்கள் மனங்கோணாமல் அங்கும் தங்களுடன் சென்று பகைவர்களை எதிர்த்துப் போர் செய்வோம்" என்றார்.

இதனைக்கேட்ட நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அவருடைய விசுவாசத்தை மெச்சி இறைவனிடம் துஆக் கேட்டார்கள். ஆயினும் மறுபடியும் ஆலோசனை கேட்டார்கள். இவ்வளவு கூறியும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் மறுபடியும் வினவுவதைப்பார்த்த அன்ஸார்கள் தங்களுடைய கருத்தை உணர்ந்துகொள்ளத்தான் கேட்கிறார்கள் என்பதைத் தெரிந்து "தாங்கள் எங்களிடத்திலா ஆலோசனை கேட்கிறீர்கள்?" என்று அன்ஸார்களது தலைவர் ஹஜ்ரத் ஸஅதுப்னுமஆத் (ரலி) அவர்கள் வினவினார்கள். அதற்கு நபி நாயகம் (ஸல்) அவர்கள் "ஆம்" என்றார்கள். உடனே அவர்கள் "நாங்கள் தங்களை விசுவாசம் கொண்டுள்ளோம். தங்களுக்கு உதவி செய்வதாக நாங்கள் வாக்களித்துள்ளோம். அல்லாஹ்வின் றஸூலே! தங்களுக்கு அவன் கட்டளையிட்டதை நிறைவேற்றுங்கள். தாங்கள் சமுத்திரத்தில் குதிக்கச்சொன்னாலும் நாங்கள் குதித்துவிடுவோம். எங்களை அழைத்துக்கொண்டு தாங்கள் நாளையதினம் சண்டை செய்யலாம். இதற்காக நாங்கள் அதிருப்தி அடையமாட்டோம். நாங்கள் போர்க்குணம் படைத்த வர்க்கத்தினர்தான். யுத்த கஷ்டங்களை சகித்துப் பழக்கமுடையவர்கள்தான். தங்கள் கண்குளிரும் காரியத்தை எங்களிடமிருந்து வாங்கிக் கொள்ளுங்கள். இறைவன் கிருபையால் எங்களை அழைத்துக்கொண்டு செல்லுங்கள்" என்றார்கள்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் திரு மக்காவில் வசித்துக்கொண்டிருந்தபொழுது அவர்களிடம் இஸ்லாம் மதத்தைத் தழுவிய திரு மதீனாவாசிகள், நபி பெருமானார் (ஸல்) அவர்களையும், முஸ்லிம்களையும் திருமதீனாவுக்குக் குடியேற அழைத்தபோது மதீனாவாசிகளுக்கும் நபிகள் பெருமா

னூர் (ஸல்) அவர்களுக்கும் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. அவ்வொப்பந்தப்படி திரு மதீனாவின்மீது படையெடுத்து வந்தால் உதவி செய்யவேண்டியதவசியமாக இருந்தது. இப்பொழுது திருமதீனாவுக்கு வெளியில் சென்று யுத்தம் செய்யவேண்டியதிருப்பதால் அன்ஸார்கள் இதற்கு இணங்குவார்களா? என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டியதிருந்தது. இதனைக் குறித்துத்தான் ஹஜ்ரத் ஸஅதுப்னுமஆத் (ரலி) அவர்கள் மேற்கண்டவாறு உறுதிமொழியளித்தார்கள்.

இச்சண்டையில் முஸ்லிம்களால் கைது செய்யப்பட்டவர்களில் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களது சிறிய தந்தையான ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி) நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களது ஜேஷ்ட புதல்வியான செய்யித்தினா ஜைனபு (ரலி) அவர்களது கணவர் ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களது மூத்த சகோதரரான உகைல், நாயகம் (ஸல்) அவர்களது மற்றொரு சிறிய தந்தையான ஹாரீது என்பவரின் புதல்வர் நௌபல் ஆகியவர்களுமிருந்தனர். இவர்கள் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள்பால் அன்பும், அபிமானமும், நெருங்கிய பந்தத்துவமும் உள்ளவர்களாயினும் தாங்கள் முஸ்லிம்கள் தான் என்பதை பகிரங்கமாக வெளிப்படுத்தவுமில்லை; திரு மக்காவை ஹிஜ்றத்துச்செய்து திருமதீனாவுக்குச் செல்லவுமில்லை. ஆகையால் சமூகக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின்படி இச்சண்டையில் அவர்களும் சேர்ந்து வரவேண்டியதாகவும், போர் செய்யவேண்டியதாகவுமிருந்தது. இவர்கள் நபிநாயகம் (ஸல்) அவர்களது பந்துக்கள் என்பதற்காகப் பாரபக்ஷம் காட்டப்படாமல் மற்றைய கைதிகள் நடத்தப்பட்டது போலவே இவர்களும் நடத்தப்பட்டனர்.



## கைதிகளிடம் நடந்துகொண்ட முறை.

கைதிகளை அக்காலத்தில் கொன்றுவிடுவதுதான் அந் நாட்டில் பெரும்பாலான வழக்கம். கொல்லாவிட்டால் அடிமைகளாக்கிவிடுவார்கள். நாயகம் (ஸல்) அவர்கள் இவ் விரு வழக்கத்தையும் கைவிட்டார்கள். பத்றில் சண்டை போட்டவர்கள் என்ற முறையில் இவர்கள் யாவரும் யுத்தக் கைதிகள். எனினும் இவர்களை விடுதலை செய்கிறோம். ஆனால் இச்சண்டையில் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட உயிர், பொருள் நஷ்டங்களுக்கு இவர்கள் நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்றும், பொருளை நஷ்டஈடாகக் கொடுக்க இயலாதவர்கள் பத்து முஸ்லிம்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்கவேண்டும் என்றும் திட்டம் செய்தார்கள்.

இத்திட்டப்படி எல்லாக்கைதிகளும் இரண்டில் ஒரு வகையான நஷ்டஈட்டைக் கொடுத்து விடுதலையடைந்தனர். ஆனால் தனிப்பட்ட முறையில் மரண தண்டனைக்குரிய கடுமையான குற்றம் செய்த இரண்டொருவர், இரண்டாம் தடவையாகக் கைது செய்யப்பட்டு மரண தண்டனையை அடைந்தனர். பெருமானார் (ஸல்) அவர்களது மேற்கண்ட பந்துக்கள்கூட இந்த நஷ்டஈடு கொடுப்பதில் விதிவிலக்குச் செய்யப்படவில்லை. என்றாலும் நாயகம் (ஸல்) அவர்களின் புதல்வியை மணந்தவர் தாம் கொடுக்கவேண்டிய நஷ்டஈட்டுக்காக திருமக்காவில் அப்பொழுது இருந்துகொண்டிருந்த நாயகம் (ஸல்) அவர்களது புதல்வியான செய்யித்தினா ஜைனப் (ரலி) அவர்களுக்குச்சொல்லியனுப்பி அவர் அணிந்திருந்த ஒரு ஆபரணத்தைத் தருவித்து நஷ்டஈடு கொடுத்தார். பின்பு இவ்வாபரணம் உம்முல் முஃமினீன் ஹஜ்ரத் கதீஜா (ரலி) அவர்களால் தங்களது புதல்விக்களிக்கப்பட்டது என்பதை உணர்ந்த ஸஹாபிகள் அவ்வாபரணத்தை அவ்வம்மைக்கு வெகுமதியாக அளித்து, அவரிடத்தில் திரும்பக் கொடுத்துவிட்டார்கள்.

ஸஹாபிகள் இப்படிப் பெருந்தன்மையாக நடந்து கொண்டதற்குப்பதிலாக அவர் தாம் திருமக்கா சென்றதும் தமது மனைவியும் நபிநாயகம் (ஸல்) அவர்களது புதல்வியு மான செய்யித்திஜைனபு (ரலி) அவர்களைத் திருமதீனு வுக்கு அனுப்பிவைப்பதாக கூறிச்சென்று, தமது வாக்குறுதிப் படி அனுப்பிவைத்தார். இவ்வம்மையார் முன்னரே பகிரங்க மாக இஸ்லாத்தைத் தழுவியவர். ஹிஜ்ரத்துச் செய்ய விரும் பினர். என்றாலும் மக்காவாசிகள் பலவந்தமாக அம்மம்மை யைத் தடுத்து நிறுத்திவிட்டனர். இதற்குச் சில காலத்துக் குப்பின்னர் இவ்வம்மையின் கணவரும் இஸ்லாத்தை பகி ரங்கமாகத் தழுவித் திருமக்காவை ஹிஜ்ரத்துச்செய்து மதீனு வில் குடியேறிவிட்டார்.

இங்கு முஸ்லிம்களால் கொல்லப்பட்ட அபூஜஹ்ல் போன்ற எதிர்க்கட்சியினர் யாவருடைய சவங்களும் ஒரு கிணற்றினுள் போடப்பட்டு மறைக்கப்பட்டன. உமய்யத் துப்னுகலப் என்பவரின் சவத்தை உருக்குச்சட்டையைவிட்டு வெளிப்படுத்தியபோது அவனது சடலம் சேதமில்லாமல் வெளிப்படுத்தப்படவில்லை. ஆதலால் நொறுங்கிய அச் சவத்தை மட்டிலும் தனியாகப் புதைத்தனர். ஆகவே எதிரி களது சவங்களை அப்படியே விட்டு அழுகி நாற்றமெடுக்க விடாமல் அவைகளையுங்கூட நபி பெருமானுர் (ஸல்) அவர் கள் புதைத்துவிட்டார்கள்.

இச்சண்டையில் தந்தை, தனயன், அண்ணன், தம்பி, மாமன், மைத்துனன் என்ற பந்துத்துவ உணர்ச்சி கொஞ்சங் கூட இல்லாமல் முஸ்லிம்கள் காபிர்கள் என்ற கொள்கை உணர்ச்சி மட்டுத்தானிருந்தது. அவ்வுணர்ச்சியின்படியே சண்டையும், சண்டைக்குப்பின்னர் நிகழ்ந்த காரியங்களும் நடைபெற்றன.

## நபி பெருமானாரின் யுத்தங்களிலிருந்து உலகம் கற்க வேண்டியவை.

நபி நாயகம் (ஸல்) அவர்கள்பால் ஸஹாபிகள் எவ்வளவு பக்தியுடன் இருந்தனர்? சன்மார்க்கத்துக்காகத் தங்களை எவ்வாறு அர்ப்பணம் செய்தார்கள்? யுத்தக் கைதிகளை எவ்வாறு நடத்தவேண்டும்? என்ற யுத்த தர்மம் போன்ற பல விஷயங்கள் இதில் கற்றுக்கொள்ளப்படுகின்றன.

ஹுனைன் சண்டையில் நபி நாயகம் (ஸல்) அவர்களது வீரம், துணிகரம், ஸஹாபிகளது கீழ்ப்படியுந்தன்மை முதலியன வெளியாவதுடன் அங்கு கிடைத்த கொள்ளை முதல்களை நபி நாயகம் (ஸல்) அவர்கள் திருமக்காவிலிருந்து வந்து சண்டையில் கலந்துகொண்ட நௌ முஸ்லிம்களுக்குக் கொடுத்துவிட்டு, வெகு சொற்பமான முதல்களை மட்டிலும் ஸஹாபிகள் ஏற்றுக்கொண்டது குறிப்பிடத்தக்கதாகும். "இவ்வுலக செல்வத்தின்பால் பற்றுள்ளவர்கள் கொள்ளை முதலைக் கொண்டுபோகவும், சன்மார்க்கத்தின்பால் பற்றுள்ள நாங்கள் நபி நாயகம் (ஸல்) அவர்களை எங்களுடன் (திருமதீனாவுக்கு) அழைத்துச் செல்லவும் பிரியப்படுகிறோம்" என்று அன்ஸார்கள் கூறினார்கள். இவைகளேயல்லாமல் இச்சண்டையில் கைதியானவர்களில் நபி நாயகம் (ஸல்) அவர்களது செவிலித் தாயான ஹஜரத் ஹலீமா ஸஅதியாவின் புதல்வியுமிருந்தனள். இவர் கைதி என்ற முறையில் நபி நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து அத்தப் பால்குடி கால நினைவுகளைக் கூறித் தம்மை நபி நாயகம் (ஸல்) அவர்களது பால்குடிச் சகோதரி எனத் தெரிவித்துக்கொண்டனள். பிறகு இவளும் இவளது சிபார்சின்பேரில், கைதியாக இருந்த ஏனைய ஸ்திரீகளும் விடுதலை செய்யப்பட்டனர். இவைகளின் மூலம் இக்காலத்து யுத்த தர்மத்துக்கான அநேக விதிகள் இச்சண்டையிலிருந்து உணரப்படுகின்றன. மேலும் ஜனக் கூட்டமும், ஆயுதப்பெருக்கமும் வெற்றியளியா; துணிகரமும்,

போர் திறனும் தெய்வ சகாயமுமே வெற்றியளிக்கும் என்பது இங்கு பிரத்தியட்சமாக வெளியாகிறது.

[ஸீரத். புகாரீ. முஸ்லிம்.]

## உஹது யுத்தம்.

பத்றுச் சண்டையில் திரு மக்காவாசிகள் தோல்வி அடைந்ததுதான் இச்சண்டைக்கு அடிப்படை. அச்சண்டையில் கொல்லப்பட்டவர்களது பந்துமித்திரர்கள் தங்களுக்கு ஏற்பட்ட இந்நஷ்டத்துக்குப் பழிவாங்கவேண்டுமென உறுதி கொண்டனர். உயிர்ச்சேதத்தைத்தவிர்த்து பொருட்சேதம் எல்லோருக்கும் பொதுவாகவே ஏற்பட்டது. கருங்கக் கூறுமிடத்து பத்றில் கொல்லப்பட்ட மக்காவாசிகள் பொதுவாகவே திரு மக்காவிலுள்ள யாவருக்கும் பந்துக்களாகவும் தலைவர்களாகவுமிருந்தனர். ஆகையால் இவ்வெண்ணம் எல்லோருக்கும் பொதுவாகவே இருந்தது. இந்நிலையில் வர்த்தகக் கோஷ்டிக்குச் சென்ற அபூஸுப்யானிடம் அவர்களுக்கு நெருங்கிய பந்தத்துவமுள்ளவர்கள் சென்று வர்த்தகத் தாவளத்துக்குச் சென்றதில் கிடைத்த லாபத்தை இனி வரும் சண்டைக்கு ஒதுக்கி வைத்துக்கொண்டு அசல் முதலை மட்டிலும் திரும்ப அவர்களிடம் கொடுத்தால் போதும்; எவ்விதத்திலாவது இப்பழியை வாங்கவேண்டும் என்றனர். இவ்வாலோசனையை மற்றவர்களும் அங்கீகரித்தனர். இப்பொருள்களை வைத்துக்கொண்டு அபூஸுப்யான் படை திரட்டினார். முன்னர் ஆயிரம் பேர் சென்றனர் என்றால் இப்பொழுது அதனைப்பார்க்கினும் மும்மடங்குக்கும் அதிகமாக இருந்தனர். திருமக்காவுக்கு வெளியிலுங்கூட குறைஷியர் ஆட்களை அனுப்பி அங்குள்ளவர்களையும் ராணுவத்தில் சேர்த்துக்கொண்டனர்.

ஜுபைறுப்னுல் முத்இம் என்பவர் தனது அடிமை வஹ்ஷியை அழைத்து, "பத்றில் எனது சிறிய தந்தையான

துஐமத்துப்னுஅதி கொல்லப்பட்டதற்குப்பதிலாக ஹம்ஜா வைக் கொன்று பழிவாங்கினல் உன்னை அடிமைத்தளையி லிருந்து விடுதலை செய்துவிடுகிறேன்" என்று வாக்களித்தார். இந்தத் தடவையில் குறைஷியரின் ஸ்திரீகளும்கூட வந்து கையில் 'தப்பு'களை ஏந்திக்கொண்டு பத்றில் கொல்லப்பட் டவர்களின் பெயர்களைக்கூறி சோகப் பாடல்களைப் பாடி 'தப்'படித்துப் போர்வீரர்களுக்கு ரோஷத்தையும், வஞ்சத் தையும் உண்டாக்கினர். இவ்வண்ணம் ஹிஜ்ரி 3-ம் வரு ஷத்தில் திரு மக்காவாசிகள் மறுபடியும் படையெடுத்து வந்தனர்.

இவர்களது வருகையையுணர்ந்த நபி பெருமானர் (ஸல்) அவர்கள் ஸஹாபிகளை ஒன்றுகூட்டி படையெடுத்து வருகிற எதிரிகளைத் தடுப்பதற்கான உபாயம் யாதென ஆலோசனை செய்தார்கள். திரு மதீனவிற்குள் விரோதிகள் பிரவேசிக் கட்டும்; அதன்பின் அவர்களை எதிர்க்கலாம் என்பது நபி பெருமானர் (ஸல்) அவர்களது கருத்து. எனினும் சில ஸஹா பிகள் நகருக்குள் பிரவேசிக்கும்வரை நாம் சும்மாயிருக்கலா காது. நகரைவிட்டு வெளியேறி வெகுதூரம்வரை செல்லா விடினும் நகரத்தின் முற்ற வெளியிலாவது பகைவர்களைத் தடுத்துவிடவேண்டும் எனக்கூறினர்கள். நபி நாயகம் (ஸல்) அவர்கள் இக்கருத்தை ஆதரிக்காவிடினும் ஸஹாபிகளது உற்சாகத்தைத் தடுக்கக்கூடாது என்ற எண்ணத்தால் அவர்கள் இஷ்டப்படியே செய்யலாம் எனத் தீர்மானித்து படையைத் திரட்டி நகருக்கு எதிரிலுள்ள உஹது மலையின் அடிவாரத்திலுள்ள சமவெளியில் பாளையமிறங்கினர்கள். இது திரு மதீனவிலிருந்து ஏறக்குறைய இரண்டு மைல் தூரத்திலிருக்கிறது. முஸ்லிம்களிடம் இச்சமயத்தில் எழுநூறு காலாட்படை வீரர்களும், இருநூறு குதிரைப்படை வீரர்களு மிருந்தனர். ஆயுதங்கள் பூரணமாக போதிய அளவு இல்லா விடினும், ஓரளவு இருந்தன. முன்னர் பத்றில் சண்டை போடுவதற்கு முன்பிருந்த பீதி நிலை இப்பொழுது அவர்

களில் இல்லை. ஒருமுறை அவர்களை ஜெயித்து அவர்களது பலத்தைத் தெரிந்துகொண்டதால் எதிரிகளை அற்பமாக மதித்திருந்தனர். தங்களுக்குத்தான் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடனுமிருந்தனர்.

நபி நாயகம் (ஸல்) அவர்கள் தங்களது படைகளை அழைத்துவந்து அம்மலையினடிவாரத்தில் அணிவகுத்து நிறுத்தியதுடன் அம்மலையின் இரு குன்றுகளுக்கு இடையிலுள்ள கணவாயில் சில வீரர்களை நிறுத்தி, "அவ்வழியாகப் பகைவர்கள் வராமல் பார்த்துக்கொள்வதும், அப்பாதையைக் காவல் புரிவதும்தான் உங்கள் வேலை. போர்க்களத்தில் எவருக்கு வெற்றி கிடைக்கிறது, என்ன நிகழ்கிறது என்பதைக் கவனியாமல் உங்கள் கடமையை நீங்கள் செய்யவேண்டும்" என்று தாக்கீது செய்திருந்தார்கள்.



## முஸ்லிம்கள் செய்த சிறு தவறு.

இரு கட்சியினரும் அணிவகுத்தனர். போராட்டம் தொடங்கிற்று. முன்னர் முஸ்லிம்கள் கருதியதுபோன்றே போர்க்களத்தில் முஸ்லிம்களது தாக்குதல்களைத் தாங்க மாட்டாமல் எதிரிகள் புறங்காட்டி ஓடினார்கள். தங்களுடன் கொண்டுவந்திருந்த ஏராளமான சாமான்களையும் போட்டு விட்டு ஓடினார்கள். போர் முடிந்தது. போரில் ஈடுபட்ட ஸஹாபிகள் பகைவர்கள் விட்டுச்சென்ற பொருள்களைப் பொறுக்கி எடுப்பதில் ஈடுபட்டனர். இதனைப்பார்த்த காவல் காரர்கள், அதாவது, மலைக்குன்றுகளுக்கிடையில் நிறுத்தி வைக்கப்பட்ட காவற் படையினர் அப் பொருள்களைப் பொறுக்கி எடுக்க முனைந்தனர். தங்களது இருப்பிடங்களைக் காலி செய்தனர். அங்கிருந்த சிலர் இதனை ஆக்ஷேபனை செய்து இருந்த இடத்தை விட்டகலக்கூடாது என்று கூறி னார்கள். அதற்கு மற்றவர்கள், போராட்டத்தின்போது; இருந்தது சரிதான் இப்பொழுது போராட்டம் முடிந்துவிட் டது என்று கூறி அந்த இடத்தைக் காலி செய்துவிட்டனர். சிலர் மட்டிலும் அங்கு நின்றனர்.

இந்நிலையில் எதிரிகளின் குதிரைப்படைத் தலைவரான காலிதுப்னுல் வலீத் கணவாயிலிருந்து காவற்படை ஒதுங்கி விட்டதைப் பார்த்து அவ்வழியில் பிரவேசித்தார். அங்கு காவலுக்கு இருந்தவர்களில் பெரும்பாலோர் அந்த ஸ்தலத் தைவிட்டு அகன்று, ஒரு சிலர் மட்டிலுமிருந்ததால், அச் சிலரை அவ்விடத்திலேயே மடியச்செய்துவிட்டு தம் குதிரைப் படையுடன் அதனுள் பிரவேசித்து, பகைவர்கள் விட்டுச் சென்ற பொருள்களை எடுப்பதில் முனைந்திருந்த முஸ்லிம் வீரர்களைப் பின்புறமாகத் தாக்கினார். அவர்கள் தங்கள் ஆயு தங்களை வைத்துவிட்டு அவைகளை எடுப்பதில் ஈடுபட்டிருந் ததால் பின்புறத்திலிருந்து திடீரெனத் தாக்கிய பகைவர்களை எதிர்க்கமுடியவில்லை. சின்னாபின்னமாகச் சிதறிவிட்டனர்.

அணிவகுப்பு குலேந்தது. தங்களது மனிதர் எவர்? பகைவர் எவர்? என்ற பாகுபாடு செய்யமுடியவில்லே. இத்நிலேயில் எதிர்புறத்திலிருந்த பகைவர்களும் திரும்ப வந்தனர். முஸ் லிம்கள் சூழ்ந்துகொள்ளப்பட்டனர். ஆகவே, அநேக முஸ் லிம்கள் தங்கள் உயிரைக்காக்க புறமுதுகு காட்டவேண்டிய தாயிற்று. இதற்குள்ளாக நபிகள் பெருமானூர் (ஸல்) அவர் கள் பகைவர்களால் கொல்லப்பட்டார்கள் என்ற வதந்தியும் கிளம்பிற்று. இதனே உண்மையா அல்லவா எனத் தெரிந்து கொள்ள ஸஹாபிகளுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லே. ஆதலால் ஒவ்வொருவரும் அவரவர் சொந்த கருத்துப்படி நடக்கத்தொடங்கினர். நாயகம் (ஸல்) அவர்கள் மாண்டபின் சண்டைபோட்டுப் பயன் என்னவென்ற கருத்தில் சிலர் தங்கள் ஆயுதங்களே எறிந்துவிட்டு திரு மதீனுவை நோக்கிச் சென்றனர்.

பெருமானூர் (ஸல்) அவர்களுக்குப்பிறகு நாம் உயிருட னிருந்து என்ன செய்யப்போகிரேம் என்று கிலர் வீராவேசத் துடன் பகைவர்களுட்புகுந்து எதிரிகளேப் பலமாகத் தாக்கி னூர்கள். இவ்வாறு ஒருபக்கம் நிகழ்ந்துகொண்டிருக்க, மறு பக்கம் நாயகம் (ஸல்) அவர்களேத் தேடிப்பார்த்துப் பகைவர் கள் அம்பெய்ததில் மலேக்குன்றுச் சரிவில் ஒரு பள்ளத்தி னுள் நாயகம் (ஸல்) அவர்கள் விழுந்துவிட்டார்கள். பின் எழுந்து மலேயின்மீது ஏறிக்கொண்டார்கள். பகைவர்கள் நபி நாயகம் (ஸல்) அவர்களே நோக்கிக் கூட்டமாகப் முன் னேறுவதைப் பார்த்த சில ஸஹாபிகள், அவர்கள்மீது அம்பு படாதிருப்பதற்காகச் சுற்றி வளேத்துகொண்டு பகைவர் களால் பொழியப்படும் அம்புகளேத் தங்கள் கரங்களிலும், உடல்களிலும் தைக்கும்படிச் செய்து அவைகளேத் தடுத்துக் கொண்டிருந்தனர். இப்படியெல்லாம் செய்துங்கூட நபி நாயகம் (ஸல்) அவர்களது நெற்றியிலும் காயமேற்பட்டது. இரண்டு பற்களும் ஷஹீதாகிவிட்டன.

இந்நிலையில் எதிரிகளது பிரதம தளகர்த்தரான அபூ ஸுப்யான் ஸஹாபிகளை நோக்கி உங்களுள் முகம்மது இருக்கிறாரா? என்று வினவினர். நபி நாயகம் (ஸல்) அவர்கள் பதிலளிக்க வேண்டாமெனத் தடுத்துவிட்டதால் அவர்கள் பதிலளிக்கவில்லை. மும்முறை அவ்வினவைக் கடாவியபிறகு உங்களில் அபூபக்கர் இருக்கிறாரா? என்று மூன்றுமுறை வினவினர். இதற்கும் பதில் அளிக்கப்படவில்லை. பின்னர் உங்களில் உமர் இருக்கிறாரா? என்று வினவினர். இதற்கும் பதில் அளிக்கவில்லை. இதற்குப்பிறகு அவர் தமது வீரர்களை நோக்கி இவர்கள் எல்லோரும் கொல்லப்பட்டனர் என்றார்.

இதனைக் கேட்டவுடன் ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் பொறுமையிழந்தவராய் அபூஸுப்யானை நோக்கி, "நாங்களெல்லோரும் க்ஷேமமாக இருக்கிறோம். நீ இழிவுபடுவதற்கான காரியத்தை அல்லாஹுத்தஆலா சித்தஞ் செய்துள்ளான்" என்றார். இருவரும் விரோதத் தொனியில் பேசிக்கொண்டனர். இறுதியாக, அவர் இனி அடுத்த வருஷத்தில் உங்களுக்கும் எங்களுக்கும் பத்றில் மறுபடியும் சண்டை நடக்கும் என்று கூறிவிட்டுச் சென்றார்.

பின்னர் நபி நாயகம் (ஸல்) அவர்களும், ஸஹாபிகளும் போர்க்களத்துக்கு வந்து பகைவர்களால் கொல்லப்பட்ட ஸஹாபிகளை எடுத்து நல்லடக்கம் செய்வதில் ஈடுபட்டனர். எழுபதுபேர் இச்சண்டையில் ஷஹீதானார்கள். எழுபதுபேர் காயமடைந்தனர்.

ஸஹாபிகளில் பகைவர்களால் கொல்லப்பட்டவர்களை அடையாளம் பார்க்க நபி நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு ஸஹாபியை அனுப்பினார்கள். அவர் அடையாளம் பார்த்துக் கொண்டு வருகையில் காயமடைந்து ஆவி துறக்கும் தருவாயில் கிடக்கிற ஹஜ்ரத் ஸஅதுப்னுர்ரபீஉ (ரலி) என்பவரைக் கண்டார். அவர் இந்த ஸஹாபியை நோக்கி "என் சலாமை நபி நாயகம் (ஸல்) அவர்களுக்குச் சொல்லவேண்டும். இதா

நபிமார்களுக்கு அவர்களது உம்மத்துகள் சார்பாக அளிக்கப் படுகிற நன்மையைப்பார்க்கினும் சிறந்ததான நன்மைப் பயனை இறைவன் அவருக்களிப்பானாக" என்று நான் பிரார்த் திப்பதாகத் தெரிவிப்பதுடன் என் சமூகத்தாருக்கும் என் சலாமைச் சொல்லவேண்டும். அத்துடன் அவர்களிடம் "உங்களது ஜீவிய காலத்தில் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஏதேனும் கஷ்டம் ஏற்படுமாயின், அது சம்பந் தமாக இறைவனிடத்தில் உங்களது புகல் கூறுகை எதுவும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது என்பதை என் சார்பாகத் தெரிவிக்கவேண்டும்" என்று கூறிவிட்டு ஆவி துறந்தார்.

## ஹம்ஜா (ரலி) ஷஹீதாக்கப்பட்டதும், அக்காலப் பெண்மணியின் சபதமும்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களது சிறிய தந்தை யான ஹம்ஜா (ரலி) அவர்களைக் கொலை செய்ய வஹ்ஷீ என்பவரைத் திட்டஞ் செய்திருந்த விபரம் மேலே கூறப்பட் டிருக்கிறது. இவர் விஷமூட்டப்பட்ட அம்பால் ஹம்ஜா (ரலி) அவர்களை ஒளிந்திருந்து தூரத்தில் வரும்போதே எய்து வீழ்த்திவிட்டார். இவ் விஷத்தினால் அந்த இடத்திலேயே மரணமடைந்தார்கள். அதுமட்டுமின்றி, அவர்கள் மரித்ததை செவியேற்ற அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்தா என்பவள், பிரேதத்தின் நெஞ்சைப் பிளந்து, ஈரலை எடுத்து தன்வாயில் போட்டு மென்று தன் சபதம் நிறைவேறிவிட்டதெனத் திருப்தியடைந்தனளாம். அம்மட்டுடனில்லாமல் அவரது அங்கங்கள் ஒவ்வொன்றும் துண்டுதுண்டாக வெட்டப்பட் டன. ஹஜ்ரத் அப்துல் முத்தலிபின் புதல்வியும், பெருமானார் (ஸல்) அவர்களது மாமியுமான ஸபிய்யா (ரலி) அவர்கள், கொல்லப்பட்ட தன் சகோதரரது உடலைப் பார்க்க விரும்பிய போது, அவர் அதனைப் பார்க்கவேண்டாமென்று சொல்லு மாறு அவ்வம்மையின் புதல்வரான ஜுபைர் (ரலி) அவர்க ளுக்கு பெருமானார் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

தன் சகோதரரது அங்கங்கள் இவ்வாறு வெட்டப்பட்டு, சித்திரவதை செய்யப்பட்டு கிடப்பதைப்பார்த்து அவ்வம்மை கதறி அழுதிடுவாரோ என்பதுதான் பெருமானார் (ஸல்) அவர்கள் தடுத்ததின் நோக்கம்.

நபி நாயகம் (ஸல்) அவர்களது இவ்வுத்தரவு அவ்வம்மையின் புதல்வர்மூலம் அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது அவர் "என் சகோதரரது அங்கங்கள் துண்டிக்கப்பட்ட விபரம் எனக்கு முன்னமேயே தெரியும், இது சன்மார்க்கத்துக்குச் சேவை செய்கையில் நிகழ்ந்ததால் இதற்காக இறைவனிடம் நற்கூலி கிடைக்கவேண்டுமென நான் கோருவேன். இச்செய்கைக்காக நான் வருந்தேன். எனது துக்கத்தை அடக்கிக் கொள்வேன்" என்று பதிலளித்தார். இதற்குப்பிறகு அனுமதியளிக்கப்பட்டது. அவர் அங்கு வந்து தன் சகோதரரது உடலைப்பார்த்து துஆச் செய்துவிட்டுச் சென்றார்.

ஸஹாபிகள் ஹஜரத் யமான் (ரலி), தாபிதுப்னுகைஸ் (ரலி) ஆகிய இருவரும் வயோதிகர்கள். ஆதலால் அவர்களும், முஸ்லிம் ஸ்திரீகளைப் பாதுகாக்க நியமிக்கப்பட்டிருந்தனர். போர் நிகழ்ந்துகொண்டிருக்கையில் நபி நாயகம் (ஸல்) அவர்கள் வெட்டப்பட்டார்கள் என்ற வதந்தி எட்டியதைச் செவியேற்று, "இனி நாம் எதனை எதிர்பார்க்கப் போகிறோம்? நாம் சென்று போரிட்டு ஷஹீதாகுவோம்" என்று பேசி இருவரும் போர்க்களத்தினுள் சென்றுவிட்டனர். இவர்கள் இப்படி வந்தது முஸ்லிம் வீரர்களுக்குத் தெரியாது. ஆதலால் யமான் (ரலி) அவர்களை அடையாளம் தெரியாமல் முஸ்லிம் வீரர்களே கொன்றுவிட்டனர். தாபித்துப்னுகைஸ் (ரலி) என்பவரை விரோதிகள் கொன்றுவிட்டனர். இவ்வண்ணம் இருவரும் ஷஹீதாகிவிட்டனர்.

இவ்வாறு ஷஹீதான யாவரையும் நல்லடக்கம் செய்துவிட்டு பெருமானார் (ஸல்) அவர்களும், ஸஹாபிகளும் திரு

மதீனாவுக்குச் சென்றனர். வழியில் ஹம்னாபின்துஜஹ்ஷ் (ரலி) என்ற ஒரு முஸ்லிம் ஸ்திரீ இவர்களைச் சந்தித்தார். இவரது சகோதரர் அப்துல்லாஹ் (ரலி) ஷஹீதாகிவிட்ட செய்தி கூறப்பட்டது. இதனைக் கேட்டவுடன் "இன்னாலில் லாஹி" என்று கூறினாள். பின்பு இவரது தாய்மாமனாரான ஹஜ்ரத் ஹம்ஜா (ரலி) ஷஹீதான விபரம் கூறப்பட்டது. இதனைக் கேட்டதும், முன்போலவே, "இன்னாலில்லாஹி" என்று கூறினாள். பின்பு அவரது கணவர் ஷஹீதான விப ரம் கூறப்பட்டது. இதனைச் செவியேற்றவுடன், மனம் பதைத்து வருந்திக்கதறினாள். அப்பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள், ஸ்திரீக்கு அவளது கணவருடன் மிகவும் நெருங்கிய சம்பந்தமிருக்கிறது என்று கூறினார்கள்.

மற்றொரு ஸ்திரீக்கு அவளது தந்தை, தனயன், கண வன் ஆகிய மூவரும் ஷஹீதாகிவிட்ட விபரம் தெரிவிக்கப்பட் டது. அதற்கவள் "அதெல்லாம் இருக்கட்டும்; நாயகம் (ஸல்) அவர்கள் சௌக்கியமாக இருக்கிறார்களா? என் பதைச் சொல்லுங்கள்" என்றே வினவினாள். நபி நாயகம் (ஸல்) அவர்கள் சுகமாக இருக்கிறார்கள் என்பது தெரிவிக்கப் பட்டது. பின்பு நபி பெருமானார் (ஸல்) அவர்களைப் பார்ப் பதற்காக அவ்விடத்திலேயே நின்றுகொண்டிருந்து நேரில் பார்த்து "இனி எனக்கு எந்தக் கவலையுமில்லை" என்று கூறினாள்.

எதிரிகளது தலைவரான அபூஸுஃப்யானும் மற்றைய எதிரிகளும் திருமக்காவை நோக்கிச் செல்கையில் "சண்டை யில் நாம் காயமுமடைந்தோம்; நமது சிப்பாய்கள் கொல் லவும் பட்டனர்; இவ்வளவு நிகழ்ந்தும் நாம் காரியத்தைப் பூர்த்தி செய்யாமல் அரைகுறையாகத் திரும்பிவிட்டோம்'' என்று தங்களது திரும்புதலைப்பற்றிக் கவலையடைந்தனர். ஆகவே, மீண்டும் சென்று முஸ்லிம்களைப் பூண்டோடு ஒழித்துவிடவேண்டும் என எண்ணினார்கள்.

ஹம்ருஉல் அஸத்.

இச் செய்தி நபி நாயகம் (ஸல்) அவர்களுக்கும் எட்டிற்று. முஸ்லிம் வீரர்கள் திரு மதீனாவுக்கு வந்து சேர்ந்த மறுநாள்தான் இது தெரியவந்தது. இச்சண்டையால் முஸ்லிம்கள் கோழையாகி விடவுமில்லை; பலஹீனமடைந்து விடவுமில்லை என்ற விபரம் பகைவர்களுக்குத் தெரிந்துவிட வேண்டும் ஆதலால் எல்லோரும் சன்மார்க்க யுத்தத்துக்குப் புறப்படுங்கள். ஆனால் நேற்று நிகழ்ந்த உஹத் சண்டையில் கலந்துகொண்டவர்களுக்குத்தான் இவ்வழைப்பு. மற்றவர்கள் புறப்படவேண்டியதில்லை என்று தெரிவித்தனர். நபி நாயகம் (ஸல்) அவர்களது இவ்வுத்திரவு கிடைத்தவுடன், எல்லா சிப்பாய்களும் மறுபடியும் ஆயுதங்களை அணிந்து ஒன்று திரண்டனர். காயமடைந்தவர்களுங்கூட மறுபடியும் ஆயுதபாணிகளாயினர். இவர்களை அழைத்துக்கொண்டு நபிநாயகம் (ஸல்) அவர்கள் திருமதீனாவுக்கு மூன்று மன்ஜில் தூரத்திலுள்ள ஹம்ருஉல் அஸத் என்ற ஸ்தலம் சென்று பகைவர்களை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். எதிரிகளுக்கு இச்செய்தி தெரியவந்தது. பீதியடைந்து திரு மக்காவுக்கே சென்றுவிட்டனர் முன்னர் விரும்பியவண்ணம் மதீனாபுரிக்கு வரவில்லை. ஆகவே இச்சண்டையில் இரு கட்சியினரும் நன்கு காயமடைந்தனர்; உயிர்ச் சேதமுமடைந்தனர். எவருக்கும் தெளிவான வெற்றி கிடைத்ததாகச் சொல்லிக்கொள்வதற்கில்லை.



# பொருளடக்கம்



## முஸ்லிம்கள் ஏன் தோல்வியடைந்தனர்?

முதலாவதாக வெற்றியடைந்த முஸ்லிம்கள் தோல்வி முகத்தைப் பார்க்கவும், படுசேதமடையவும் நேர்ந்ததற்குக் காரணம் என்னவெனில், நபிபெருமானார் (ஸல்) அவர்களது கட்டளையைச் சிலர் நிறைவேற்றாமலிருந்ததுதான். மறு உத்தரவு வரும்வரை பொறுத்திருக்காமல் தங்கள் சுய அபிப்பிராயத்துக்கு இடங்கொடுத்து மலைக்கணவாயைக் காவல் புரியாமல் காலி செய்ததுதான். இதனால் முஸ்லிம்கள் சேதமடைந்தனர். ஆயினும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் பால் தங்களுக்குள்ள பக்தியின் காரணமாக சிலர் துணிகரத்துடன் எதிர்த்துப் போரிட்டு பகைவர்களைத் தடுத்து நிறுத்தினர். நபி நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஊறு வராமல் காக்க பலர், தங்கள் ஸ்தூலங்களை அம்புக்கு இலக்காக்கினர். காயமடைந்து சோர்வடைந்த முஸ்லிம்கள் நபிபெருமானார் (ஸல்) அவர்களது கட்டளை பிறந்தவுடன் மறுபடியும் போருக்குச் சென்றனர். இது அவர்களது பணிவைக் காண்பிக்கிறது.



நாம் கற்கவேண்டியவை.

ஸ்திரீகளுங்கூட நபி நாயகம் (ஸல்) அவர்கள்பால் தங்கள் தந்தை, சகோதரர், தனயன், கணவன் முதலிய யாவரையும் பார்க்கினும் அதிகமான அபிமானங் கொண்டிருந்தார்கள் என்பதற்கான சம்பவங்கள் இச்சண்டையில் நிகழ்ந்தன. இதுவுமல்லாமல் நபிகள் பெருமானுர் (ஸல்) அவர்கள் திரு மதீனுவிலிருந்தே இச்சண்டையை நிகழ்த்த வேண்டுமென்றெண்ணினர்கள். ஆயினும் சில ஸஹாபிகளது வற்புறுத்தலுக்காகவே உஹது என்ற ஸ்தலம் வரைச் செல்ல நேர்ந்தது. இங்கு ஷஹீதானவர்கள் யாவரும் வெளியேறிச் சென்று போர் செய்யவேண்டுமென அபிப்பிராயங் கூறியவர்களேயாவர். ஆகவே ஸஹாபிகள் நபி பெருமானுர் (ஸல்) அவர்கள்பால் எவ்வளவு பக்தியுடனிருந்தனர்; அவர்களது கட்டளைக்கு எவ்வாறு கீழ்ப்படிந்தனர் என்பது இச்சண்டையிலிருந்து நாம் கற்றுக்கொள்ளும் படிப்பினையாகும்.



وَالْكَاتِبِيْنَ بِسُمْرِ الْخَطِّ مَا تَرَكَتْ
أَقْلَامُهُمْ حَرْفَ جِسْمٍ غَيْرَ مُنْعَجِمِ



## 130-வது பாட்டு.

மேலும் (அம்முஸ்லிம் வீரர்கள்) "கத்து" என்ற (மரத்தால் செய்யப்பட்ட) ஈட்டிகளால் எழுதுபவர்கள், (-குத்திக்கொல்பவர்கள்) அவர்களின் எழுதுகோல்கள், எந்த ஸ்தூல பாகத்தையும் புள்ளி குத்தாமல் விடுவதில்லை.

முஸ்லிம் வீரர்களான ஸஹாபாக்கள் அம்பெய்வதிலும் ஈட்டியால் குத்துவதிலும் குறி தவருத சமர்த்தர்கள் என்பதை சமிக்ஞை செய்யப்படுகிறது. அறபி அட்சரத்தில் சில எழுத்துக்களுக்கு இத்தனை புள்ளிகள் இருக்கவேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவ்வாறு குறிக்கப்பட்ட எண்ணிக்கைப்படி குறித்த இடத்தில் அவையில்லாவிடின் அந்த எழுத்து பின்னமாய்விடும். ஆகையால் மிக ஜாக்கிரதையாக அப்புள்ளிகளைத் தவருமல் இடுபவர் அறபி வாசகங்களை ஒழுங்காக எழுதுபவராவர். இதுபோன்று ஸஹாபிகள், காபிர்களது ஸ்தூலம் எனும் பலகையில் தங்களது ஈட்டிகளால், அம்புகளால் புள்ளியிட்டுக்கொண்டே போகின்றனர் என்பதை இப்பாட்டின்மூலம் ஆசிரியர் சுட்டிக்காண்பிக்கிருர்.



شَاكِي السِّلَاحِ لَهُمْ سِيمَا تُمَيِّزُهُمْ
وَالْوَرْدُ يَمْتَازُ بِالسِّيمَا مِنَ السَّلَمِ



## 131-வது பாட்டு.

(அவர்கள்) ஆயுதந்தரித்தவர்கள். (பகைவர்களை விட்டும்) அவர்களை நீ பகுத்துணரக்கூடிய அடையாளம் அவர்களில் உண்டு. ரோஜா மலர் கரிவேல மலரைவிட்டு அடையாளத்தால் வேறுபட்டு விடுகிறது (போன்று).

போர்க்களத்தில் ஆயுதந்தாங்கி வருபவர்களில் ஸஹாபிகளும் இருக்கின்றனர். அவர்களது விரோதிகளும் இருக்கின்றனர். இவ்விஷயத்தில் இவ்விருவரும் ஒன்றுபட்டவரேதான். ஆனால் இவர்களை இன்னின்னார் என்று பிரித்தறிந்து கொள்வதற்கு இவர்களுக்கு இயற்கையாகவே ஒரு அடையாளமிருக்கிறது. அது இவர்களை மற்றவர்களைவிட்டும் பிரித்து அறிவித்துவிடுகிறது.

பன்னீர் புஷ்பத்துக்கு வாடையும், அழகும் விசேஷமாக இருப்பதுபோன்று இவர்கள் தெய்வ வணக்கத்தில் ஈடுபட்டவர்களாதலின், அடையாளம் இவர்களது நெற்றியில் இருந்துகொண்டிருக்கிறது. இவர்களது முகத்தில் ஒருவிதமான தேஜஸும், அழகும் இருந்துகொண்டிருக்கின்றன. இதனை இறைவன் திருகுர்ஆனிலுங்கூட "ஸூரத்துல் பத்ஹின்" இறுதியில் சுட்டிக் காட்டியுள்ளான். இதனை ஆசிரியப்பெரியார் பன்னீர் புஷ்பத்துக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.



تُهْدِي إِلَيْكَ رِيَاحُ النَّصْرِ نَشْرَهُمُ
فَتَحْسَبُ الزَّهْرَ فِي الْأَكْمَامِ كُلَّ كَمِي



## 132-வது பாட்டு.

உதவியெனும் காற்றுக்கள், அவர்களது நறுமணத்தை உன்பால் சேர்ப்பிக்கின்றன. எனவே, ஒவ்வொரு வீரரையும் மொக்கினுள் (மறைந்து) உள்ள புஷ்பமென நீ எண்ணிக்கொள்வாய்.

كَأَنَّهُمْ فِي ظُهُورِ الْخَيْلِ نَبْتُ رُبًى
مِنْ شِدَّةِ الْحَزْمِ لَا مِنْ شِدَّةِ الْحُزُمِ

## 133-வது பாட்டு.

பூமியின் மேட்டில் முளைத்த புற்பூண்டைப்போன்று அவர்கள் குதிரையின் முதுகுகளில் (ஊன்றி) யிருப்பார்கள். (போரிலும், குதிரைச் சவாரியிலும் அவர்களுக்கிருக்கும்) நிபுணத்துவ மிகுதியால் (தானேயன்றி) சேணத்தி(ன் உறுதியி)னாலன்று.

طَارَتْ قُلُوبُ الْعِدَى مِنْ بَأْسِهِمْ فَرَقًا
فَمَا تُفَرِّقُ بَيْنَ الْبَهْمِ وَالْبُهَمِ

## 134-வது பாட்டு.

அவர்களது போரின் கடுமையால் எதிரிகளின் இதயங்கள் பயத்தால் நடுங்கின. ஆகவே அவைகளின் ஆட்டுக் குட்டிகளுக்கும், வீரர்களுக்கும் வித்தியாசம் கண்டுகொள்ள முடியவில்லை. (பீதியின் காரணத்தால் ஆட்டுக்குட்டியைக்கண்டாலும் வீரர்களோவென நடுங்குகின்றனர்.)

وَمَنْ تَكُنْ بِرَسُوْلِ اللهِ نُصْرَتُهُ
اِنْ تَلْقَهُ الْاُسْدُ فِيْ اٰجَامِهَا تَجِمِ

## 135-வது பாட்டு.

அல்லாஹ்வின் தூதரினல் எவருக்கு உதவி கிட்டி யிருக்கிறதோ அவரைச் சிங்கங்கள் தனது புதரில் சந்திப்பினும் பயந்து ஒடுங்கிவிடும்.

### பெருமானாரின் உதவி பெற்றோருக்கு புலியும் சரணடைகிறது.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் அடிமையாக இருந்து விடுதலைபெற்ற ஹஜரத் ஸபீனா (ரலி) என்ற ஸஹாபி, உரோம ராஜ்யத்தில் நடந்த சண்டையில் பகைவர்களால் கைது செய்யப்பட்டார். எனினும், எப்படியோ அவர்களைவிட்டுத் தப்பி ஓடிவந்துகொண்டிருந்தார். வழியில் ஒரு புலி குறுக்கிட்டுத் தடையாக நின்றுகொண்டது. அப்பொழுதவர் அப்புலியை நோக்கி "அபுல்ஹாரிதே! நான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களது ஊழியன். முஸ்லிம்களது படை இருக்குமிடம் செல்ல விரும்புகிறேன்." என்று கூறினர். உடனே அப்புலி அவருக்கு முன்னல் செல்லத் தொடங்கிற்று. அது முன்னல் சென்றுகொண்டே இருந்தது. அவர் அதற்குப்பின்னல் சென்றுகொண்டிருந்தார். முஸ்லிம்களது படை இருக்குமிடத்துக்குச் சமீபத்தில் வந்ததும் அப்புலி விலகிக்கொண்டது. அவர் பாளையத்துக்குட்சென்ருர். (மிஷ்காத்துல் மஸாபீஹ்)

ஹஜ்ரத் உமர்பாறூக் (ரலி) அவர்களது புதல்வரான ஹஜ்ரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் ஒருமுறை பிரயாணம் செய்துகொண்டிருக்கையில் ரஸ்தாவில் ஜனங்கள் பெருங் கூட்டமாக கூடியிருந்தனர். அவரும் அங்கு சென்று ஜனக் கூட்டத்தைப் பார்த்து ஏன் கூடியிருக்கிறீர்கள்? என்று வினவினர். இங்கு ஒரு புலி இருக்கிறது. அதனைக்கடந்து போக முடியாமல் நாங்கள் சற்று தூரத்தில் விலகி நிற்கிறோம் என்றனர். உடனே அவர் அப்புலி இருக்குமிடத்தைத் தெரிந்து அதனருகில் சென்று அதன் காதைப் பிடித்துத் திருகிக்கொண்டு "நீ ஜனங்களைத் தொந்தரவு செய்யாதே. இந்த இடத்திலேயே குகைக்குள் நீ இருக்கலாம்" என்று கூறினர். உடனே அப்புலி தலையைத் தாழ்த்திக்கொண்டு தன் குகைக்குட் சென்றுவிட்டது. (ஷறஹ் ஸுன்னு)

இச்சம்பவங்கள் நபிகள் பெருமானர் (ஸல்) அவர்கள் காலத்துக்குப்பிறகு நிகழ்ந்தவை. இவைகள் ஹதீது ஷரீபில் சொல்லப்பட்டிருக்கின்றன. நபி பெருமானர் (ஸல்) அவர்களது ஸஹாபிகளுக்கு விலங்கினங்களிலுங்கூட இருந்த செல்வாக்கைச் சுட்டிக்காட்டி இத்தகைய அந்தஸ்துக்கு அவர்கள் நபிகள் பெருமானர் (ஸல்) அவர்களது பொருட்டாலும் உதவியாலுமே வந்திருக்கிருர்கள் என்பதை சமிக்ஞை செய்துள்ளார்கள்.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ
وَسَلِّمْ عَلَيْهِ اَللّٰهُمَّ اِنَّا نَجْعَلُكَ عَضُدًا اِلَيْنَا عِنْدَ ضَيْمِنَا
اَللّٰهُمَّ اَنْتَ الصَّاحِبُ فِى الْاَهْلِ وَالْمَالِ وَالْوَلَدِ اَللّٰهُمَّ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ عَلَيْهِ رَبَّنَا لَا تُزِغْ
قُلُوْبَنَا بَعْدَ اِذْ هَدَيْتَنَا وَهَبْ لَنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً اِنَّكَ اَنْتَ الْوَهَّابُ

وَلَنْ تَرٰى مِنْ وَّلِيٍّ غَيْرَ مُنْتَصِرٍ
بِهٖ وَلَا مِنْ عَدُوٍّ غَيْرَ مُنْقَصِمِ

## 136-வது பாட்டு.

[பெருமானார் – ஸல்] அவர்களைக்கொண்டு உதவி பெறாத எந்த நேசரையும், (அவர்களால்) முறியடிக்கப்படாத எந்த பகைவரையும் நீ ஒருக்காலும் காணமாட்டாய்.

اَحَلَّ اُمَّتَهٗ فِيْ حِرْزِ مِلَّتِهٖ
كَاللَّيْثِ حَلَّ مَعَ الْاَشْبَالِ فِيْ اَجَمِ

## 137-வது பாட்டு.

சிங்கமானது புதரில் (தனது) குட்டிகளுடன் (பாதுகாப்புக்காக) இறங்கியிருப்பதுபோன்று (பெருமான்–ஸல்) அவர்கள் தங்களது கூட்டத்தினரை தங்களது மார்க்கமெனும் கோட்டையில் (பாதுகாப்புக்காக) இறக்கியுள்ளார்கள்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் இஸ்லாம் மதத்தைப் பிரசாரம் செய்து, உலகிலுள்ள பல்வேறு கோத்திரங்கள், சமூகங்கள், தேசங்கள் முதலியவைகளிலுள்ள பலதரப்பட்ட ஜனங்களை ஒரே கொள்கை, ஒரே நோக்கம், ஒரே ஆசாரம் முதலியவைகளுள்ளவர்களாக ஆக்கியும், ஒரே சமூகத்தினராகச் செய்தும்விட்டார்கள். அன்றுமுதல் இன்று வரை அச்சமூகம் உலகில் தனிப்பெரும் சமூகமாக விளங்கி வருகிறது. இச்சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கு நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஆத்மார்த்தீக தந்தையாவார்கள். ஆகவே, முஸ்லிம்கள் யாவரும் நாயகம் (ஸல்) அவர்களது ஆத்மார்த்தீக மக்களாவார்கள். இதனை ஆசிரியப்பெரியார் ஒரு சிங்கம், தன் குகைக்கு தன் குட்டிகளை எவ்வாறு ஒன்று சேர்த்துப் பாதுகாத்துக்கொள்கிறதோ, அதேபோன்று பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களது ஆத்மார்த்தீக மக்களாகிய முஸ்லிம்களை இஸ்லாம் என்ற கோட்டையினுள் ஒன்று திரட்டிப் பாதுகாக்கிறார்கள் என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

كَمْ جَدَّلَتْ كَلِمَاتُ اللّٰهِ مِنْ جَدِلٍ
فِيْهِ وَكَمْ خَصَمَ الْبُرْهَانُ مِنْ خَصِمِ

## 138-வது பாட்டு.

அவர்கள் சம்பந்தமாக குதர்க்கவாதம் புரிந்த எத்தனையோபேர்களை அல்லாஹ்வின் (திரு) வாக்கியங்கள் பூமியில் (அடித்து வீழ்த்தி) எறிந்துவிட்டன. மேலும் எத்தனையோ விதண்டாவாதிகளை உடைக்கமுடியாத ஆதாரமானது வெற்றிகொண்டுவிட்டது.

## பெருமானாரை நபியாக ஏற்க மறுத்தோருக்கு குர்ஆன் கொடுக்கும் வாயாப்பு.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் நபி என்பதை நிராகரித்த காபிர்களிடம் இறைவனது வேத வசனங்களே அவர்கள் நபி என்பதை ருஜுப்படுத்தி, போட்டி போட்டு ஜெயித்தன.

"நமது அடியார்பால் நாம் அருளியதில் நீங்கள் சந்தேகத்திலிருப்பீர்களாயின் அதனைப்போன்ற ஒரு ஸூரத்தைக் கொண்டுவாருங்கள். (இதில்) அல்லாஹ்வைத்தவிர உங்களது சாக்ஷிக்காரர்களையும் அழைத்துக்கொள்ளுங்கள்" (2 : 23) என்பதாகத் திருகுர்ஆனின் வேத வசனம் சவால் விடுத்திருக்கிறது. இந்த சவாலை அக்காலத்திலுள்ள எதிரிகள் ஏற்று, திரு குர்ஆனிலுள்ள ஒரு சிறிய அத்தியாயத்தைப் போன்றுவது ஒரு அத்தியாயத்தை இயற்ற முயன்று தோல்வியடைந்தனர். அதுமட்டுமல்ல; தங்களது தோல்வியை அவர்கள் பகிரங்கமாக ஏற்றுங்கொண்டுவிட்டனர்.

இதனையன்றி அக்காலத்திலுள்ள பெரும் பெரும் அறிவாளிகள் நபி பெருமானர் (ஸல்) அவர்களுக்கு புத்திமதி கூறி சன்மார்க்கப் பிரசாரம் செய்வதைத் தடுத்துவிட நேரில் வந்து சம்பாஷணை செய்தபோது, நபி நாயகம் (ஸல்) அவர்கள் திரு குர்ஆனில் இருந்து சில வசனங்களைத்தான் அவர்களுக்கு ஓதிக்காண்பித்தார்கள். அவைகளைச் செவியேற்றவுடன் அவர்கள் பேசாமல் திரும்பச்சென்று தங்களைத் தூதனுப்பியவர்களுக்கே புத்தி கூறுபவர்களாக மாறிவிட்டனர்.

இரண்டாவது கலீபாவான ஹஜ்ரத் உமர்பாறூக் (ரலி) அவர்கள் மனந்திரும்பி இஸ்லாம் மதத்தைத் தழுவுவதற்கு முக்கிய முதற்காரணமாக இருந்தது திருகுர்ஆன் வசனங்களேயாம்.

ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் திருகுர்ஆனைச் சப்தமிட்டு ஓதுவதைத்தான் காபிர்கள் ஆக்ஷேபித்தனர். தங்களது மனைவி, மக்களும், பந்துக்களும் அதனைச் செவியேற்று மனந்திரும்பி இஸ்லாத்தைத் தழுவிவிடுகின்றனர் என்று குற்றஞ்சாட்டினார்கள். இவ்விபரங்களெல்லாம் "ஸீரத்துந்நபவியில்" மலிந்திருக்கின்றன. இவைகளை ஆசிரியப்பெரியார் இங்கு சுட்டிக்காட்டி, திருகுர்ஆன் வசனங்கள் எத்தனையோ தர்க்கங்களையும், குதர்க்கவாதிகளையும் ஜெயித்து நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் மெய்யான நபி என்பதை ருஜுப்பித்திருக்கின்றன என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

كَفَاكَ بِالْعِلْمِ فِي الْأُمِّيِّ مُعْجِزَةً
فِي الْجَاهِلِيَّةِ وَالتَّأْدِيبِ فِي الْيُتُمِ

## 139-வது பாட்டு.

அறியாமைக்காலத்தில் எழுதப்படிக்கத் தெரியாத ஒருவரில் அற்புதமாக அறிவு உண்டானதும் அனாதையான ஸ்திதியில் நல்லொழுக்கம் உண்டானதுமே உனக்கு (அவர் நபிதான் என்பதற்கு) போதுமான (ஆதாரமாக இருக்கிற)து.

## அறப்நாட்டின் அறிஞர்கள் பதினேழுபேர்களே.

*நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்த காலத்தில் அந்நாட்டில் எழுதப்படிக்கக் கற்றுக்கொள்ளும் வழக்கமில்லே. அவர்களுக்கு நாற்பது வயது பூர்த்தியாகி நபித்துவம் வந்த காலத்தில் குறைஷிக் கோத்திரத்திலேயே மொத்தம்* **பதினேழு பேர்கள்தான் எழுதப்படிக்கத் தெரிந்திருந்தனர். இக்கோத்திரம்தான் அக்காலத்தில் அந்நாட்டில் மிகவும் செல்வாக்கும், முன்னேற்றமும் வாய்ந்த அறிவுள்ள கோத்**திரம். இக்கோத்திரத்திலேயே கல்வி நிலே இவ்வண்ணம் இருந்திருக்குமாயின் மற்றைய கோத்திரத்தின் கல்வி நிலேயை இதிலிருந்து யூகித்துக்கொள்ளலாம்.

மேலும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் பிறக்கும் போதே அநாதையாகப் பிறந்தார்கள். ஏழை மாதாவும், பெருஞ்செல்வமுள்ள பெரிய தந்தையும், பாட்டனரும் அவரைப் போஷிக்கத் தொடங்கினர். அவர்கள் கல்விச் சாலேக்கு அனுப்பப்படவில்லே. தனி நபரிடமாவது கல்வி பயிலவுமில்லே. இவ்வித நிலேயிலேயே வளர்ந்து நபியாகி உலக மன்பதைகளுக்கு அறிவுப்பொக்கிஷங்களே அள்ளிக் கொடுத்தார்கள். நவநாகரிகத்துக்குத் தேவையான சகல சற்குண நன்னடக்கைகளும் ஒருங்கே அமையப்பெற்றிருந்தார்கள். இதனேக்குறித்து நபிபெருமான் (ஸல்) அவர்கள் "என்னுடைய றப்பு எனக்கு ஒழுக்கங் கற்றுக்கொடுத்தான். எனக்கு அழகான விதத்தில் ஒழுக்கத்தைக் கற்றுக்கொடுத்தான்" (புகாரீ) என்றும், "நான் கல்வி என்னும் பட்டணம்; அலீ அதன் தலேவாயில்" (திர்மதீ) என்றும் கூறியுள்ளார்கள். எழுதப்படிக்கத் தெரியாத ஒருவர் இவ்வளவு அறிவுகளேப் போதித்திருப்பது ஒன்றே அவருக்கு கடாக்ஷக் கல்வி இருக்கிறது என்பதற்குச் சான்றாக இருக்கிறது. இவ்வொரு சான்றே அவரின் அற்புதத்திற்கும், மெய்யான நபி என்பதற்கும் நிரூபணமாக இருக்கிறது என்பதை ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார்.

## ٢١
## دعاء

اللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدِنِ السَّابِقِ نُوْرُهُ وَرَحْمَةً لِلْعَالَمِيْنَ ظُهُوْرُهُ
عَدَدَ مَنْ مَضٰى فِيْ خَلْقِكَ وَمَنْ بَقِيَ وَمَنْ سَعِدَ مِنْهُمْ وَمَنْ
شَقِيَ صَلَاةً تَسْتَغْرِقُ الْعَدَّ وَتُحِيْطُ بِالْحَدِّ صَلَاةً لَا غَايَةَ
لَهَا وَلَا مُنْتَهٰى وَلَا انْقِضَاءَ صَلَاةً دَائِمَةً بِدَوَامِكَ وَعَلٰى اٰلِهٖ
وَصَحْبِهٖ وَسَلِّمْ اِنَّا نَسْئَلُكَ وَنَتَوَجَّهُ اِلَيْكَ بِحَبِيْبِكَ الْمُصْطَفٰى
عِنْدَكَ يَا حَبِيْبَنَا يَا مُحَمَّدُ اِنَّا نَتَوَسَّلُ بِكَ اِلٰى رَبِّكَ فَاشْفَعْ
لَنَا عِنْدَ الْمَوْلَى الْعَظِيْمِ فِيْمَا اَصَابَنَا مِنَ الشِّدَّةِ وَالْمَرَضِ يَا
نِعْمَ الرُّسُلِ اللّٰهُمَّ شَفِّعْهُ فِيْنَا بِجَاهِهٖ عِنْدَكَ بِرَحْمَتِكَ
يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ



# ஒன்பதாவது பிரிவு.

## ஷபாஅத்தே குப்ரு.



خَدَمْتُهُ بِمَدِيحٍ أَسْتَقِيلُ بِهِ
ذُنُوبَ عُمْرٍ مَضَى فِي الشِّعْرِ وَالْخِدَمِ



## 140-வது பாட்டு.

பெருமானர் (ஸல்) அவர்களுக்கு புகழ்மாலையின் மூலம் நான் பணிவிடை செய்கிறேன். அதனல் (வீணர்களைப் புகழ்ந்து பாடிய) பாடல்களிலும் (மன்னர்களுக்குப்) பணிவிடை செய்வதிலும் கழிந்துபோன வாழ்நாட்களின் பாபங்களைக் களையக் கோருகிறேன்.

இங்கிருந்து புலவர்களது இயற்கைத் தன்மையையும், அவர்களது பாப கைங்கரியங்களையும் கூறுகின்ருர்.

புலவர்களது தன்மை:

"போற்றினும் போற்றுவர்; பொருட்கொடாவிடில் தூற்றினும் தூற்றுவர்; சொன்ன சொற்களை மாற்றினும் மாற்றுவர். வன்களானர் கூற்றினும் பாவலர் கொடியாராவரே"

என்றும் "கல்லாத ஒருவனை நான் கற்றாய் என்றேன்; காடறியும் அவனை நான் நாடாள்வாயென்றேன்; பொல்லாத ஒருவனை நான் நல்வாய் என்றேன், இல்லாது சொன்னேன்; உனக்கில்லை என்றான். யானுமென் குற்றத்தாலேகினேன்:" என்றும் தமிழ்ப்புலவர்கள் தங்கள் இனத்தவரிலுள்ள பெரும்பாவரின் இழி தன்மையைச் சுட்டிக் காட்டியுள்ளதற் கேற்ப, இக்காவியத்தின் ஆசிரியரும் புலவர்களது பொதுத் தன்மையைச் சுட்டிக்காட்டி, தாமும் இக்குற்றத்திலிருந்து தப்பவில்லை என்பதாகத் தம்மைக் குறைகூறிக்கொண்டு, தனது சென்ற தவறுகளுக்குப் பிராயச்சித்தமாகப் இப் புகழ் பாவை நபி பெருமான் (ஸல்) அவர்களுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன் எனக் கூறுகின்றார்



إِذْ قَلَّدَانِي مَا تُخْشَى عَوَاقِبُهُ
كَأَنَّنِي بِهِمَا هَدْيٌ مِّنَ النَّعَمِ



## 141-வது பாட்டு

ஏனெனில், (வீணர்களைப் புகழ்தலும், மன்னர்களுக்குத் தொண்டு செய்தலுமான) இரண்டும், எவற்றின் இறுதி முடிவுபற்றி அஞ்சப்படுமோ அவற்றையே எனக்கு கழுத்து மாலையாகப் போட்டுவிட்டன. (முடிவில்) அவ்விரண்டின் காரணத்தால் கால்நடைகளில் பலிக்காக நேர்ந்து விடப்படும் பிராணிபோன்று நான் ஆய்விட்டேன்.

பலிப் பிராணிக்கு இடும் மாலை:

ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் முற்காலத்தில் தங்களுடன் ஆடு, மாடு, ஒட்டகைகளையும் பலியிடுவதற்காக அங்கு கொண்டுபோவார்கள். அப்பொழுது அவைகளை எவரும் களவாடிக் கொண்டுபோகலாது என்பதற்காக அவைகளது கழுத்தில், அவைகள் "திரு மக்காவில் பலியிடப்படும் பிராணிகள்" என்பதற்காக அடையாளங்களைப் போட்டு விடுவர். இவ்வடையாளமிட்ட பிராணிகள் தவறிச்சென்ற போதிலும் மற்றவர்களால் திரு மக்கா சேர்ப்பிக்கப்பட்டு விடும். இவ்வாறு அடையாளமிடப்பட்ட பலி மிருகத்தைப் போல் தாமும் நரகத்துக்குரியவர் என்பதற்கு அடையாள மாக மனிதஸ்துதி செய்தும், மன்னர்களுக்குப் பணிவிடை செய்தும் சம்பாதித்துக்கொண்ட பாப மூட்டைகளைக் கழுத் தில் போட்டுக்கொண்டிருப்பதாக ஆசிரியர் தம்மைக்குறித்து நொந்துகொள்கிறார்.

أَطَعْتُ غَيَّ الصِّبَا فِي الْحَالَتَيْنِ وَمَا
حَصَلْتُ إِلَّا عَلَى الْآثَامِ وَالنَّدَمِ

## 142-வது பாட்டு.

(வீண் புகழ், பணிவிடை செய்தல் என்ற) இரு நிலை களிலும் சிறுபிள்ளைத்தனமெனும் வழிகேட்டிற்கு வழிபட்டேன்; எனவே பாபத்தையும், மனவேதனை யையுமேயன்றி வேறொன்றையும் நான் கைக் கொள்ளவில்லை.

فَيَا خَسَارَةَ نَفْسٍ فِي تِجَارَتِهَا
لَمْ تَشْتَرِ الدِّينَ بِالدُّنْيَا وَلَمْ تَسُمِ

## 143-வது பாட்டு.

தமது வர்த்தகத்தில் ஆத்மா அடைந்த நஷ்டமே! இவ்வுலக்குப்பதிலாக மார்க்கத்தை அ(வ்வாத்மா வான)து கொள்முதல் செய்யவுமில்லை; அதை வாங்க விலை பேசவுமில்லை.

وَمَنْ يَبِعْ آجِلًا مِنْهُ بِعَاجِلِهِ
يَبِنْ لَهُ الْغَبْنُ فِي بَيْعٍ وَفِي سَلَمِ

## 144-வது பாட்டு.

தனது இம்மை வாழ்க்கைக்குப் பதிலாக மறுமை வாழ்க்கையை விற்றவனுக்கு (தன்) வியாபாரத்திலும், ஒப்பந்தத்திலும் நஷ்டமே தோன்றும்.

إِنْ آتِ ذَنْبًا فَمَا عَهْدِي بِمُنْتَقِضٍ
مِنَ النَّبِيِّ وَلَا حَبْلِي بِمُنْصَرِمِ

## 145-வது பாட்டு.

நான் பாபம் செய்திருப்பினும் நபியிடத்தில் நான் வைத்துள்ள உறுதி (தளர்ந்து) உடைந்துவிடவுமில்லை; எனது (நம்பிக்கைக்) கயிறு அறுந்து போகவுமில்லை.

فَإِنَّ لِي ذِمَّةً مِنْهُ بِتَسْمِيَتِي
مُحَمَّدًا وَهُوَ أَوْفَى الْخَلْقِ بِالذِّمَمِ

## 146-வது பாட்டு.

எனெனில் "முஹம்மத்" என நான் நாமம் பூண்டிருப்பதால் அ(ப் பெருமானா)ர் [ஸல்]) அவர்களுக்கு என்மீது பொறுப்பு சார்ந்திருக்கிறது. அவர்களோ பொறுப்புக்களை நிறைவேற்றுவதில் சிருஷ்டிகளில் மிக்கவர்.

## دعاء ٢٢

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ
وَبَارِكْ وَسَلِّمْ عَلَيْهِ اَللّٰهُمَّ يَامَنْ اِذَا دُعِيَ اَجَابَ وَاِذَا سُئِلَ اَعْطٰى
نَسْئَلُكَ بِصَاحِبِ الْخُلُقِ لَدَيْكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ
اَنْ تُفَرِّجَ كُرُبَتَنَا وَتَقْضِيَ حَاجَاتِنَا وَتَغْفِرَلَنَا ذُنُوْبَنَا رَبَّنَا
ظَلَمْنَا اَنْفُسَنَا وَاِنْ لَمْ تَغْفِرْلَنَا وَتَرْحَمْنَا لَنَكُوْنَنَّ مِنَ الْخَاسِرِيْنَ



اِنْ لَمْ يَكُنْ فِيْ مَعَادِيْ اٰخِذًا بِيَدِيْ
فَضْلًا وَاِلَّا فَقُلْ يَازَلَّةَ الْقَدَمِ



## 147-வது பாட்டு.

அவர்கள் கிருபைவைத்து மறுமையில் எனது கரத்தைப் பிடி(த்து)க் கா(ப்பாற்ற)விடின் "பாதம் சருகியவனே!" எனக்கூறிவிடு. அல்லாவிடிலோ? (வெற்றிபெற்றவனே எனக்கூறு.)

حَاشَاهُ اَنْ يُحْرَمَ الرَّاجِي مَكَارِمَهُ
اَوْ يَرْجِعَ الْجَارُ مِنْهُ غَيْرَ مُحْتَرَمِ

## 148-வது பாட்டு.

(பெருமானார்-ஸல்) அவர்களது உதார குணங்களை ஆதரவு வைத்தவன் (கிடைக்கப்பெறாமல்) துர்பாக்கியனாவான் என்பதோ, அல்லது அவர்களை அடுத்தவன் கௌரவிக்கப்படாமல் திரும்புவான் என்பதோ எக்காலுமில்லை.

وَمُنْذُ اَلْزَمْتُ اَفْكَارِي مَدَائِحَهُ
وَجَدْتُّهُ لِخَلَاصِي خَيْرَ مُلْتَزِمِ

## 149-வது பாட்டு.

எனது சிந்தனைகளில் அவர்களது திருப்புகழை நான் கட்டாயமாக்கிய காலமுதல் எனது விமோசனத்திற்காக பிணை ஏற்பவரில் சிறந்தவராகவே அவரை நான் பெற்றேன்.

وَلَنْ يَفُوتَ الْغِنَى مِنْهُ يَدًا تَرِبَتْ
اِنَّ الْحَيَا يُنْبِتُ الْاَزْهَارَ فِي الْاَكَمِ.

## 150-வது பாட்டு.

(பெருமானார்-ஸல்) அவர்களால் கிடைக்கப்பெறும் சீமான் தனமானது தேவைப்படும் கரத்தை விட்டும் எக்காலும் தப்பிவிடாது; (எவ்வாறெனில்) திண்ணமாக மழையானது மேட்டுப் பாகங்களிலும் புற் பூண்டுகளை முளைப்பி(த்து புஷ்பங்களை புஷ்பி)க்கச் செய்கிறது.

## دعا ٢٣

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَبَارِكْ
وَسَلِّمْ عَلَيْهِ اَللّٰهُمَّ اِنَّكَ تَعْلَمُ ذُنُوْبَنَا فَاغْفِرْهَا يَا غَفَّارَ
الذُّنُوْبِ وَتَعْلَمُ عُيُوْبَنَا فَاسْتُرْهَا يَا سَتَّارَ الْعُيُوْبِ وَتَعْلَمُ
حَوَائِجَنَا فَاقْضِهَا يَا قَاضِيَ الْحَاجَاتِ وَتَعْلَمُ مُهِمَّاتِنَا فَاكْفِهَا يَا
كَافِيَ الْمُهِمَّاتِ وَتَعْلَمُ اَعْدَاءَنَا فَاقْهَرْهَا يَا قَاهِرَ الْاَعْدَاءِ وَتَعْلَمُ
بَلِيَّاتِنَا فَادْفَعْهَا يَا دَافِعَ الْبَلِيَّاتِ رَبَّنَا اَذْهِبْ عَنَّا ذُنُوْبَنَا
وَتَوَفَّنَا مُسْلِمِيْنَ وَاَلْحِقْنَا بِالصَّالِحِيْنَ وَاحْشُرْنَا فِيْ زُمْرَةِ
الْمُتَّقِيْنَ اِلٰهَنَا وَقِنَا شَرَّ الظَّالِمِيْنَ وَشَرَّ الْمُنَافِقِيْنَ وَشَرَّ
الْحَاسِدِيْنَ وَشَرَّ الْمَاكِرِيْنَ وَشَرَّ الْكَافِرِيْنَ وَشَرَّ الْخَلَائِقِ
كُلِّهِمْ اَجْمَعِيْنَ وَنَبِّهْنَا عَنْ نَوْمَةِ الْغَافِلِيْنَ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ
الرَّاحِمِيْنَ وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمْ



وَلَمْ اُرِدْ زَهْرَةَ الدُّنْيَا الَّتِيْ اقْتَطَفَتْ
يَدَا زُهَيْرٍ بِمَا اَثْنٰى عَلٰى هَرِمِ

# பொருளடக்கம்

# 151-வது பாட்டு.

**மேலும் "ஹரிம்" என்ற (மன்ன)வர்மீது புகழ்ந்து பாடியதால் "ஜுஹைர்" என்ற (புல)வரது இரு கரங்களும் பறித்தெடுத்தவையான இவ்வுலக அலங்காரத்தை (பணச் செல்வத்தை) நான் விரும்பவில்லை.**

ஹரிம் என்றமன்னரும், ஜுஹைர் என்ற புலவரும்:

ஜுஹைர் என்பவர் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களைத் தூஷித்துச்செய்யுள்களியற்றி பலத்த போராட்டங்களை யுண்டுபண்ணிக்கொண்டிருந்தார். அதனால் கண்டவிடத்தில் அவரைக் கொன்றுவிடவேண்டுமென நபிபெருமானார் (ஸல்) அவர்களால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டு, பின்னர் தமது செய்கைக்கு வருந்தி, தௌபாச்செய்து மாறுவேடம் பூண்டு பெருமானார் (ஸல்) அவர்களிடம் நேரில் ஆஜராகி தமது, பச்சாதாபத்தை "பானத் ஸுஆத்" என்ற காவியத்தின் மூலம் சமர்ப்பித்து மன்னிப்பு பெற்றதுடன், நபிநாயகம் (ஸல்) அவர்களிடம் சன்மானமும் பெற்று ஸஹாபியாகி விடும் பாக்கியம் பெற்ற கஃபு (ரலி) என்ற மகா வித்துவானின் தந்தையாவார்.

இவர் தள்ளாத வயதையடைந்த தொண்டுக்கிழவராக இருக்கும் சமயத்தில் நூறுவயதையடைந்த கடைசிகாலத்தில் நபிபெருமானார் (ஸல்) அவர்களுங்கூட அவரைப் பார்த்து "நாயனே! இவருடைய ஷைத்தானை விட்டும் என்னைக் காப்பாற்றுவாயாக" என்று இறைவனைப் பிரார்த்தித்து இருக்கிறார்கள். இப் பிரார்த்தனைக்குப்பிறகு அவருடைய புலமை போய்விட்டது. அவர் எச்செய்யுளையும் அதன்பின் இயற்றியதில்லை. அண்மையில் காலமும் சென்றார். (பாஜூரி).

## கன்ஸா என்ற பெண் கவி:

அவர் மட்டுமல்ல, அவரது புதல்வியான கன்ஸா என்பவளுங்கூட பிரபலமான கவி. இக் குடும்பத்தைச்சேர்ந்தவர்கள் பரம்பரையாகவே புலமைத் தன்மை வாய்ந்தவர்களாக இருந்தனர். இவ்வயோதிக வித்துவான் அறப்நாட்டு முதல் தர ஏழு வித்துவான்களில் ஒருவராவார்.

நமது நாட்டிலும் புலவர்களை சமஸ்தானாதிபதிகள் ஆதரித்து பொன்னையும் பொருளையும் இனும் கொடுப்பதும், சிலரை சமஸ்தான வித்துவான்களாக நியமித்துக் கொள்வதும் வழக்கமாக இருந்துவருகிறது. இவ்வழக்கம் நமது நாட்டுக்கும், இக்காலத்துக்கும் மட்டிலும் சொந்தமில்லை. எல்லா நாட்டிலும் மன்னர்கள், பிரபுக்கள், மந்திரிகள், சிற்றரசர்கள் இவ்வழக்கத்தை அனுசரிப்பவர்களாகவே இப்பொழுதுமிருந்துவருகிருர்கள். இதற்கு முன்னரும் இருந்து வந்தார்கள்.

இவ்வயோதிக வித்துவான் ஹறிம் என்ற அறப் சிற்றரசனால் ஆதரிக்கப்பட்டு சமஸ்தான வித்துவானாக இருந்தார். இவர் அம்மன்னனைத் துதியாகப்பாடி ஏராளமான செல்வங்களைப்பெற்று, பெரும் நிதி திரட்டியவர். இவரைப்போல் உலகச் செல்வத்துக்கு ஆசைப்பட்டுத் தாம் நரஸ்துதியாக இக்காவியத்தைப் பாடவில்லை என்றும், இவ்வுலகச்செல்வம் துரிதமாக அழிந்துவிடக்கூடியன என்பதற்காக இவ்வுலக அலங்கரிப்பு குறுகிய அலங்கரிப்பு (**"ஜஹ்றதுத் துன்யா"**) என்றும் குறிப்பிட்டுள்ளார்.



دعاء

اللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلَى آلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَبَارِكْ
وَسَلِّمْ عَلَيْهِ اللّٰهُمَّ احْرُسْنَا بِعَيْنِكَ الَّتِي لَا تَنَامُ وَاكْفِنَا
بِبَرَكَتِكَ الَّتِي لَا تُرَامُ اللّٰهُمَّ احْفَظْنَا مِنْ بَيْنِ أَيْدِينَا وَمِنْ
خَلْفِنَا وَعَنْ أَيْمَانِنَا وَعَنْ شَمَائِلِنَا وَمِنْ فَوْقِ رُؤُسِنَا
وَمِنْ تَحْتِ أَقْدَامِنَا حِفْظًا عَلِيمًا مِنْ كُلِّ الْمَعَاصِي وَالْآفَاتِ
وَالْبَلِيَّاتِ وَمِنْ شَرِّ كُلِّ ذِي شَرٍّ بِرَحْمَتِكَ يَا أَرْحَمَ الرَّاحِمِينَ

## பத்தாவது பிரிவு.

விண்ணப்பம்.

يَا أَكْرَمَ الْخَلْقِ مَا لِي مَنْ أَلُوذُ بِهِ
سِوَاكَ عِنْدَ حُلُولِ الْحَادِثِ الْعَمِمِ

### 152-வது பாட்டு.

சிருஷ்டிகளில் மேன்மைமிக்கவரே! (எல்லோரையும்) சூழ்ந்துகொள்ளும் பொது ஆபத்து நேருங்கால், நான அபயம் தேடிக்கொள்ள உங்களைத்தவிர வேறு எவரும் எனக்கிலர்.

## دعَاء ٢٥

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ وَبَارِكْ وَسَلِّمْ عَلَيْهِ
اَللّٰهُمَّ اِنَّا نَسْأَلُكَ الرَّاحَةَ عِنْدَ الْمَوْتِ وَالْعَفْوَ عِنْدَ الْحِسَابِ
اَللّٰهُمَّ اِنَّا نَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا يَلِجُ فِى الْاَرْضِ وَمَا يَخْرُجُ
مِنْهَا وَمَا يَنْزِلُ مِنَ السَّمَآءِ وَمَا يَعْرُجُ فِيْهَا وَهُوَ الرَّحِيْمُ
الْغَفُوْرُ اَللّٰهُمَّ اجْعَلْنَا صَبُوْرًا وَاجْعَلْنَا شَكُوْرًا وَاجْعَلْنَا
فِيْ عَيْنِنَا صَغِيْرًا وَفِيْ عَيْنِ النَّاسِ كَبِيْرًا كَيْ نُسَبِّحَكَ
كَثِيْرًا اِنَّكَ كُنْتَ بِنَا بَصِيْرًا



وَلَنْ يَضِيْقَ رَسُوْلَ اللّٰهِ جَاهُكَ بِيْ
اِذَا الْكَرِيْمُ تَجَلّٰى بِاسْمِ مُنْتَقِمِ



## 153-வது பாட்டு.

அல்லாஹ்வின் தூதரே! கருணைமிக்க (இறை)வன், 'பழி வாங்குபவன்' என்ற பெயரால் வெளியாகும் சமயத்து தங்களின் (பேருபகாரக்) கீர்த்தி என் விஷயத்தில் ஒருக்காலும் நெருக்கடியடைந்து விடாது.

இச்செய்யுளிலிருந்து ஆசிரியப்பெரியார் பெருமானார் (ஸல்) அவர்கள் மூலம் தமக்குக் கிடைக்கவேண்டிய பிரதி பலன் என்ன? எத்தகைய பேருபகாரத்தை எதிர்பார்க்கிறார்? என்பனபோன்றவற்றை விபரிக்கிறார். மறுமையில் தமக்காக இறைவனிடம் பரிந்துபேசி முக்தியை வாங்கித்தர வேண்டுமென்ற தமது விருப்பத்தை இங்கிருந்து படிப்படியாகக் கூறுகிறார்.

## دعاء [٢٦]

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَبَارِكْ وَ
سَلِّمْ عَلَيْهِ اَللّٰهُمَّ اِنَّا نَتَوَسَّلُ بِقِرَاءَةِ الْقَصِيْدَةِ الْمُبَارَكَةِ
اِلَيْكَ اَنْ تُعْطِيَنَا خَيْرَ الدَّارَيْنِ عَاجِلًا وَاٰجِلًا بِفَضْلِكَ
وَكَرَمِكَ وَتَقْضِيَ حَاجَاتِنَا بِحُرْمَةِ حَبِيْبِكَ وَنَبِيِّكَ وَصَفِيِّكَ
مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَتَشْفِيَ اَمْرَاضَنَا بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ



فَاِنَّ مِنْ جُوْدِكَ الدُّنْيَا وَضَرَّتَهَا
وَمِنْ عُلُوْمِكَ عِلْمَ اللَّوْحِ وَالْقَلَمِ



## 154-வது பாட்டு.

ஏனெனில் நிச்சயமாக இவ்வுலகும் அதன் சக்களத்தி (யான மறுமை)யும் உங்களின் சன்மானத்தில் நின்றுமுள்ளவைகளேயாம். அன்றியும், ("லவ்ஹ்" எனும்) பலகையினுடையவும் (அதில் பதிவு செய்யும் "கலம்" எனும்) எழுதுகோலுடையவும் கலை யானது உங்களது ஞானங்களில் நின்றுமுள்ள வையே.



يَا نَفْسِ لَا تَقْنَطِي مِنْ زَلَّةٍ عَظُمَتْ
إِنَّ الْكَبَائِرَ فِي الْغُفْرَانِ كَاللَّمَمِ



## 155-வது பாட்டு.

மனமே! பலமான சறுகுதலால் (இறைவனின் கருணை கிட்டாதோவென) நீ நிராதரவாகி விடாதே! நிச்சயமாக மன்னித்தலில் பெரும் பாபங்கள் சிறிய பாபங்களைப்போன்றே இருக்கின்றன.

மனிதனின் இரு மனைவிகள்:

இவ்வுலகத்தையும், மறு உலகத்தையும் மனிதர்களின் மணப்பெண்ணுகளவைத்து உருவகமாகப் புலவர்கள் பாடுவதுண்டு. ஆகவே இம்மையும், மறுமையும் ஒரே கணவனுக்கு மணம் செய்விக்கப்பட்ட மனைவியராக இருக்கின்றனர். இம்முறையில்தான் இங்கு ஆசிரியப் பெரியார் "இவ்வுலகும் அதன் சக்களத்தியும்" என்று குறிப்பிட்டார்.

இவ்வுலகில் மனிதரை உற்பத்தி செய்து தன்னுடைய தன்மையை அவர்களுக்குப் போதிக்கத் தனது கலீபாவாகிய நபிபெருமானார் (ஸல்) அவர்களை அனுப்பி அவர்கள்மூலமாக தனது வேதத்தையும், சன்மார்க்கத்தையும் வெளிப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தாலேயே இறைவன் இவ்வகிலாண்டங்கள் அனைத்தையும் சிருஷ்டித்தான். இதனை உமறுப் புலவர் தமது சீறாப்புராணத்தில்,

"கலைமறை முஹம்மதென்னுங் காரணமில்லையா யின் உலக, விண் இரவு, திங்கள், ஒளிநாடு கணஞ் சுவர்க்கம் கடல், மலை, நதி, பரதாளம், வானவர் முதலாயும்மை நிலையுறப் படைப்பதில்லையென விறை நிகழ்த்தினனே"

என்ற செய்யுளில் கூறியுள்ளார். இதற்கேற்ப ஆசிரியப் பெரியார் அவர்களும் இவ்விஷயத்தை இங்கு சுட்டிக்காட்டியுள்ளார். இம்மை, மறுமை ஆகிய இரண்டும் சிருஷ்டிக்கப்பட்டதே தங்களுக்காகத்தான்; அவைகள் அழியாதிருப்பதும் தங்களுக்காகவே. அவைகள் எல்லாம் தங்கள் பொருட்டால் நிலைத்திருக்கையில் நான் கைவிடப்படுவேனா? ஒருபோதும் கைவிடப்படேன் என்பதாகத் தமது உறுதியான நம்பிக்கையைத் தெரிவித்துக்கொள்கிறார்.

لَعَلَّ رَحْمَةَ رَبِّي حِينَ يَقْسِمُهَا
تَأْتِي عَلَى حَسَبِ الْعِصْيَانِ فِي الْقِسَمِ

## 156-வது பாட்டு.

எனது ரக்ஷகனின் கிருபாகடாட்சத்தைப் பகிர்ந்தளிக்கும்பொழுது பாபத்தின் விகிதாசாரப்படி தான் பங்குகளில் கிடைக்கும்.

يَارَبِّ وَاجْعَلْ رَجَائِي غَيْرَ مُنْعَكِسٍ
لَدَيْكَ وَاجْعَلْ حِسَابِي غَيْرَ مُنْخَرِمِ

## 157-வது பாட்டு.

என் ரட்சகா! உன்பால் நான் வைத்துள்ள ஆதரவை மறுக்கப்படாததாகச் செய்தருள்! (உன்பாலுள்ள) எனது எண்ணத்தையும் முறிவுபடாததாக ஆக்கியருள்!

وَالْطُفْ بِعَبْدِكَ فِي الدَّارَيْنِ إِنَّ لَهُ
صَبْرًا مَتَى تَدْعُهُ الْأَهْوَالُ يَنْهَزِمِ

## 158-வது பாட்டு.

(இறைவா!) நின் அடிமை விஷயத்தில் ஈருலகிலும் இரக்கங்காட்டு! (ஏனெனில்) திட்டமாக அவனுக்கு (அற்ப) பொறுமை(யே) உண்டு. திடுக்கிடத்தக்க ஆபத்துக்கள் அவனை (அணுகி) அழைக்கும்பொழுது பீதியுற்று ஓடுவான்.

وَأْذَنْ لِسُحُبِ صَلٰوةٍ مِنْكَ دَآئِمَةٍ
عَلَى النَّبِيِّ بِمُنْهَلٍّ وَمُنْسَجِمِ

## 159-வது பாட்டு.

மேலும் உன்னில் நின்றுமுள்ள கருணையெனும் முகில்களுக்கு நபிமீது கருணைமாரி பொழிந்து கொட்ட உத்திரவு செய்தருள்வாயாக!

## دعاء

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ حَمْدًا يُوَافِيْ نِعَمَهُ وَيُكَافِيْ مَزِيْدَهُ ،
اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ
كَمَا صَلَّيْتَ وَسَلَّمْتَ عَلٰى سَيِّدِنَا اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا
اِبْرَاهِيْمَ اَللّٰهُمَّ اِنَّا نَسْأَلُكَ بِعَرْشِكَ الْاَفْخَمِ وَالرُّوْحِ
الْاَعْظَمِ وَالنُّوْرِ الْاَقْدَمِ اَنْ تُصَلِّيَ وَتُسَلِّمَ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ
وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ خَيْرِ الْبَرِيَّةِ صَلَاةً تَتَقَبَّلُ بِهَا قِرَاءَتَنَا
الْبُرْدَةَ الْبَهِيَّةَ وَتَغْفِرُ لَنَا وَلِوَالِدِيْنَا وَلِمُعَلِّمِيْنَا وَلِاِخْوَانِنَا
كَذٰلِكَ وَلِاَحْبَابِنَا وَلِجَمِيْعِ اُمَّةِ سَيِّدِنَا مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ

وَسَلِّمْ خَيْرَ الْوَرٰى بِالتَّحِيَّةِ وَتَقْضِيَ حَوَائِجَنَا وَتَشْفِيَ اَمْرَاضَنَا
وَتَحْفَظَنَا عَنْ جَمِيْعِ اٰفَاتِ الدِّيْنِيَّةِ وَالدُّنْيَوِيَّةِ وَتُدْخِلَنَا فِيْ
سِلْسِلَةِ سَادَاتِ الدُّنْيَا وَمُلُوْكِ الْاُخْرَوِيَّةِ رَبَّنَا اٰتِنَا فِي
الدُّنْيَا حَسَنَةً وَّفِي الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ رَبَّنَا
تَقَبَّلْ مِنَّا اِنَّكَ اَنْتَ السَّمِيْعُ الْعَلِيْمُ وَتُبْ عَلَيْنَا اِنَّكَ اَنْتَ
التَّوَّابُ الرَّحِيْمُ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِاِخْوَانِنَا الَّذِيْنَ سَبَقُوْنَا
بِالْاِيْمَانِ وَلَا تَجْعَلْ فِيْ قُلُوْبِنَا غِلًّا لِّلَّذِيْنَ اٰمَنُوْا رَبَّنَا اِنَّكَ
رَؤُفٌ رَّحِيْمٌ اٰمِيْنَ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ وَصَلَّى اللّٰهُ
تَعَالٰى وَسَلَّمَ عَلٰى خَيْرِ خَلْقِهٖ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
اَجْمَعِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ؛

تمت تمام



مَا رَنَّحَتْ عَذَبَاتِ الْبَانِ رِيْحُ صَبًا
وَاَطْرَبَ الْعِيْسَ حَادِي الْعِيْسِ بِالنَّغَمِ



## 160-வது பாட்டு.

தென்றற் காற்றானது வஞ்சிமரக் கிளைகளை அசைக்கும் காலமெல்லாம், ஒட்டகைப் பாகன் ஒட்டகைகளுக்கு இராகங்கள் கொண்டு மகிழ்விக்கும் காலமெல்லாம் (நபியின் மீது) கருணைமாரி பொழிந்து கொட்ட (உத்திரவிட்டருள்!).



وَالْاٰلِ وَالصَّحْبِ ثُمَّ التَّابِعِيْنَ لَهُمْ
اَهْلُ التُّقٰى وَالنَّقٰى وَالْحِلْمِ وَالْكَرَمِ



## 161-வது பாட்டு.

(பெருமானாரின்) கிளையினர் நேயர்கள் மீதும் பின்னர் அவர்களை பின்தொடர்ந்தோர் மீதும் (கருணைமாரி பொழியச் செய்தருள்.) அவர்களோ உள்ளச்சம், பரிசுத்தம், சாந்தம், வள்ளற்றன்மை படைத்தவர்களாவர்.



ثُمَّ الرِّضَا عَنْ اَبِيْ بَكْرٍ وَعَنْ عُمَرٍ
وَعَنْ عَلِيٍّ وَعَنْ عُثْمَانَ ذِى الْكَرَمِ



## 162-வது பாட்டு.

சங்கைமிக்கவர்களான அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) உதுமான் (ரலி), அலி (ரலி) ஆகியோரைத் தொட்டும் இறைவனின் திருப்தியுண்டாவதாக.

سَعْدٍ سَعِيْدٍ زُبَيْرٍ طَلْحَةٍ وَأَبِيْ
عُبَيْدَةٍ وَابْنِ عَوْفٍ عَاشِرِ الْكَرَمِ

## 163-வது பாட்டு.

மேன்மைக்குரியவர்களான ஸஃது (ரலி), ஸயீது (ரலி), ஜுபைர் (ரலி), தல்ஹா (ரலி), அபூஉபைதா (ரலி), (அப்துர் ரஹ்மான்) இப்னு ஔப் (ரலி) ஆகியோர்களைத் தொட்டும் (இறைவனின் திருப்தியுண்டாவதாக!)

وَاغْفِرْ لِنَاظِمِهَا وَاغْفِرْ لِقَارِئِهَا
لَقَدْ سَأَلْتُكَ يَا ذَا الْجُوْدِ وَالْكَرَمِ

## 164-வது பாட்டு.

(இறைவா!) இதை (புர்தாஹ்வை) இயற்றியவருக்கும் இதனை ஓதுபவருக்கும் குற்றங்களை மன்னித்தருள்வாயாக! கொடையும், மகாத்மியமும் உடையவா! மெய்யாக உன்னிடமே இறைஞ்சினேன்.



يَارَبِّ بِالْمُصْطَفَى بَلِّغْ مَقَاصِدَنَا
وَاسْمَحْ لَنَا مَا مَضَى يَا وَاسِعَ الْكَرَمِ



## 165-வது பாட்டு.

இரட்சகா! (முஹம்மத்) முஸ்தபா (ஸல்) அவர்களது பொருட்டால் எமது நன்நோக்கங்களைச் சித்தியடையச் செய்வாயாக! வள்ளற்றன்மையில் விசாலத் தன்மையுடையவனே! சென்றவை (கள்ளன பாபங்)களை பராமுகமாக (மன்னித்து) விட்டுவிடுவாயாக!

மறுமையில் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களது 'ஷபா அத்தே குப்ரு'வுக்குப் பிறகு இறைவனிடம் அனுமதி பெற்ற மற்றவர்கள் 'ஷபா அத்'துச் செய்து; இறைவன் பாபிகளை மன்னிக்கும்போது ஏற்படும் நிலையை ஆசிரியர் இங்கு விவரிக்கிறார்.

குற்றத்தையுணர்ந்து மன்னிப்புக் கோருவோர்
இறைவனின் கருணைக்குள்ளாகின்றனர்.

"எனது கோபத்தை எனது கருணை மிஞ்சிவிட்டது"

என்று இறைவன் கூறி இருப்பதாக ஹதீது குதுஸியில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் தனக்கு இணை வைப்பதைத் தவிர்த்து மற்றைய பாவங்களைத் தனக்கு இஷ்டமானவர்களுக்கு அல்லாஹ் திட்டமாக மன்னிப்பான் என்பதாகத் திருகுர்ஆனில் கூறப்பட்டிருக்கிறது. இது அவனிடம் தௌபாச் செய்யாமல் தங்களது பாபச் செயல்களிலேயே ஸ்திரமாக இருந்து மரித்தவர்களுக்குத்தான் இந்நிலை. இவ்வுலகிலேயே அவனிடம் மன்னிப்புக் கேட்டால் அம்மன்னிப்புக் கோரிக்கை திரிகரண சுத்தியுடன் கூடியதாக இருக்குமாயின் அதனை ஏற்று மன்னிக்க இறைவன் தயாராக இருக்கிறான். ஆகவே ஆசிரியப் பெரியார், கடந்த காலத்தில் தம்மால் நிகழ்ந்த பாபச் செயல்களை நினைவு கூர்ந்து பெருமானார் (ஸல்) அவர்களது ஷபாஅத்தையும் கேட்டு, தம்முடைய இச் செய்யுட்களிலேயே இறைவனிடம் மன்னிப்புக் கோருவதால், தம்மையே நோக்கித் தேற்றிக் கொள்கிறார். அவனது மன்னிப்புச் சுரக்குமாயின் பாவம் எம்மாத்திரம், என்பதாகத் தெரிவித்து, இறைவனது கருணையை நிராசை கொள்ளவேண்டாம் என்றும் "அல்லாஹ்வின் கருணையைவிட்டு நிராசை கொள்ளாதீர்கள்" என்று திருகுர்ஆன் கட்டளையையும் இங்கு சமிக்ஞை செய்து தேற்றுகிறார்.

## دعاء

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَبْدِكَ وَحَبِيْبِكَ وَاَمِيْنِكَ وَرَسُوْلِكَ
النَّبِيِّ الْاُمِّيِّ الْعَرَبِيِّ الْحَرَمِيِّ وَعَلٰى اٰلِهٖ وَاَزْوَاجِهٖ وَذُرِّيَّاتِهٖ
وَاَهْلِ بَيْتِهٖ وَبَارِكْ وَسَلِّمْ

வஸல்லல்லாஹு அலா ஸய்யிதினா முஹம்மதின்
வ ஆலிஹி வ ஸஹ்பிஹி வஸல்லம்,
வல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன். ஆமீன்.

## களிதத்துல் புர்தாஹ்.



## இரண்டாம் பிரிவு.

# பொருளடக்கம்

| வரிசை | விஷயம் | பக்கம் |
|---|---|---|


## மூன்றும் பிரிவு.

| | | |
|---|---|---|

# பொருளடக்கம்

# பொருளடக்கம்



## ஆறும் பிரிவு.

### திருகுர்ஆனின் சிறப்பு.



## ஏழாவது பிரிவு.

# பொருளடக்கம்

| வரிசை | விஷயம் | பக்கம் |
|---|---|---|

## எட்டாவது பிரிவு.

# பொருளடக்கம்

— 6 —